ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்கிரஹம் 2

"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்"

21/5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-२३

॥ श्रीः ॥







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

## 23

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शङ्करभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२३

## सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः

(द्वितीयः अंशः)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–23

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்

(இரண்டாம் பகுதி)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1968



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் இது 28-வது மலர் : இதில் ஸர்வ வேதாந்தஸித்தாந்த ஸாரஸங்கிரஹத்தின் இரண்டாவது பாகம் (211வது சுலோகம் முதல் 429-வது சுலோகம் வரை) வழக்கம்போல் தமிழில் பதவுரை கருத்துரைகளுடன் வெளிவந்துள்ளது. இந்த கிரந்தமாலாவில் வெளிவருபவைகளில் பலவற்றிற்கு தமிழுரை எழுதியுள்ள ஸ்ரீ ஞானானந்த பாரதீஸ்வாமிகளும், ஸ்ரீ சங்கர கிருபா உதவி ஆசிரியர் ஸ்ரீ K. S. வெங்கடராமசாஸ்திரிகளும் இந்த ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம் முழுவதற்கும் தமிழில் பதவுரையும் விசேஷக் கருத்துரையும் எழுதி உதவியிருக்கிறார்கள். ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகளுக்கு நம் ஸமிதியின் சார்பில் கிருதக்ஞதா நிவேதனபுரஸ்ஸர மான வந்தனங்களை ஸமர்ப்பணம் செய்கின்றேன்.

ஸாதன சதுஷ்டயத்தில் அடங்கிய சமாதிஷட்கத்தில் உபரதிவரை முதல் பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. இதில் மீதியுள்ள சிரத்தையும் ஸமாதானமும் முமுக்ஷுத்வமும் நிரூபிக்கப்பட்டு பின்னர் குருவின் லக்ஷணம், அவரது மகிமை அவரைத்தேடியடைய வேண்டிய முறை இவற்றைக்கூறி சிஷ்யனின் கேள்வியையும் குருவின் உபதேசத்தையும் விஸ்தாரமாக வர்ணிக்கிறார்.

ஸமஷ்டிவியஷ்டிரூபமாக அத்யாரோபத்தைக்கூற ஆரம்பித்து, காரண சரீரம், ஸூக்ஷ்மசரீரம், ஆனந்தமய, விக்ஞானமய மனோமய, பிராணமயகோசங்கள் இவை ஏற்படும் விதத்தை விரிவாக வர்ணித்து ஆத்மா நிர்லேபன் என்பதையும் காட்டுகிறார்.

**K. V. சுப்பரத்னம் அய்யர்,**
*பொதுக்காரியதர்சி*
*அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி*


விஷயாநுக்ரமணிகை

**சிரத்தை :—**

*(அ) சமாதிஷட்கத்தில் அடங்கிய 6வது அம்சமான சிரத்தை என்பதைப்பற்றி சுருக்கமாக 8 சுலோகங்களில் விளக்குகிறார் :—*

**गुरुवेदान्तवाक्येषु बुद्धिर्या निश्चयात्मिका ।**
**सत्यमित्येव सा श्रद्धा निदानं मुक्तिसिद्धये ॥ २११ ॥**

*குருவேதாந்தவாக்யேஷு புத்திர் யா நிச்சயாத்மிகா ।*
*ஸத்யமித்யேவ ஸா ச்ரத்தா நிதாநம் முக்திஸித்தயே ॥*

**गुरुवेदान्तवाक्येषु**-குருவின் வார்த்தைகளிலும் உபநிஷத் வாக்யங்களிலும், **सत्यमेव**-ஸத்யம்தான், **इति**-என்ற, **निश्चयात्मिका**-உறுதியான, **या बुद्धिः**-எந்த எண்ணமுண்டோ, **सा**-அது, **मुक्तिसिद्धये**-முக்திகிடைப்பதன் பொருட்டு, **निदानं**-காரணமான, **श्रद्धा**-சிரத்தையாகும்.

*குரு உபதேசிக்கும் வாக்கியங்களிலும் உபநிஷத் வாக்கியங்களிலும் ஸத்யம்தான் என்ற நிச்சயரூபமான எண்ணம்தான் சிரத்தை என்பது. இது மோக்ஷம் ஸித்திப்பதற்குக் காரணமாயுள்ளது.* *(211)*

**श्रद्धावतामेव सतां पुमर्थः समीरितः सिध्यति नेतरेषाम् ।**
**उक्तं सुसूक्ष्मं परमार्थतत्त्वं श्रद्धत्स्व सोम्येति च वक्ति वेदः ॥ २१२ ॥**

*ச்ரத்தாவதாமேவ ஸதாம் புமர்த்த:*
*ஸமீரித: ஸித்யதி நேதரேஷாம் ।*
*உக்தம் ஸுஸூக்ஷ்மம் பரமார்த்ததத்வம்*
*ச்ரத்தத்ஸ்வ ஸோம்யேதி ச வக்தி வேத: ॥*

**श्रद्धावतां**-சிரத்தையுடன் கூடிய, **सतामेव**-ஸாதுக்களுக்குத்தான், **समीरितः**-சாஸ்திரத்தில் கூறப்பட்ட, **पुमर्थः**-புருஷார்த்தம், **सिध्यति**-ஸித்திக்கும், **इतरेषां**-மற்றவர்களுக்கு (சிரத்தையில்லாதவர்களுக்கு) **न**-ஸித்திக்காது, **उक्तं**-உபதேசிக்கப்பட்ட, **परमार्थतत्त्वं**-ப்ரஹ்மதத்வம், **सुसूक्ष्मं**-மிகவும ஸூக்ஷ்மமானது, **सोम्य**-ஸோம்யா! **श्रद्धत्स्व**-நம்பு, **इति**-என்று, **वेदश्च**-வேதமும், **वक्ति**-சொல்கிறது.

J. xxiii-1

சிரத்தையுள்ள ஸாதுக்களுக்குத்தான் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற புருஷார்த்தம் ஸித்திக்கும். மற்றவர்களுக்கு ஸித்திக்காது. சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட பிரஹ்ம தத்வம் மிகவும் ஸூக்ஷ்மமானது. "ஸோம்ய, நம்பு" என்று சாந்தோக்ய உபநிஷத்தும் சிரத்தையைப்பற்றிச் சொல்கிறது.

**श्रद्धाविहीनस्य तु न प्रवृत्तिः प्रवृत्तिशून्यस्य न साध्यसिद्धिः ।**
**अश्रद्धयैवाभिहताश्च सर्वे मज्जन्ति संसारमहासमुद्रे ॥ २१३ ॥**

*ச்ரத்தா விஹீநஸ்ய து ந ப்ரவ்ருத்தி:*
*ப்ரவ்ருத்திசூந்யஸ்ய ந ஸாத்யஸித்தி: ।*
*அச்ரத்தயைவாபிஹதாச்ச ஸர்வே*
*மஜ்ஜந்தி ஸம்ஸாரமஹாஸமுத்ரே ॥*

**श्रद्धाविहीनस्य तु**-சிரத்தை இல்லாதவனுக்கோவெனில், **न प्रवृत्तिः**-ப்ரவ்ருத்தி ஏற்படாது, **प्रवृत्तिशून्यस्य**-ப்ரவ்ருத்தி இல்லாதவனுக்கு, **न साध्यसिद्धिः**-ஸாதிக்கவேண்டிய காரியம் நிறைவேறாது, **सर्वे च**-எல்லோரும், **अश्रद्धयैव**-அச்ரத்தையினாலேயே, **अभिहताः**-அடிபட்டவர்களாக, **संसारमहासमुद्रे**-ஸம்ஸாரமென்னும் பெரிய கடலில், **मज्जन्ति**-மூழ்குகிறார்கள்.

சிரத்தை (நம்பிக்கை) இல்லாதவன் காரியத்தில் பிரவர்த்திக்க மாட்டான். காரியம் செய்யாதவன் அதன் பலனை அடைய மாட்டான். ஸம்ஸாரஸாகரத்தைக் கடப்பதற்கு ஸாதனங்கள் இருந்தபோதிலும் இந்த ஸாதனத்தால் பலன் ஏற்படும் என்ற நம்பிக்கை இல்லாததால்தான் உலகில் எல்லாரும் தாண்ட முடியாமல் ஸம்ஸாரக் கடலிலேயே மூழ்கிறார்கள். (213)

**दैवे च वेदे च गुरौ च मन्त्रे तीर्थे महात्मन्यपि भेषजे च ।**
**श्रद्धा भवत्यस्य यथा यथान्तः तथा तथा सिद्धिरुदेति पुंसाम् ॥ २१४ ॥**

*தைவே ச வேதே ச குரௌ ச மந்த்ரே*
*தீர்த்தே மஹாத்மந்யபி பேஷஜே ச ।*
*ச்ரத்தா பவத்யஸ்ய யதா யதாऽந்த:*
*ததா ததா ஸித்திருதேதி பும்ஸாம் ॥*

**दैवे च** - தைவத்தினிடமும், **वेदे च** - வேதத்திலும், **गुरौ च**- குருவினிடமும், **मन्त्रे** - மந்திரத்திலும், **तीर्थे** - புண்யதீர்த்தத்திலும், **महात्मन्यपि**-பெரியோரிடமும், **भेषजे च**-மருந்திலும், **अस्य**-இவனுக்கு, **अन्तः**-மனதில், **यथा यथा**-எவ்வளவுக்கெவ்வளவு, **श्रद्धा**-சிரத்தையானது, **भवति**-ஏற்படுகிறதோ, **तथा तथा**-அவ்வளவுக்கவ்வளவு, **पुंसां**-மனிதர்களுக்கு, **सिद्धिः**-காரியஸித்தி, **उदेति**-உண்டாகிறது.

*தைவத்தினிடத்திலும், வேதத்திலும், குருவிடத்திலும், மந்திரத்திலும் புண்ய தீர்த்தத்திலும், பெரியோரிடத்திலும், மருந்திலும், மனிதனுக்கு எவ்வளவுக்கெவ்வளவு மனஸில் சிரத்தை இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு மனிதர்களுக்கு கார்யஸித்தியானது ஏற்படும். உலகில் எந்தக்காரியம் நிறைவேறுவதற்கும் முதலில் சிரத்தை அவசியம் இருக்கவேண்டும். (214)*

**अस्तीत्येवोपलब्धव्यं वस्तु सद्भावनिश्चयात् ।**
**सद्भावनिश्चयस्तस्य श्रद्धया शास्त्रसिद्धया ॥ २१५ ॥**

*அஸ்தீத்யேவோபலப்தவ்யம் வஸ்து ஸத்பாவநிச்சயாத் ।*
*ஸத்பாவநிச்சயஸ்தஸ்ய ச்ரத்தயா சாஸ்த்ரஸித்தயா ॥*

**सद्भावनिश्चयात्**-இருக்கும் தன்மை உறுதியானால் தான், **वस्तु**-வஸ்து, **अस्तीत्येव**-இருக்கிறது என்றே, **उपलब्धव्यं**-அறியத்தக்கது, **शास्त्रसिद्धया**-சாஸ்திரத்தில் ஏற்பட்ட, **श्रद्धया**-சிரத்தையால், **तस्य**-அந்தவஸ்துவின், **सद्भावनिश्चयः**-இருக்கும் தன்மையின் உறுதி ஏற்படும்.

*ப்ரஹ்மம் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது. ஆகையால் நாம் அதை நேரில் பார்த்து அது இருப்பதை தெரிந்துகொள்ள முடியாது. ஆனாலும் உபநிஷத்துக்கள் ப்ரஹ்மத்தைப்பற்றி விரிவாகப் பேசுகின்றன. இந்த உபநிஷத் வாக்யங்களில் ஒருவனுக்கு நம்பிக்கை ஏற்படுமேயானால் அவன் ஸந்தேஹமில்லாமல் ப்ரஹ்மம் இருப்பதை உறுதிப்படுத்திக்கொள்வான். பிறகு சிரவணாதிகளால் ஸத்ரூபமாக ப்ரஹ்மத்தை நேரில் தெரிந்து கொள்வான். (215)*

**तस्मात् श्रद्धा सुसंपाद्या गुरुवेदान्तवाक्ययोः ।**
**मुमुक्षोः श्रद्दधानस्य फलं सिध्यति नान्यथा ॥ २१६ ॥**

*தஸ்மாத் ச்ரத்தா ஸுஸம்பாத்யா குருவேதாந்த*
*வாக்யயோ:* ।
*முமுக்ஷோ: ச்ரத்ததாநஸ்ய பலம் ஸித்யதி நாந்யதா* ॥

**तस्मात्**–ஆகையால், **गुरुवेदान्तवाक्ययोः**–குருவின் வார்த்தையிலும் உபநிஷத்வாக்யங்களிலும், **श्रद्धा**–சிரத்தையானது, **सुसंपाद्या**–நன்கு ஸம்பாதிக்கத்தக்கது, **श्रद्दधानस्य**–சிரத்தையுள்ள, **मुमुक्षोः**–முமுக்ஷுவுக்கு, **फलं**–பலன், **सिध्यति**–கிடைக்கும், **अन्यथा**–வேறுவிதமாக, **न**–கிடைக்காது.

*ஆகையால் குருவின் வாக்யத்திலும் வேதாந்த வாக்யத்திலும் சிரத்தை நன்கு ஸம்பாதிக்கப்படவேண்டும். மோக்ஷத்தில் ஆசையுள்ளபோதிலும் சிரத்தை இருந்தால் தான் பலன் ஸித்திக்கும் சிரத்தை இல்லாமல் போனால் பலன் கிடைக்காது.* (216)

**यथार्थवादिता पुंसां श्रद्धाजननकारणम् ।**
**वेदस्येश्वरवाक्यत्वात् यथार्थत्वे न संशयः ॥ २१७ ॥**

**मुक्तस्येश्वररूपत्वात् गुरोर्वागपि तादृशी ।**
**तस्मात् तद्वाक्ययोः श्रद्धा सतां सिध्यति धीमताम् ॥ २१८ ॥**

*யதார்த்தவாதிதா பும்ஸாம் ச்ரத்தாஜநநகாரணம்* ।
*வேதஸ்யேச்வரவாக்யத்வாத் யதார்த்தத்வே*
*ந ஸம்சய:* ॥

*முக்தஸ்யேச்வரரூபத்வாத் குரோர் வாகபி தாத்ருசீ* ।
*தஸ்மாத் தத்வாக்யயோ: ச்ரத்தா ஸதாம்*
*ஸித்யதி தீமதாம்* ॥

**यथार्थवादिता**–உண்மையே பேசும் தன்மை, **पुंसां**–மனிதர்களுக்கு, **श्रद्धाजननकारणम्**–சிரத்தை உண்டாவதற்குக் காரணம். **वेदस्य**–வேதம், **ईश्वरवाक्यत्वात्**–ஈசுவரனின் வாக்யமானதால், **यथार्थत्वे**–உண்மைத்தன்மையில், **न संशयः**–ஸந்தேஹமில்லை.

**मुक्तस्य**–முக்தன், **ईश्वररूपत्वात्**–ஈசுவர ஸ்வரூபமாயிருப்பதால், **गुरोः**–குருவின், **वागपि**–வார்த்தையும், **तादृशी**–அவ்விதமானது (உண்மையானது), **तस्मात्**–ஆகையால், **तद्वाक्ययोः**–அந்த குருவேதாந்த

வாக்கியங்களில், **श्रद्धा**-சிரத்தையானது, **धीमतां सतां** - புத்தியுள்ள ஸாதுக்களுக்கு, **सिध्यति**-உண்டாகிறது.

*விஷயம் எப்படியிருக்கிறதோ அப்படியே சொல்லும் தன்மை தான் மனிதர்களுக்கு சிரத்தையை உண்டுபண்ணக்காரணமாகும். வேதம் ஈசுவரனுடைய வாக்கியமாயிருப்பதால் உள்ளபடி தான் சொல்லும் என்கிற அம்சத்தில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை.*

*ஸம்ஸாரபந்தத்திலிருந்து முக்தியடைந்திருக்கும் குருவும் ஈசுவர ஸ்வரூபமாகவேயிருப்பதால் அவருடைய வார்த்தையும் அதே மாதிரி ஸத்யம்தான். ஆகையால் குரு, வேதாந்தம் இருவர் வாக்யங்களிலும் தெளிந்த புத்தியுடைய ஸாதுக்களுக்கு சிரத்தை ஏற்படுகிறது. ஒரு மனிதன் உண்மையையே பேசி வருவானாகில் அவன் வார்த்தையில் ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும். பொய் பேசும் ஸ்வபாவமுள்ளவன் வார்த்தையை யாரும் நம்ப மாட்டார்கள். உண்மையே பேசி வருபவன்கூட ஏதாவது ஒரு சமயம் தன் நலத்தை உத்தேசித்து பொய் பேசும்படி நேரிடலாம். ஆனதால் மனிதனின் வார்த்தை எல்லாக்காலத்திலும் ஸத்தியம் தான் என்று தீர்மானிக்கமுடியாது. வேதமோ ஈசுவர வாக்யம். அவாப்த ஸமஸ்த காமனான ஈசுவரனின் வாக்யம் எப்பொழுதும் உண்மைதான். ஞானியான குருவும் ஈசுவரஸ்வரூபமாகி விட்ட படியால் குருவசனமும் ஈசுவர வாக்யம்தான். ஆகவே புத்திமான்களான ஸாதுக்கள் வேதவாக்கியத்திலும் குருவார்த்தையிலும் சிரத்தையே கொள்வார்கள்.* (217-218)

**ஸமாதானம் :—**

*(அ) இதுவரை சிரத்தையைப்பற்றி சொல்லிவிட்டு இனி ஸமாதானம் என்பதின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார் :—*

**श्रुत्युक्तार्थावगाहाय विदुषा ज्ञेयवस्तुनि ।**
**चित्तस्य सम्यगाधानं समाधानमितीर्यते ॥ २१९ ॥**

*ச்ருத்யுக்தார்த்தாவகாஹாய விதுஷா ஜ்ஞேயவஸ்துனி ।*
*சித்தஸ்ய ஸம்யகாதானம் ஸமாதானமிதீர்யதே ॥*

**श्रुत्युक्तार्थावगाहाय**-உபநிஷத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை நன்கு தெரிந்துகொள்வதற்காக, **विदुषा**-புத்திமானால், **ज्ञेयवस्तुनि**-அறியவேண்டிய விஷயத்தில், **चित्तस्य**-மனதை, **सम्यगाधानं**-நன்கு

நிலை நிறுத்துவது, **समाधानं**–ஸமாதானம், **इति** – என்று, **ईर्यते**–
சொல்லப்படுகிறது.

*உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தை நன்கு அறிந்து கொள்வதற்காக அறிய வேண்டிய வஸ்துவினிடத்தில் மனதைச் செலுத்தி அதிலேயே நன்றாக நிறுத்தி வைப்பது ஸமாதானம் என்று சொல்லப்படுகிறது. உலகில் புதிதாக எந்த ஒரு விஷயத்தையும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் அந்த ஸமயத்தில் மனதை வேறு இடத்தில் போக விடாமல் தடுத்து அது ஒன்றிலேயே ஈடுபடுத்த வேண்டும். அப்பொழுது தான் நன்கு மனதில் பதியும் இப்படியிருக்க பரமஸூக்ஷ்மமான ப்ரஹ்ம வஸ்துவைப்பற்றிக் கேட்பானேன்? (219)*

**चित्तस्य साध्यैकपरत्वमेव पुमर्थसिद्धेर्नियमेन कारणम् ।**
**नैवान्यथा सिध्यति साध्यमीषन्मनःप्रमादे विफलः प्रयत्नः ॥२२०॥**

*சித்தஸ்ய ஸாத்யைகபரத்வமேவ*
*புமர்த்தஸித்தேர் நியமேந காரணம் ।*
*நைவாந்யதா ஸித்யதி ஸாத்யமீஷத்*
*மந: ப்ரமாதே விபல: ப்ரயத்ந: ॥*

**चित्तस्य** – மனதிற்கு, **साध्यैकपरत्वमेव** – ஸாதிக்கவேண்டிய ஒன்றிலேயே ஈடுபட்டிருக்கும் தன்மைதான், **पुमर्थसिद्धेः**–புருஷார்த்த ஸித்திக்கு, **नियमेन कारणम्**–நிச்சயமாக காரணம், **साध्यं**-ஸாதிக்க வேண்டியது, **अन्यथा**–இதைத்தவிற வேறு விதமாக, **नैव सिध्यति**–ஒரு போதும் ஸித்திக்காது, **ईषन्मनःप्रमादे**–மனதிற்குக் கொஞ்சம் கவனக்குறைவு ஏற்பட்டாலும், **प्रयत्नः**–முயற்சி, **विफलः**–வீணாகிவிடும்.

*புருஷார்த்தம் ஸித்திப்பதற்கு நியமமாக உள்ள காரணம் ஸாதிக்க வேண்டிய விஷயம் ஒன்றிலேயே மனம் குறிப்பாய் ஈடுபட்டிருப்பது தான் வேறு விதமிருந்தால் ஸாதிக்கப்பட வேண்டியது ஸித்திக்கவே ஸித்திக்காது. கொஞ்சம் மனஸ் பிசகினாலும் பிரயத்தினம் வீண் தான். (220)*

**चित्तं च दृष्टिं करणं तथाऽन्यदेकत्र बध्नाति हि लक्ष्यभेत्ता ।**
**किंचित्प्रमादे सति लक्ष्यभेत्तुः बाणप्रयोगो विफलो यथा तथा ॥२२१॥**

*சித்தம் ச த்ருஷ்டிம் கரணம் ததாऽந்யத்*
*ஏகத்ர பத்நாதி ஹி லக்ஷ்யபேத்தா ।*
*கிஞ்சித் ப்ரமாதே ஸதி லக்ஷ்யபேத்து:*
*பாணப்ரயோகோ விபலோ யதா ததா ॥*

**लक्ष्यभेत्ता**–குறிபார்த்து அடிப்பவன், **चित्तं च**–மனதையும், **दृष्टिं**–பார்வையையும், **तथा**–அப்படியே, **अन्यत्**–வேறு, **करणं**–கருவியையும், **एकत्र**–ஒரே இடத்தில் (குறியிலேயே), **बध्नाति हि**–கட்டுப்படுத்துகிறானல்லவா! **किंचित्प्रमादे सति**-கொஞ்சம் கவனக் குறைவு ஏற்பட்ட பொழுதும், **लक्ष्यभेत्तुः**–குறியை அடிப்பவனின், **बाणप्रयोगः**–பாணப்ரயோகம், **यथा**–எப்படி, **विफलः**-வீணாகுமோ, **तथा**–அப்படி.

*குறி வைத்துள்ளதை அடிப்பவன் தன் மனஸ், பார்வை, மற்ற கருவி எல்லாவற்றையும் ஒரே இடத்தில் ஈடு படுத்து கிறானல்லவா? குறியை அடிப்பவனுக்கு கொஞ்சம் பிசகு ஏற்பட்டு விட்டாலும் அம்பை பிரயோகித்தது வீணாகப்போய் விடுகிறது. அதாவது, அம்பு குறியை அடிப்பதில்லை. இதுபோல் மனஸ் ஸமாதானமில்லாவிட்டால் ப்ரஹ்ம வஸ்துவை அறிந்துகொள்ள முடியாது.* **(221)**

**सिद्धेश्चित्तसमाधानं असाधारणकारणम् ।**
**यतस्ततो मुमुक्षूणां भवितव्यं सदाऽमुना ॥ २२२ ॥**

*ஸித்தேச்சித்தஸமாதாநம் அஸாதாரண காரணம் ।*
*யதஸ் ததோ முமுக்ஷூணாம் பவிதவ்யம் ஸதாऽமுநா ॥*

**यतः**–எதனால், **सिद्धेः**-காரியஸித்திக்கு, **चित्तसमाधानं**–மனதின் ஒரு நிலையானது, **असाधारणकारणं**–முக்யமான காரணமோ, **ततः**–அதனால், **मुमुक्षूणां**–மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களுக்கு, **सदा**–எப்பொழுதும், **अमुना भवितव्यम्**–இது (சித்தஸமாதானம்) இருக்க வேண்டும்.

*சித்தத்தின் ஸமாதானம் பலன் ஸித்திப்பதற்கு இன்றியமை யாத காரணமாக இருக்கிறபடியால், மோக்ஷ இச்சையுள்ளவர் களுக்கு இது எப்பொழுதும் இருக்க வேண்டும்.* **(222)**

अत्यन्ततीव्रवैराग्यं फललिप्सा महत्तरा ।
तदेतदुभयं विद्यात् समाधानस्य कारणम् ॥ २२३ ॥

அத்யந்ததீவ்ரவைராக்யம் பலலிப்ஸா மஹத்தரா ।
ததேததுபயம் வித்யாத் ஸமாதானஸ்ய காரணம் ॥

**अत्यन्ततीव्रवैराग्यं**-மிகவும் தீவ்ரமான வைராக்யமும், **महत्तरा**-மிகவும் அதிகமான, **फललिप्सा**-பலனை அடைவதில் ஆவலும், **तदेतत् उभयं**-அந்த இவ்விரண்டும், **समाधानस्य**-சித்த ஸமாதானத்திற்கு, **कारणं**-காரணமாக, **विद्यात्**-அறியத்தக்கது.

*எல்லை கடந்த தீவிரமான வைராக்யம், பலனை யடைய வேண்டு மென்ற மிக அதிகமான ஆவல், ஆக இவ்விரண்டும் சித்த ஸமாதானத்திற்குக் காரணமாகும் (223)*

*(அ) இவ்விதமாக சமாதி ஷட்க மென்ற 3வது ஸாதனத்தில் அடங்கிய சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, ஸமாதானம், இவைகளின் லக்ஷணத்தையும் அவசியத் தன்மையையும் தனித் தனியே எடுத்துக் காட்டி விட்டு, இப்பொழுது இவ்வாறும் சேர்ந்து மோக்ஷத்திற்குக் கொண்டு விடக்கூடிய ஸாதனங்களுக்குள் அந்தரங்கமான ஸாதனமாகு மென்பதை 3 சுலோகங்களால் சொல்கிறார் :—*

बहिरङ्गं श्रुतिः प्राह ब्रह्मचर्यादि मुक्तये ।
शमादिषट्कमेवैतदन्तरङ्गं विदुर्बुधाः ॥ २२४ ॥

பஹிரங்கம் ச்ருதி: ப்ராஹ ப்ரஹ்மசர்யாதி முக்தயே ।
ஶமாதிஷட்கமேவைதத் அந்தரங்கம் விதுர் புதா: ॥

**ब्रह्मचर्यादि**-ப்ரஹ்மசர்யம் முதலானவற்றை, **मुक्तये**-முக்தியின் பொருட்டு, **बहिरङ्गं**-வெளிப்படையான ஸாதனமாக, **श्रुतिः**-வேதம், **प्राह**-சொல்கிறது. **एतत्**-இந்த, **शमादिषट्कमेव**-சமம் முதலான ஆறையே, **अन्तरङ्गं**-அந்தரங்க ஸாதனமாக, **बुधाः**-வித்வான்கள், **विदुः**-தெரிந்திருக்கிறார்கள்.

*பிரஹ்மசர்யம் முதலியது (105, 106, 107 சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கும் அம்சங்கள்) மோக்ஷத்திற்கு வெளி அங்க*

மென்று வேதம் சொல்கிறது. இந்த சமம் முதலான ஆறுதான் மோக்ஷத்திற்கு அந்தரங்கம் என்று அறிவாளிகள் அறிந்திருக்கிறார்கள். (224)

अन्तरङ्गं हि बलवत् बहिरङ्गात् यतस्ततः ।
शमादिषट्कं जिज्ञासोः अवश्यं भाव्यमान्तरम् ॥ २२५ ॥

*அந்தரங்கம் ஹி பலவத் பஹிரங்காத் யதஸ் தத: ।*
*ஶமாதிஷட்கம் ஜிஜ்ஞாஸோ: அவச்யம் பாவ்யமாந்தரம் ॥*

**यतः**–எதனால், **बहिरङ्गात्** –பஹிரங்கத்தைக்காட்டிலும், **अन्तरङ्गं**–அந்தரங்கம், **बलवत्** –பலமுள்ளதோ, **ततः**–ஆகையால், **आन्तरं**–அந்தரங்க ஸாதனமான, **शमादिषट्कं**–சமம் முதலான ஆறும், **जिज्ञासोः**–ப்ரஹ்மத்தை அறியவிரும்புபவனுக்கு, **अवश्यं भाव्यं**-கட்டாயம் இருக்க வேண்டும்.

*அந்தரங்கம் வெளியங்கத்தை விட பலமுள்ளது என்பது பிரஸித்தமானதினால் பிரஹ்மத்தையறிய இச்சைப் படுபவருக்கு உள் ஸாதனமான சமாதி ஆறும் அவசியம் இருந்து தீர வேண்டும்* (225)

अन्तरङ्गविहीनस्य कृतश्रवणकोटयः ।
न फलन्ति यथा योद्धुः अधीरस्यास्त्रसंपदः ॥ २२६ ॥

*அந்தரங்கவிஹீநஸ்ய க்ருதச்ரவணகோடய: ।*
*ந பலந்தி யதா யோத்து: அதீரஸ்யாஸ்த்ர ஸம்பத: ॥*

**अधीरस्य**–தைர்யமில்லாத, **योद्धुः**–யுத்தம் செய்கிறவனுக்கு, **यथा अस्त्रसंपदः**–ஏராளமான அஸ்திரங்கள் எப்படியோ (அப்படியே), **अन्तरङ्गविहीनस्य**–அந்தரங்க ஸாதனமில்லாதவனுக்கு, **कृतश्रवणकोटयः**-கோடித்தடவை செய்யப்பட்ட சிரவணங்களும், **न फलन्ति**–பலனைத்தருகிறதில்லை.

*மனதில் தைர்ய மில்லாமல் யுத்தம் செய்கிறவனுக்கு அஸ்திர ஸம்பத்துக்கள் (ஏராளமாக ஆயுதங்கள் இருந்தும்) எப்படி பிரயோஜனப்படாதோ, அப்படியேதான் சமம் முதலான உள் ஸாதனங்களில்லாதவனுக்கு கோடி முறை வேதாந்த சிரவணம் செய்தாலும் பிரயோஜனப்படாது.* (226)

முமுக்ஷுத்வம் :—

(அ) வேதாந்த விசாரத்தில் அதிகாரம் பெற்றவனுக்கு அவசியம் இருக்க வேண்டிய நான்கு ஸாதனங்களில் விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், இம்மூன்றையும் நிர்வசனம் செய்து விட்டு, நான்காவது ஸாதனமாகிய முமுக்ஷுத்வம், (மோக்ஷத்தில் இச்சை) என்பதைப் பற்றி 227 முதல் 251 முடிய 25 ச்லோகங் களில் எடுத்துச் சொல்கிறார் :—

ब्रह्मात्मैकत्वविज्ञानात् यद्विद्वान् मोक्तुमिच्छति ।
संसारपाशबन्धं तत् मुमुक्षुत्वं निगद्यते ॥ २२७॥

ப்ரஹ்மாத்மைகத்வவிக்ஞாநாத் யத் வித்வான் மோக்துமிச்சதி ।
ஸம்ஸாரபாஶபந்தம் தன் முமுக்ஷுத்வம் நிகத்யதே ॥

**ब्रह्मात्मैकत्वविज्ञानात्**—ப்ரஹ்மமும் ஆத்மாவும், ஒன்று என்பதை அறிவதனால், **विद्वान्**-வித்வான், **संसारपाशबन्धं**-ஸம்ஸாரமென்னும் பாசக்கட்டை, **मोक्तुं**-அவிழ்த்துவிடுவதற்கு, **इच्छति यत्**-விரும்பு கிறான் என்பது எதுவோ, **तत्**--அது, **मुमुक्षुत्वं**-முமுக்ஷுத்வமாக, **निगद्यते**—சொல்லப்படுகிறது.

பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்ற ஞானத்தினால் வித்வான் 'ஸம்ஸாரமாகிற கயிற்றினால் ஏற்பட்டிருக்கும் கட்டி லிருந்து விடுபட விரும்புவது முமுக்ஷுத்வம், என்று சொல்லப் படுகிறது. (227)

साधनानां तु सर्वेषां मुमुक्षा मूलकारणम् ।
अनिच्छोः अप्रवृत्तस्य क्व श्रुतिः क्व नु तत्फलम् ॥ २२८ ॥

ஸாதநாநாம் து ஸர்வேஷாம் முமுக்ஷா மூலகாரணம் ।
அநிச்சோரப்ரவ்ருத்தஸ்ய க்வ ச்ருதி: க்வ நு தத்பலம் ॥

**सर्वेषां साधनानां**—எல்லா ஸாதனங்களுக்குள்ளும் **मुमुक्षा**-முமுக்ஷையானது, **मूलकारणम्**--ஆதிகாரணம், **अनिच्छोः**-இச்சை இல்லாதவனும், **अप्रवृत्तस्य**-பிரயத்னம் செய்யாதவனுமுள்ள மனித னுக்கு, **क्व श्रुतिः**—சிரவணம் எங்கே ? **तत्फलं नु क्व**—அதன் பலன்தான் எங்கே ?

எல்லா ஸாதனங்களுக்கும் இந்த முமுக்ஷயே மூலகாரணம். ஏனெனில் முக்தியில் ஆசையுள்ளவன் தான் அதன் ஸாதனமான சிரவணாதிகளைக் கைக்கொள்வான். அதன் மூலம் அவனுக்கு பலன் கிடைக்கும். மோக்ஷமடைவதில் ஒருவனுக்கு ஆசையே இல்லாவிட்டால் அவன் பிரயத்னம் செய்யமாட்டான். பலனும் கிடைக்காது. (228)

**तीव्रमध्यममन्दातिमन्दभेदात् चतुर्विधा ।**
**मुमुक्षा तत्प्रकारोऽपि कीर्त्यते श्रूयतां बुधैः ॥ २२९ ॥**

*தீவ்ர மத்யம மந்தாதி மந்தபேதாத் சதுர்விதா ।*
*முமுக்ஷா தத்ப்ரகாரோऽபி கீர்த்யதே ச்ரூயதாம் புதை: ॥*

**मुमुक्षा**-முமுக்ஷையானது, **तीव्र-मध्यम-मन्दाति-मन्दभेदात्** -தீவ்ரம், மத்யமம், மந்தம், அதிமந்தம் என்ற பேதத்தால், **चतुर्विधा**-நான்குவிதம், **तत्प्रकारोऽपि**-அதன் ப்ரகாரமும், **कीर्त्यते**-சொல்லப் படுகிறது. **बुधैः**-புத்திமான்களால், **श्रूयतां**-கேட்கப்படட்டும்.

அந்த முமுக்ஷை தீவிரம், மத்யமம், மந்தம், அதிமந்தம், என்று நான்கு விதமாகும். அவை பற்றி அடுத்த சுலோகங்களில் சொல்லப்படுகிறது. (229)

**तापैस्त्रिभिः नित्यमनेकरूपैः संतप्यमानः क्षुभितान्तरात्मा ।**
**परिग्रहं सर्वमनर्थबुद्ध्या जहाति सा तीव्रतरा मुमुक्षा ॥ २३० ॥**

*தாபைஸ்த்ரிபிர் நித்யமநேகரூபை:*
*ஸந்தப்யமாந: க்ஷுபிதாந்தராத்மா ।*
*பரிக்ரஹம் ஸர்வமநர்த்தபுத்த்யா*
*ஜஹாதி ஸா தீவ்ரதரா முமுக்ஷா ॥*

**अनेकरूपैः**-பலவிதமாக உள்ள, **त्रिभिः तापैः**-மூன்று தாபங்களால் **नित्यं**-எப்பொழுதும், **संतप्यमानः**-தபிக்கப்படுகிறவனாய், **क्षुभितान्तरात्मा**-கலக்கமடைந்த மனமுள்ளவனாய், **अनर्थबुद्ध्या**-துன்பம் தரும் என்ற எண்ணத்தால், **सर्वं परिग्रहं**-தன்னுடையதாக சேகரித்துக் கொண்ட எல்லா வஸ்துவையும், **जहाति**-விட்டுவிடுகிறான்., **सा**-அது, **तीव्रतरा**-மிகத்தீவ்ரமான, **मुमुक्षा**-முமுக்ஷையாகும்.

ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என தாபங்கள் மூன்றுவிதம். இவற்றில் ஒவ்வொன்றும் எத்தனையோ விதமாக மனிதனை எப்பொழுதும் துன்புறுத்துகிறது. இந்த தாபத்தைத் தாங்க மாட்டாமல் ஒருவன் மனம் சலங்கியவனாய், இதுவரை தன்னுடையதாக சேகரித்துள்ள எல்லா வஸ்துக்களும் தான் இந்த தாபத்திற்குக் காரணமென எண்ணி எப்பொழுது அவற்றை எல்லாம் த்யாகம் செய்து விடுகிறானோ அப்பொழுது அவனுக்கு தீவ்ரமான முமுக்ஷை இருப்பதாக தீர்மானிக்கலாம் அவனை மோக்ஷ வழியில் செல்வதை யாரும் தடுக்க முடியாது.

तापत्रयं तीव्रमवेक्ष्य वस्तु दृष्ट्वा कलत्रं तनयान् विहातुम् ।
मध्ये द्वयोः लोडनमात्मनो यत्सैषा मता माध्यमिकी मुमुक्षा ॥ २३१॥

தாபத்ரயம் தீவ்ரமவேக்ஷ்ய வஸ்து
த்ருஷ்ட்வா களத்ரம் தநயான் விஹாதும் ।
மத்யே த்வயோர் லோடநமாத்மநோ யத்
ஸைஷா மதா மாத்யமிகீ முமுக்ஷா ॥

**तापत्रयं**-மூன்று தாபமும், **तीव्रं**-கடுமையாயிருப்பதை, **अवेक्ष्य**-நன்கு கவனித்து, **वस्तु**-பொருளையும், **कलत्रं**-மனைவியையும், **तनयान्**-பிள்ளைகளையும், **विहातुं**-விடுவதற்கு, **दृष्ट्वा**-ஆலோசித்து, **द्वयोर्मध्ये**-இரண்டிற்கும் நடுவில், **आत्मनो लोडनं यत्**-மனது ஊசலாடுவது எதுவோ, **सा एषा**-அந்த இது, **माध्यमिकी मुमुक्षा**-மத்யமமுமுக்ஷையாக **मता**-கருதப்பட்டிருக்கிறது.

மூன்றுவித தாபங்களும் மிகக்கடுமையாக தன்னைத் துன்புறுத்தி வருவதை எண்ணிப் பார்க்கிறான். இந்தத் தாபங்களை விலக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றுகிறது. தன் மனைவி, தனயன், பொருள், இவையே தாபத்திற்குக் காரணம் என்று தோன்றி ஒருசமயம் இவைகளை தியாகம் செய்து விடலாமா என்றும் தோன்றுகிறது. ஆனால் முன் சுலோகத்தில் சொல்லப்பட்டவனுக்குப் போல் தைர்யமில்லாததால் தயங்குகிறான். இவ்வாறு ஸம்ஸார வாழ்க்கையில் விருப்பமுமில்லாமல் வெறுப்புமில்லாமல் நடுவில் மனம் ஊசலாடிக் கொண்டிருப்பது மத்யம முமுக்ஷையாகும். (231)

मोक्षस्य कालोऽस्ति किमद्य मे त्वरा भुक्त्वैव भोगान् कृतसर्वकार्यः ।
मुक्त्यै यतिष्येऽहमथेति बुद्धिरेषैव मन्दा कथिता मुमुक्षा ॥ २३२ ॥

*மோக்ஷஸ்ய காலோ஽ஸ்தி கிமத்ய மே த்வரா*
*புக்த்வைவ போகான் க்ருதஸர்வகார்ய: ।*
*முக்த்யை யதிஷ்யே஽ஹமதேதி புத்தி-*
*ரேஷைவ மந்தா கதிதா முமுக்ஷா ॥*

**मोक्षस्य**–மோக்ஷத்திற்கு, **कालः**–காலம், **अस्ति**–(பின்னால்) இருக்கிறது, **अद्य**–இப்பொழுது, **मे**–எனக்கு, **त्वरा किम्**–அவஸரம் ஏன் ? **कृतसर्वकार्यः**–எல்லா காரியங்களையும் செய்தவனாக, **भोगान्**–விஷய ஸுகங்களை, **भुक्त्वैव**–அனுபவித்துவிட்டுத்தான், **अथ**–பிறகு, **अहं**–நான், **मुक्त्यै**–முக்தியின் பொருட்டு, **यतिष्ये**–முயற்சிக்கப்போகிறேன், **इति**–என்ற **बुद्धिः**–எண்ணம் (எதுவோ), **एषैव**–இதுதான், **मन्दा**–மந்தமான, **मुमुक्षा**–முமுக்ஷையாக, **कथिता**–சொல்லப்பட்டிருக்கிறது.

*மோக்ஷமடைவதற்கு வேண்டிய முயற்சிகளை எல்லாம் ஆயுளின் கடைசி காலத்தில் தான் செய்ய வேண்டும். அதற்கு இப்போது என்ன அவஸரம்? எனக்கு என்ன வயதாகி விட்டதா! வாழ்க்கையில் கிடைக்கும் ஸுகங்களை யெல்லாம் நன்றாக அனுபவித்து விட்டு செய்ய வேண்டிய காரியங்களை யெல்லாம் பாக்கியன்னியில் பூர்த்தி செய்து விட்டு பின்னால் ஸாவகாசமாக ஒரு தொந்தரவுமில்லாமல் முக்திக்கு வேண்டிய பிரயத்னங்களைச் செய்தால் போதுமானது என்று நினைப்பது மந்தமான முமுக்ஷையாகும்.* **(232)**

मार्गे प्रयातुर्मणिलाभवन्मे लभ्येत मोक्षो यदि तर्हि धन्यः ।
इत्याशया मूढधियां मतिर्या सैषाऽतिमन्दाऽभिमता मुमुक्षा ॥ २३३ ॥

*மார்க்கே ப்ரயாதுர் மணிலாபவன்மே*
*லப்யேத மோக்ஷோ யதி தர்ஹி தன்ய: ।*
*இத்யாஶயா மூடதியாம் மதிர் யா*
*ஸைஷா஽திமந்தா஽பிமதா முமுக்ஷா ॥*

**मार्गे**–வழியில், **प्रयातुः**–செல்கிறவனுக்கு, **मणिलाभवत्**–ரத்னம் கிடைப்பதுபோல், **मे**–எனக்கு, **मोक्षः**–மோக்ஷம், **यदि लभ्येत**–கிடைக்

குமேயானால், **तर्हि**- அப்பொழுது, **धन्यः**-(நான்) அதிருஷ்டசாலி, **इत्याशया**-என்ற ஆசையோடு, **मूढधियां**-மூடபுத்தியுள்ளவர்களின், **या मतिः**-எந்த எண்ணமோ, **सा एषा**-அந்த இது, **अतिमन्दा**-மிகவும் மந்தமான, **मुमुक्षा**-முமுக்ஷுயாக, **अभिमता**-ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது.

*வேறு காரியமாக நடந்து செல்லும் அதிருஷ்டசாலியான ஒருவனுக்கு வழியில் திடீரென எதிர்பாராத விதத்தில் விலையுயர்ந்த ஒரு ரத்னம் கிடைப்பது போல நானும் முக்திக்காக ஒரு பிரயத்னமும் செய்யாமலேயே என்மனம் போனபடி உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் பொழுதே அதிருஷ்டவசமாக எனக்கும் முக்தி கிடைக்கட்டுமே. அதுவே போதும் என்று நினைப்பது அதிமந்தமான முமுக்ஷையாகும் இந்த நாலு பிரிவினருக்கும் மோக்ஷமடைய வேண்டுமென்ற எண்ணம் இருப்பதைக் கொண்டு எல்லோரையும் முமுக்ஷுக்கள் என்றே குறிப்பிட்டார். மோக்ஷத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாமலும், அதை அடைய வேணுமென்ற ஆவல் கொஞ்சமுமில்லாமலும் உலகவாழ்க்கையில் உழலுபவர்களைப் பற்றி இங்கு குறிப்பிடவேயில்லை. (233)*

*(அ) இந்த நான்குவித முமுக்ஷுக்களில் தீவிரமான முமுக்ஷையுள்ளவனின் லக்ஷணத்தை எடுத்துச் சொல்லிவிட்டு அவனுக்குத்தான் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைக்கலாமென்றும், மத்திம முமுக்ஷுவுக்கு மற்றொரு ஜன்மத்திலும், மந்தனுக்கு மற்றொரு யுகத்திலும் கிடைக்கலாமென்றும், அதிமந்த முமுக்ஷையுள்ளவனுக்கு கிடைக்கவே கிடைக்காது என்றும் விளக்குகிறார் :-*

**जन्मानेकसहस्रेषु तपसाऽऽराधितेश्वरः ।**
**तेन निःशेषनिर्धूतहृदयस्थितकल्मषः ॥ २३४ ॥**

**शास्त्रवित् गुणदोषज्ञो भोग्यमात्रे विनिःस्पृहः ।**
**नित्यानित्यपदार्थज्ञो मुक्तिकामो दृढव्रतः ॥ २३५ ॥**

**निष्टप्तमग्निना पात्रं उद्वास्य त्वरया यथा ।**
**जहाति गेहं तद्वच्च तीव्रमोक्षेच्छया द्विजः ॥ २३६ ॥**

स एव सद्यस्तरति संसृतिं गुर्वनुग्रहात् ।
यस्तु तीव्रमुमुक्षुः स्यात् स जीवन्नेव मुच्यते ॥ २३७ ॥

*ஜந்மாநேக ஸஹஸ்ரேஷு தபஸாராதிதேச்வர: ।*
*தேந நிச்சேஷ நிர்தூத ஹ்ருதயஸ்தித கல்மஷ: ॥*
*சாஸ்த்ரவித் குணதோஷஜ்ஞோ போக்யமாத்ரே விநிஸ்ப்ருஹ: ।*
*நித்யாநித்யபதார்த்தக்ஞோ முக்திகாமோ த்ருடவ்ரத: ॥*
*நிஷ்டப்தமக்நிநா பாத்ரமுத்வாஸ்ய த்வரயா யதா ।*
*ஜஹாதி கேஹம் தத்வச்ச தீவ்ரமோக்ஷேச்சயா த்விஜ: ॥*
*ஸ ஏவ ஸத்யஸ்தரதி ஸம்ஸ்ருதிம் குர்வனுக்ரஹாத் ।*
*யஸ்து தீவ்ரமுமுக்ஷு: ஸ்யாத் ஸ ஜீவந்நேவ முச்யதே ॥*

**जन्मानेकसहस्रेषु**-பல ஆயிரம் பிறவிகளில், **तपसा**-தவத்தால், **आराधितेश्वरः**-ஈசுவரனை ஆராதித்தவனாகவும், **तेन**-அதனால், **निःशेष**-மீதியன்னியில், **निर्धूत**-போக்கப்பட்ட, **हृदयस्थित**-மனதிலுள்ள, **कल्मषः**-பாபமென்னும் அழுக்குகளை உடையவனாகவும், **शास्त्रवित्**-சாஸ்திரங்களை அறிந்தவனாகவும், **गुणदोषज्ञः**-குணங்களையும் தோஷங்களையும் அறிந்தவனாகவும், **भोग्यमात्रे**-போக வஸ்துக்கள் எல்லாவற்றிலும், **विनिःस्पृहः**-நன்கு ஆசை நீங்கியவனாகவும், **नित्यानित्य-पदार्थज्ञः**-நித்யபதார்த்தத்தையும் அநித்யபதார்த்தங்களையும் அறிந்தவனாகவும், **मुक्तिकामः**-முக்தியில் ஆசையுள்ளவனாகவும், **दृढव्रतः**-உறுதியான ஸங்கல்பமுள்ளவனையும் உள்ள, **द्विजः**-(எந்த) பிராஹ்மணன், **यथा**-எப்படி, **अग्निना**-நெருப்பினால், **निष्टप्तं**-நன்கு சூடேறியுள்ள, **पात्रं**-(கையில் எடுத்த) பாத்திரத்தை, **त्वरया**-வேகத்தோடு, **उद्वास्य**-தூர எறிந்துவிட்டு (இருப்பானோ), **तद्वत्**-அதுபோல, **तीव्रमोक्षेच्छया**-மோக்ஷத்தில் தீவ்ரமான விருப்பத்தால், **गेहं**-வீட்டை, **जहाति**-துறக்கிறானோ, **स एव**-அவன்தான், **गुर्वनुग्रहात्**-குருவின் அனுக்ரஹத்தால், **सद्यः**-உடனேயே, **संसृतिं**-ஸம்ஸாரத்தை, **तरति**-தாண்டுகிறான். **यस्तु**-எவன், **तीव्रमुमुक्षुः स्यात्**-தீவ்ர முமுக்ஷுவாக இருப்பானோ, **सः**-அவன், **जीवन्नेव**-ஜீவித்துக்கொண்டிருக்கிறவனாகவே, **मुच्यते**-முக்தியடைகிறான்.

அநேக ஆயிரம் ஜன்மாக்களில் தபஸினுல் ஈசுவரனை ஆராதித்து அந்த தபஸினுல் மனஸிலுள்ள அழுக்குகளை பாக்கியன்னியில் துடைத்து சாஸ்திரமறிந்து, குணதோஷங்களையறிந்து, போக்ய பதார்த்தம் யாவற்றிலும் ஆசையற்று, எது நித்யம் எது அநித்யம் என்று பதார்த்தங்களை நன்கு அறிந்து, மோக்ஷத்தில் ஆவலும், திடமான ஸங்கல்பமும் கொண்டு நன்ருக நெருப்புச் சூடேறியுள்ள பாத்திரத்தை மறதியால் கையால் எடுத்தாலும் சூடு தாங்காமல் அந்த க்ஷணத்திலேயே எத்தனை வேகத்துடன் தூரவீசி எறிவானே அது போல மோக்ஷமடைவதில் தீவ்ரமான இச்சையால் எவன் உடனேயே வீட்டைத் துறந்து செல்கிருனே அவன் தான் குருவின் அனுக்ரஹத்தினுல் உடனேயே ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டுவான். இந்த தீவ்ர முமுக்ஷு தான் உயிருடன் இருக்கும் போதே முக்தியை அடைவான். (234-237)

जन्मान्तरे मध्यमस्तु तदन्यस्तु युगान्तरे ।
चतुर्थः कल्पकोट्यां वा नैव बन्धाद्विमुच्यते ॥ २३८ ॥

ஜன்மாந்தரே மத்யமஸ்து ததந்யஸ்து யுகாந்தரே ।
சதுர்த்த: கல்பகோட்யாம் வா நைவ பந்தாத்
விமுச்யதே ॥

**मध्यमस्तु**-மத்யமமுமுக்ஷுவோவெனில், **जन्मान्तरे**-வேறு ஜன்மாவிலும், **तदन्यस्तु**-அவனைக்காட்டிலும் வேருன மந்தமுமுக்ஷுவோவெனில் **युगान्तरे**-வேறு யுகத்திலும் (முக்தியடைகிருன்), **चतुर्थः**-நான்காவதான அத்மந்த முமுக்ஷு, **कल्पकोट्यां वा**-கோடிகல்ப காலங்களிலும், **बन्धात्** -ஸம்ஸார பந்தத்திலிருந்து, **नैव विमुच्यते**-விடுபடுவதே இல்லை.

கடுத்தர வைராக்யமுள்ளவன் மற்ருெரு பிறவியிலும், அவனுக்கடுத்த மந்தன் மற்ருெரு யுகத்திலும் முக்தியடையலாம் நான்காவதான அதிமந்த வைராக்யமுள்ளவன் கோடி கல்பமானுலும் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைவதே கிடையாது. (238)

(அ) இவ்விதமாக நான்கு ஸாதனங்களையும் வர்ணித்து விட்டு விவேகமுள்ளவன் தாமதமன்னியில் முக்தியின் பொருட்டு பிரயத்தினம் செய்யவேண்டியது மிகவும் அவசியமென்பதையும்

அவ்விதம் பிரயத்தினம் செய்யாத விஷயத்தில் ஜன்மமே வீண் என்பதையும் மேல் சுலோகங்களில் வற்புறுத்துகிறார்:—

नृजन्म जन्तोरतिदुर्लभं विदुः ततोऽपि पुंस्त्वं च ततो विवेकः ।
लब्ध्वा तदेतत् त्रितयं महात्मा यतेत मुक्त्यै सहसा विरक्तः ॥२३९॥

ந்ருஜன்ம ஜந்தோரதிதுர்லபம் விது:
தததோऽபி பும்ஸ்த்வம் ச ததோ விவேக: ।
லப்த்வா ததேதத் த்ரிதயம் மஹாத்மா
யதேத முக்த்யை ஸஹஸா விரக்த: ॥

जन्तोः-பிராணிக்கு, नृजन्म-மனிதப்பிறவி, अतिदुर्लभं-மிகவும் கஷ்டப்பட்டு கிடைப்பதாக, विदुः-அறிந்திருக்கிறார்கள், ततोऽपि-அதிலும் पुंस्त्वं च-புருஷத்தன்மையும், ततः-அதிலும், विवेकः-விவேகமும் (கிடைத்தற்கரியது). तत् एतत्-அந்த இந்த, त्रितयं-மூன்றையும், लब्ध्वा-அடைந்து, महात्मा-உயர்ந்த மனமுள்ளவன், सहसा-உடனே, विरक्तः-ஆசையைத் துறந்தவனாய், मुक्त्यै-முக்தியின் பொருட்டு, यतेत-முயற்சிக்கவேண்டும்.

கர்மவசமாக பல பிறவிகளை எடுக்கும் ஜீவனுக்கு மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது மிகவும் அரிது என்று பெரியோர்கள் அறிந்திருக்கிறார்கள். மனிதப்பிறவி கிடைத்தாலும் சாஸ்திரங்களில் அதிகாரமுள்ள புருஷப் பிறவி கிடைப்பது அதனிலும் அரிது. புருஷப் பிறவி கிடைத்தாலும் விவேகம் பெறுவது மிகவும் அரிது. இந்த மூன்றும் கிடைத்திருக்கும்போது உத்தமமான மனஸ் உள்ளவன் எல்லாவற்றிலும் வைராக்யமடைந்து உடனே முக்தியின் பொருட்டு பிரயத்தினம் செய்யவேண்டும். (239)

पुत्रमित्रकलत्रादिसुखं जन्मनि जन्मनि ।
मर्त्यत्वं पुरुषत्वं च विवेकश्च न लभ्यते ॥ २४० ॥

புத்ர மித்ர களத்ராதி ஸுகம் ஜன்மனி ஜன்மனி ।
மர்த்யத்வம் புருஷத்வம் ச விவேகச்ச ந லப்யதே ॥

पुत्र-பிள்ளைகள், मित्र-நண்பர், कलत्रादि-மனைவி முதலானவர்களால் உண்டாகும், सुखं-இன்பமானது, जन्मनि जन्मनि-ஒவ்வொரு

பிறவியிலும் (கிடைக்கும்), **मर्त्यत्वं**-மனிதத்தன்மையும், **पुरुषत्वं च**-புருஷத்தன்மையும், **विवेकश्च**-விவேகமும், **न लभ्यते**-கிடைக்காது.

*பிள்ளைகள், நண்பர்கள், மனைவி முதலானவர்களால் ஏற்படும் ஸுகம் ஒவ்வொரு ஜன்மாவிலும் கிடைக்கும். மனிதப் பிறவியும் அதிலும் புருஷனாகப்பிறப்பதும், விவேகமும் ஸுலபமாகக் கிடைக்காது.* **(240)**

**लब्ध्वा सुदुर्लभतरं नरजन्म जन्तुः**
**तत्रापि पौरुषं अतः सदसद्विवेकम् ।**
**संप्राप्य चैहिकसुखाभिरतो यदि स्यात्**
**धिक् तस्य जन्म कुमतेः पुरुषाधमस्य ॥ २४१ ॥**

*லப்த்வா ஸுதுர்லபதரம் நரஜன்ம ஜந்து:*
*தத்ராபி பௌருஷமத: ஸதஸத்விவேகம் ।*
*ஸம்ப்ராப்ய சைஹிக ஸுகாபிரதோ யதி ஸ்யாத்*
*திக் தஸ்ய ஜன்ம குமதே: புருஷாதமஸ்ய ॥*

**जन्तुः**-ஜீவன், **सुदुर्लभतरं**-கிடைப்பதற்கு மிகவும் அரிதான, **नरजन्म**-மனிதப்பிறவியை, **लब्ध्वा**-அடைந்து, **तत्रापि**-அதிலும், **पौरुषं**-புருஷத்தன்மையையும், **अतः**-அதிலும், **सदसद्विवेकं च**-இது நல்லது, இது கெட்டது என்ற பகுத்தறிவையும், **संप्राप्य**-அடைந்து, **ऐहिकसुखाभिरतः**-இவ்வுலகத்தில கிடைக்கும் விஷயங்களின் ஸுகத்திலேயே பிரீதியுள்ளவனாக, **यदि स्यात्**-இருப்பானேயாகில், **पुरुषाधमस्य**-மனிதர்களில் தாழ்ந்தவனான, **कुमतेः**-கெட்டபுத்தியுள்ள, **तस्य**-அவனுடைய, **जन्म**-பிறவி, **धिक्**-நிந்திக்கத்தக்கது.

*ஒரு ஜீவன் அடைவதற்கு மிக மிக அரிதான மனிதப் பிறவியைப் பெற்று அதிலும் புருஷ ஜன்மாவையும், அதிலும் இது நல்லது இது கெட்டது என்று அறியக்கூடிய விவேகத்தையும் அடைந்தும், அவன் இம்மையிலுள்ள விஷய ஸுகத்திலேயே ஈடுபட்டவனாக இருப்பானேயானால் அவன் மனிதர்களில் மிகத் தாழ்ந்தவன் தான், புத்திஹீனன், அவனுக்குக் கிடைத்த புருஷ ஜன்மமும் விவேகமும் வீண் தான்.* **(241)**

खादते मोदते नित्यं शुनकः सूकरः खरः ।
तेषामेषां विशेषः को वृत्तिर्येषां तु तैः समा ॥ २४२ ॥

*காததே மோததே நித்யம் ஶுநக: ஸூகர: கர: I*
*தேஷாமேஷாம் விஶேஷ: கோ வ்ருத்திர் யேஷாம் து தை: ஸமா II*

**शुनकः**-நாயும், **सूकरः**-பன்றியும், **खरः**-கழுதையும், **नित्यं**-எப்பொழுதும், **खादते**-தின்கிறது **मोदते**-இன்பமடைகிறது, **येषां**-எவர்களின், **वृत्तिः**-வாழ்க்கை, **तैः**-அவைகளோடு, **समा**-ஸமமாக இருக்கிறதோ, **तेषां**-அவர்களுக்கும், **एषां**-இவைகளுக்கும், **को विशेषः**-என்ன வித்யாஸம் ?

*நாயும், பன்றியும், கழுதையும் நித்யம் தின்கிறது, ஸந்தோஷம் அடைகிறது அவைகளைப் போலவே மனிதனும் தின்பதிலும் அதனால் இன்பமடைவதிலும் ஆயுள் காலத்தைக் கழிப்பானேயாகில் அவைகளுக்கும் இவனுக்கும் என்ன வித்தியாஸம்? (242)*

यावन्नाश्रयते रोगो यावन्नाक्रमते जरा ।
यावन्न धीर्विपर्येति यावन्मृत्युं न पश्यति ॥ २४३ ॥

तावदेव नरः स्वस्थः सारग्रहणतत्परः ।
विवेकी प्रयतेताशु भवबन्धविमुक्तये ॥ २४४ ॥

*யாவத் நாச்ரயதே ரோகோ யாவத் நாக்ரமதே ஜரா I*
*யாவத் ந தீர் விபர்யேதி யாவன் ம்ருத்யும் ந பச்யதி II*

*தாவதேவ நர: ஸ்வஸ்த: ஸாரக்ரஹணதத்பர: I*
*விவேகீ ப்ரயதேதாஶு பவபந்தவிமுக்தயே II*

**यावत्**-எதற்குள், **रोगः**-பிணி, **न आश्रयते**-வந்து அண்டவில்லையோ, **यावत्**-எதற்குள், **जरा**-மூப்பு, **न आक्रमते**-தாக்கவில்லையோ, **यावत्**-எதற்குள், **धीः**-புத்தி, **न विपर्येति**-தடுமாறவில்லையோ, **यावत्**-எதற்குள், **मृत्युं**-மரணத்தை, **न पश्यति**-பார்க்கவில்லையோ, **तावदेव**-அதற்குள்ளாகவே, **स्वस्थः**-ஸ்வஸ்தனாக இருக்கும்

**नरः**-மனிதன், **सारग्रहणतत्परः**-ஸாரமானதை ஸ்வீகரிப்பதில் ஈடுபட்டவனாய், **विवेकी**-விவேகத்துடன் கூடியவனாய், **भवबन्धविमुक्तये**-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுவதற்காக, **आशु**-விரைவில், **प्रयतेत**-முயற்சிக்கவேண்டும்.

*உடம்பில் பிணிகள் வந்து தாக்குவதற்கு முன்னாலேயே, கிழட்டுத்தனம் வருவதற்கு முன்னதாகவே, புத்திக் கலக்கம் ஏற்படுவதற்கு முன்பாகவே, மரணம் ஏற்படுவதற்கு முன்பாகவே, சரீரம் ஸ்வஸ்தமாயிருக்கும் பொழுதே ஸாரமற்றதை நீக்கி ஸாரமுள்ளதையே க்ரஹிப்பதில் ஈடுபட்டு விவேகத்துடன் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட உடனே முயற்சிக்க வேண்டும் ஸ்வஸ்தனயிருக்கும் பொழுது முயற்சிக்காவிட்டால் பின்னால் பலவியாதிகளும், கிழட்டுத்தனமும், புத்திக்கலக்கமும் வந்துவிடும் அந்த நிலையில் அவன் என்ன முயற்சி செய்ய முடியும்? கடைசியில் மரணம் அடைந்து விட்டால் இம்மாதிரியான பிறவி கிடைப்பது என்ன நிச்சயம்?* **(243-244)**

**देवर्षिपितृमर्त्यर्णबन्धमुक्तास्तु कोटिशः ।**
**भवबन्धविमुक्तस्तु यः कश्चित् ब्रह्मवित्तमः ॥ २४५ ॥**

*தேவர்ஷிபித்ருமர்த்யர்ணபந்தமுக்தாஸ்து கோடிஶ: ।*
*பவபந்தவிமுக்தஸ்து ய: கச்சித் ப்ரஹ்மவித்தம: ॥*

**देवर्षि**-தேவதைகள், ருஷிகள், **पितृ**-பித்ருக்கள், **मर्त्यर्ण**-மனிதர்கள் இவர்களால் உண்டாகும் கடனாகிற, **बन्ध**-கட்டிலிருந்து, **मुक्तास्तु**-விடுபட்டவர்களோவெனில், **कोटिशः**-கோடிக்கணக்கில் இருக்கின்றனர், **भवबन्ध विमुक्तस्तु**-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவனோவெனில், **ब्रह्मवित्तमः**-ப்ரஹ்ம வித்துக்களுள் சிறந்த, **यः कश्चित्**-யாரோ ஒருவர்தான்.

*உலகில் பிறக்கும் பொழுதே ஒவ்வொருவனும் தேவருணம், ருஷிருணம், பித்ருருணம் என்ற மூன்று கடன்களோடேயே பிறக்கிறான். இத்துடன் தனக்கு உதவி செய்த தாய் தந்தையர் முதலானவர்களுடைய ருணமும் புதிதாக ஏற்படுகிறது கடன் என்பதும் பந்தம் தான். அதைத் தீர்க்காத வரை சிரேயஸ்ஸை அடைய முடியாமல் அது தடுத்து விடுகிறது. யாகங்கள் செய்வதன்*

மூலம் தேவருணத்தையும், ப்ரஹ்மசர்ய நியமத்துடன் வேதாத்ய யனம் செய்வதால் ருஷிருணத்தையும் விவாஹம் செய்துகொண்டு ஸத்புத்ரனைப் பெறுவதன் மூலம் பித்ருருணத்தையும், பதில் உதவி செய்வதன் மூலம் மனுஷ்யருணத்தையும் தீர்த்து, இந்த ருண பந்தத்திலிருந்து விடுபட்டவர்கள் உலகில் கோடிக்கணக்கில் இருக்கின்றனர். ஆனால் பிறவிக் கட்டிலிருந்து விடுபட்டவர் ப்ரஹ்மவித்துக்களுள் உயர்ந்த நிலையில் உள்ள யாரோ ஒருவர் தான். பலகோடி மனிதர்களுள் யாரோ ஒருவர் தான் பிறவித் தளையிலிருந்து விடுபடுகிறான். (245)

अन्तर्बन्धेन बद्धस्य किं बहिर्बन्धमोचनैः ।
तदन्तर्बन्धमुक्त्यर्थं क्रियतां कृतिभिः कृतिः ॥ २४६ ॥

அந்தர்பந்தேந பத்தஸ்ய கிம் பஹிர் பந்தமோசனை: ।
ததந்தர்பந்தமுக்த்யர்த்தம் க்ரியதாம் க்ருதிபி: க்ருதி: ॥

**अन्तर्बन्धेन**—உள்கட்டினால், **बद्धस्य**-கட்டுப்பட்டவனுக்கு, **बहिर्बन्धमोचनैः**—வெளிக்கட்டுகளிலிருந்து விடுதலைகளால், **किं**—என்ன பயன்? **तत्** - ஆகையால், **कृतिभिः**—புத்திசாலிகளால், **अन्तर्बन्धमुक्त्यर्थं** - உள்கட்டிலிருந்து விடுபடுவதற்கு, **कृतिः**-பிரயத்னம், **क्रियताम्** -செய்யப்படட்டும்.

முன் சுலோகத்தில் கூறப்பட்ட தேவருணம் முதலானவை பாஹ்யபந்தங்கள் (வெளிக்கட்டுகள்) அக்ஞானம் உள்கட்டு. உள்கட்டிலிருந்து விடுபடாதவரை வெளிக்கட்டுகளை மட்டும் நீக்கு வதால் யாதொரு பயனுமில்லை. அக்ஞானமென்னும் உள்கட்டு இருக்கும் வரை மேலும் மேலும் பிறவிகள் வரிசையாக வந்து கொண்டேயிருக்கும் இப்பிறவியில் வெளிக்கட்டுகளை நீக்கினாலும் உள்கட்டு நீங்காததால் அடுத்த பிறவிகள் ஒவ்வொன்றிலும் வெளிக்கட்டுகள் தோன்றிக் கொண்டே யிருக்கும். ஒவ்வொரு தடவையும் முயற்சிகள் செய்து வெளிக்கட்டுகளைப் போக்க வேண்டும். ஆதலால் புத்திமான்கள் உள்கட்டான அக்ஞானம் நீங்குவதற்கு முயற்சி செய்யவேண்டும். அக்ஞானம் நீங்கி விட்டால் மறுபிறவியில்லை. வெளிக்கட்டுகளும் ஏற்படாது. (246)

कृतिपर्यवसानैव मता तीव्रमुमुक्षुता ।
अन्या तु रञ्जनामात्रा यत्र नो दृश्यते कृतिः ॥ २४७ ॥

*க்ருதிபர்யவஸானைவ மதா தீவ்ரமுமுக்ஷுதா ।*
*அன்யா து ரஞ்ஜனாமாத்ரா யத்ர நோ த்ருச்யதே க்ருதி: ॥*

**कृतिपर्यवसानैव**–ப்ரயத்னம் செய்வதில் முடிவுபெறுவதுதான், **तीव्रमुमुक्षुता**–மோக்ஷமடைவதில் தீவ்ரவிருப்பமாக, **मता**–எண்ணப்பட்டுள்ளது, **यत्र**–எதில், **कृतिः**–பிரயத்னம், **नो दृश्यते**–காணப்படவில்லையோ (அந்த), **अन्या तु**–வேறு முமுக்ஷையோவெனில், **रञ्जनामात्रा**–பிறர் மனதை கவர்ச்சி செய்யத்தான் (தனக்கு பலனில்லை).

*பிரயத்னம் செய்வதில் முடிவு பெறுவததான் தீவ்ர முமுக்ஷையாகும் முக்தியடைவதற்காக எவன் பிரயத்னம் செய்கிறானோ அவனிடம்தான் தீவ்ர முமுக்ஷையிருப்பதாகக் கருதலாம். எவனுக்கு மோக்ஷத்தில் இச்சையிருந்தும் பிரயத்னம் செய்யவில்லையோ, அவனுடைய முமுக்ஷையானது ஜனங்களை மயக்குவதற்கு உபயோகப்படுமேதவிற இவனுக்கு அதனால் யாதொரு பயனுமில்லை.* *(247)*

**गेहादि सर्वमपहाय लघुत्वबुद्ध्या**
**सौख्येच्छया स्वपतिनाऽनलमाविविक्षोः ।**
**कान्ताजनस्य नियता सुदृढा त्वरा या**
**सैषा फलान्तगमने करणं मुमुक्षोः ॥ २४८ ॥**

*கேஹாதி ஸர்வமபஹாய லகுத்வபுத்த்யா*
*ஸௌக்யேச்சயா ஸ்வபதிநாऽநலமாவிவிக்ஷோ: ।*
*காந்தாஜநஸ்ய நியதா ஸுத்ருடா த்வரா யா*
*ஸைஷா பலாந்தகமநே கரணம் முமுக்ஷோ: ॥*

**लघुत्वबुद्ध्या**–ஸாரமற்றது என்ற எண்ணத்துடன், **गेहादि सर्वं**–வீடு முதலான எல்லாவற்றையும், **अपहाय**–விட்டுவிட்டு, **सौख्येच्छया**–பரலோக ஸுகத்தில் விருப்பத்தால், **स्वपतिना**–தன் கணவனோடுகூட **अनलं आविविक्षोः**–நெருப்பில் (சிதையில்) பிரவேசிக்க விரும்பும், **कान्ताजनस्य**–பெண்ணினத்திற்கு, **नियता**–தீர்மானமாயும், **सुदृढा**–நன்கு உறுதியுள்ளதுமான, **या**–எந்த, **त्वरा**–வேகமிருக்குமோ, **सा एषा**–அந்த இதுதான், **मुमुक्षोः**–மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனுக்கு, **फलान्तगमने**–பலனின் முடிவை அடைவதில், **करणं**–ஸாதனமாகும்.

*பிரயோஜனமற்றது என்ற எண்ணத்துடன், வீடு முதலான் து எல்லாவற்றையும் விட்டு விட்டு பரலோகஸுகத்தில் ஆசையினுல், இறந்த தன் பர்த்தாவுடன் கூட அக்னியில் பிரவேசிக்க நினைக்கும் பத்னிக்கு தீர்மானமாயும் நன்கு திடமாயும் எந்த மனோவேகம் இருக்குமோ, அம்மாதிரியான மனோவேகம்தான் மோக்ஷத்தை விரும்புகிறவனுக்குப் பலனின் முடிவை அடைவதற்கு ஸாதனமாகும். (248)*

**नित्यानित्यविवेकश्च देहक्षणिकतामतिः ।**
**मृत्योर्भीतिश्च तापश्च मुमुक्षावृद्धिकारणम् ॥ २४९ ॥**

*நித்யாநித்யவிவேகச்ச தேஹக்ஷணிகதாமதி: ।*
*ம்ருத்யோர் பீதிச்ச தாபச்ச முமுக்ஷாவ்ருத்தி காரணம் ॥*

**नित्यानित्यविवेकश्च**–இது நித்யம், இது அநித்யம் என்ற பகுத்தறிவும், **देहक्षणिकतामतिः**–சரீரம் நிலையற்றது என்ற எண்ணமும். **मृत्योः**–மரணத்திலிருந்து, **भीतिश्च**–பயமும், **तापश्च**–ஆத்யாதமிகாதி தாபமும், **मुमुक्षावृद्धिकारणं**–மோக்ஷேச்சை வளர்வதற்கு ஸாதனம்.

*இது நித்யம் இது அநித்யம் என்ற பகுத்தறிவும், சரீரம் க்ஷணிகம் (நிலையற்றது) என்ற எண்ணமும், மரணத்திலிருந்து பயமும், தாபமும், முமுக்ஷையை விருத்தி செய்வதற்குக் காரணங்களாகும். (249)*

*(அ) நித்யா நித்ய விவேகம் முதலான நான்கு ஸாதனங்களுக்குள் ஒன்றுக்கொன்று எவ்வித ஸம்பந்த மென்பதையும், இந்த நான்கு ஸாதனங்களும் அமைந்திருப்பவன் அடையக்கூடிய பலனையும் சொல்கிருர் :—*

**शिरो विवेकस्त्वत्यन्तं वैराग्यं वपुरुच्यते ।**
**शमादयः षडङ्गानि मोक्षेच्छा प्राण इष्यते ॥ २५० ॥**

*ஶிரோ விவேகஸ்த்வத்யந்தம் வைராக்யம் வபுருச்யதே ।*
*ஶமாதய: ஷடங்கானி மோக்ஷேச்சா ப்ராண இஷ்யதே ॥*

**विवेकः**–நித்யாநித்ய விவேகம், **शिरः**–தலையாகவும், **अत्यन्तं वैराग्यं**–தீவ்ர வைராக்யம், **वपुः**–உடலாகவும், **उच्यते**–சொல்லப்படுகிறது **शमादयः**–**षट्**–சமம் முதலான ஆறும், **अङ्गानि**–சரீராவயவங்களாகவும்,

**मोक्षेच्छा**–மோக்ஷத்தில் விருப்பம், **प्राणः**–பிராணனாகவும், **इष्यते**–எண்ணப்படுகிறது.

*விவேகம் சிரஸாகவும், தீவிரமான வைராக்யம் சரீரமாகவும் சமம் முதலிய ஆறும் சரீராவயவங்களாகவும் மோக்ஷத்தில் ஆசை உயிராகவும் கருதப்படுகிறது.* (250)

**ईदृशाङ्गसमायुक्तो जिज्ञासुर्युक्तिकोविदः ।**
**शूरो मृत्युं निहन्त्येव सम्यग्ज्ञानासिना ध्रुवम् ॥ २५१ ॥**

*ஈத்ருசாங்கஸமாயுக்தோ ஜிஜ்ஞாஸுர் யுக்திகோவித: I*
*சூரோ ம்ருத்யும் நிஹந்த்யேவ ஸம்யக்ஞாநாஸிநா த்ருவம் ॥*

**ईदृशाङ्गसमायुक्तः**–இவ்விதமான விவேகம் முதலான அங்கங்களோடு கூடியவனும், **जिज्ञासुः**–ஞானம் அடைவதில் விருப்பமுள்ளவனும், **युक्तिकोविदः**–யுக்திகளைக்கண்டு பிடிப்பதில் ஸாமர்த்யசாலியாயும் உள்ள, **शूरः**–தீரன், **ध्रुवं**–நிச்சயமாக, **सम्यग्ज्ञानासिना**–தத்வ ஞானம் என்ற கத்தியால், **मृत्युं**–மரணத்தை, **निहन्त्येव**–அழித்தே விடுவான்.

*யுத்தத்தில் ஜயத்தை விரும்பும் சூரன் யுத்ததந்திரங்களை நன்கு அறிந்தவனாய் ரதம், கஜம் முதலான ஸேநாங்கங்களுடன் சென்று சண்டைசெய்து முடிவில் கத்தியால் எதிரியை வெட்டிக் கொல்வது போல் விவேகம் முதலான அங்கங்களுடன் கூடிய யதியும் ஞானத்தை அடைய விரும்பி யுக்தியில் சிறந்தவனாய் ஆத்ம விசாரம் செய்து தத்வ ஞானம் பெற்று அதனால் மரணத்தைத் தொலைக்கிறான். பிறப்பு இறப்பு அற்ற சாச்வத நிலையை அடைகிறான். இவனே சூரன்.* (251)

*(அ) விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷை, ஆகிய நான்கு ஸாதனங்களுமுள்ளவன் வேதாந்த விசாரம்செய்வதில் அதிகாரியாயிருப்பதால், ஆத்ம தத்வத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அதை நன்கு அறிந்திருக்கும் குருவைத் தேடியடையவேண்டும். அந்த குரு எவ்வித லக்ஷணங்களுடன் இருக்கவேண்டும், அவரிடம் சிஷ்யன் போகவேண்டிய கிரமம் எப்படி, அவரிடம் போய் கேட்கவேண்டியது என்ன, என்பதையெல்லாம் ஸ்ரீமத் ஆசார்யார் விஸ்தாரமாகவும் தெளிவாகவும் எடுத்துச்சொல்கிறார்:—*

**उक्तसाधनसंपन्नो जिज्ञासुर्यतिरात्मनः ।**
**जिज्ञासायै गुरुं गच्छेत् समित्पाणिः नयोज्ज्वलः ॥ २५२**

*உக்தஸாதநஸம்பந்நோ ஜிஜ்ஞாஸுர் யதிராத்மந: ।*
*ஜிஜ்ஞாஸாயை குரும் கச்சேத் ஸமித்பாணிர்*
*நயோஜ்வல: ॥*

**उक्तसाधनसंपन्नः**–கீழே கூறப்பட்ட ஸாதனங்களோடுகூடிய, **जिज्ञासुः**–ஞானத்தில் விருப்பமுள்ள, **यतिः**–ஸந்யாஸி, **आत्मनो जिज्ञासायै**–ஆத்மவிசாரத்திற்காக, **समित्पाणिः**–ஸமித்துக்களைக் கையில் எடுத்துக்கொண்டவனாக, **नयोज्ज्वलः**–விநயத்துடன் பிரகாசிக்கிறவனாக, **गुरुं गच्छेत्**–ஆசாரியரிடம் செல்லவேண்டும்.

*முன் சொல்லப்பட்டிருக்கும் ஸாதனங்களுடன் கூடினவனாய் ஆத்மாவை அறிந்து கொள்ள எண்ணமுள்ள ஸன்யாஸி ப்ரஹ்ம விசாரம் செய்வதற்காக கையில் ஸமித்துக்களை எடுத்துக் கொண்டு, மிகவும் விநயத்துடன் பிரகாசிக்கிறவனாய், குருவிடம் போகவேண்டும். (252)*

**श्रोत्रियो ब्रह्मनिष्ठो यः प्रशान्तः समदर्शनः ।**
**निर्ममो निरहंकारो निर्द्वन्द्वो निष्परिग्रहः ॥ २५३ ॥**

**अनपेक्षः शुचिर्दक्षः करुणामृतसागरः ।**
**एवंलक्षणसंपन्नः स गुरुर्ब्रह्मवित्तमः ।**
**उपासाद्यः प्रयत्नेन जिज्ञासोः स्वार्थसिद्धये ॥ २५४ ॥**

*ச்ரோத்ரியோ ப்ரஹ்மநிஷ்டோ ய: ப்ரசாந்த:*
*ஸமதர்சந: ।*
*நிர்மமோ நிரஹங்காரோ நிர்த்வந்த்வோ நிஷ்பரிக்ரஹ: ॥*

*அநபேக்ஷ: சுசிர் தக்ஷ: கருணாம்ருதஸாகர: ।*
*ஏவம்லக்ஷணஸம்பந்ந: ஸ குருர் ப்ரஹ்மவித்தம: ।*
*உபாஸாத்ய: ப்ரயத்நேந ஜிஜ்ஞாஸோ: கார்யஸித்தயே ॥*

**यः**–எவர், **श्रोत्रियः**–வேதமறிந்தவராயும், **ब्रह्मनिष्ठः**–ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவராயும், **प्रशान्तः**–சாந்தஸ்வபாவமுள்ளவராயும், **समदर्शनः**–ஸமமான பார்வையுள்ளவராயும், **निर्ममः**–தனது

என்ற அபிமானமில்லாதவராயும், **निरहंकारः**–அஹங்காரமற்றவராயும், **निर्द्वन्द्वः**–ஸுகதுக்கம் முதலான த்வந்த்வங்களால் (இரட்டைகளால்) பாதிக்கப்படாதவராயும், **निष्परिग्रहः**–வஸ்துக்களை சேகரிக்காதவராயும், **अनपेक्षः**–ஒன்றிலும் தேவையற்றவராயும், **शुचिः**–பரிசுத்தராயும், **दक्षः**–ஸாமர்த்யமுள்ளவராயும், **करुणामृतसागरः**–கருணையென்னும் அமிருதத்திற்குக் கடலபோன்றவராயும, **एवंलक्षणसंपन्नः**–இந்த லக்ஷணங்களுடன் கூடியவராக உள்ளவரா, **सः**–அந்த, **ब्रह्मवित्तमः**–ப்ரஹ்ம ஞானிகளுக்குள் மிகச்சிறந்த, **गुरुः**–குருவானவர், **जिज्ञासोः**–ஆத்மாவை அறிய விருப்பமுள்ளவனுக்கு, **स्वार्थसिद्धये**–தனது இஷ்டம நிறைவேறுவதற்காக, **प्रयत्नेन**–முயற்சியால, **उपसाद्यः**–விநயத்துடன் அடையத்தக்கவர்.

*வேதாத்யயனம் செய்தவராயும், பிரஹ்மத்தில் நிலைத்தவராயும் நல்ல சாந்த ஸ்வபாவமுள்ளவராயும் எங்கும் ஸமமான பார்வையுள்ளவராயும் ஒன்றிலும் மமதை (தனது என்ற எண்ணம்) அற்றவராயும் சரீராதிகளில் நான் என்ற அபிமானமில்லாதவராயும் ஒன்றுக்கொன்று எதிரிடையான சீதம் உஷ்ணம் முதலானவைகளால் மனம் பாதிக்கப்படாமல் ஸமமாயிருப்பவராயும் தன்னுடையதாக ஒன்றையும் சேர்த்து வைத்துக் கொள்ளாதவராயும் ஒன்றிலும் தேவையில்லாதவராயும் பரிசுத்தராயும், ஸாமர்த்யசாலியாயும், கருணைக்கடலாயும், பிரஹ்மவித் சிரேஷ்டராயுமிருக்கும் குருவை, ஆத்மாவை அறிய எண்ணுபவர் தன் உத்தேசம் நிறைவேறுவதற்காக முயற்சித்துத் தேடி அடையவேண்டும்.* (253–254)

*(அ) இவ்வித லக்ஷணங்களெல்லாம் பொருந்தின குரு அகப்படுவாரா என்று அதைரியப்படவேண்டாம். அவ்வித குருவை அடையத்தக்க அதிருஷ்டம் நம்மிடம இருக்குமானால் பகவானே குருவாக நம் கண்முன தோன்றுவார். அல்லது நாம் பக்தியுடன் ஸேவை செய்யும் குருவின் மூர்த்தி மூலமாகவே பகவான் அனுக்ரஹம் செய்வார். என்பதையும் அந்த அதிருஷ்டம் யாருக்குக்கிடைக்கும் என்பதையும் காட்டுகிறார்:—*

**जन्मानेकशतैः सदाऽऽदरयुजा भक्त्या समाराधितो**
**भक्तैर्वैदिकलक्षणेन विधिना संतुष्ट ईशः स्वयम् ।**
**साक्षात् श्रीगुरुरूपमेत्य कृपया दृग्गोचरः सन् प्रभुः**
**तत्त्वं साधु विबोध्य तारयति तान् संसारदुःखार्णवात् ॥**

*ஜந்மாநேகமதை: ஸதாதரயுஜா பக்த்யா ஸமாராதிதோ*
*பக்தைர் வைதிகலக்ஷணேந விதிநா ஸந்துஷ்ட ஈச:*
*ஸ்வயம் ।*
*ஸாக்ஷாத் ச்ரீகுருரூபமேத்ய க்ருபயா த்ருக்கோசர: ஸன்*
*ப்ரபு:*
*தத்வம் ஸாது விபோத்ய தாரயதி தான் ஸம்ஸார*
*துக்கார்ணவாத் ॥*

**भक्तैः**–பக்தர்களால், **जन्मानेकशतैः**–பல நூறு பிறவிகளில், **आदरयुजा**–ஆதரவுடன் கூடிய, **भक्त्या**–பக்தியோடு, **वैदिकलक्षणेन**–வேதத்தில் சொல்லப்பட்டது என்ற லக்ஷணமுள்ள, **विधिना**–விதியால், **सदा**–எப்பொழுதும், **समाराधितः**–நன்கு ஆராதிக்கப்பட்டு, **संतुष्टः**–ஸந்தோஷமடைந்த, **प्रभुः**–ஸர்வசக்தியுள்ள, **ईशः**–ஈசுவரன், **कृपया**–கருணையினால், **स्वयं**–தானாகவே, **श्रीगुरुरूपमेत्य**–குரு உருவமெடுத்துக் கொண்டு, **साक्षात्**–நேரிடையாகவே, **दृग्गोचरः सन्**–கண்பார்வைக்கு படுகிறவருப்கொண்டு, **तत्त्वं**–ஜீவப்ரஹ்மைக்ய தத்வத்தை, **साधु**–நன்றாக, **विबोध्य**–அறியும்படி உபதேசித்து, **तान्**–அவர்களை, **संसार-दुःखार्णवात्**–ஸம்ஸாரத் துன்பக்கடலிலிருந்து, **तारयति**–தாண்டி வைக்கிறார்.

*பக்தர்கள் பலநூறு பிறவிகளில் எப்பொழுதும் ஆதரவுடனும் பக்தியுடனும் வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள தனது கடமைகளான நித்யநைமித்திக கர்மாக்களைச் செய்வதன் மூலம் பகவானை ஆராதித்து வந்தால், அதனால் ஸந்தோஷமடைந்த ஈசுவரன் கிருபையால் தானே குரு உருவம் தாங்கி இவனது கண்களில் படும்படி நேராக வந்து, அல்லது இவர்கள் யாரை குருவாக சரணமடைந்திருக்கிறார்களோ அவரிடம் ஸாந்நித்யம் கொண்டு ஜீவப்ரஹ்மைக்ய தத்வத்தை நன்கு உபதேசித்து பிறவித் துன்பக்கடலிலிருந்து இவர்களை தாண்டும்படி செய்கிறார்.*

**तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन** *என்ற சுருதியில் பலாபேக்ஷை இல்லாமல் செய்யும் விஹித கர்மாக்கள் ஞானத்திற்கு ஸாதனம் என்று கூறுவதால் இந்த கர்மாக்களே ஸத்குரு லாபத்திற்கும் ஸாதனம் என்று தெரிய வருகிறது.*

*இந்த சுலோகத்தில் குரு கிடைப்பதற்கு ஸாதனம் ஈசுவர பிரஸாதம்; அப்பிரஸாதம் கிடைப்பதற்கு ஸாதனம் அவரால்*

*விதிக்கப்பட்டிருக்கிற வைதிக கர்மானுஷ்டானம் அதை வெகு காலம் இடைவிடாமல் ஆதரவுடன் மிகவும் பக்தியுடன் செய்ய வேண்டும் என்று கூறுவதன் மூலம் கர்மா, பக்தி, ஞானம் எல்லாவற்றையும் ஸமன்வயப்படுத்தி எல்லாமே ஸம்ஸாரத்தி லிருந்து விடுதலையடைவதற்கு அவசியமென்பதை தெளிவுபடுத்தி யிருக்கிறார்.* (255)

अविद्याहृदयग्रन्थिविमोक्षोऽपि भवेद्यतः ।
तमेव गुरुरित्याहुः गुरुशब्दार्थवेदिनः ॥ २५६ ॥

*அவித்யாஹ்ருதயக்ரந்திவிமோக்ஷோऽபி பவேத் யத: ।
தமேவ குருரித்யாஹுர் குருஶப்தார்த்தவேதிந: ॥*

**अविद्या**—அஜ்ஞானமென்னும், **हृदयग्रन्थि**—மனதிலுள்ள முடிச்சு, **विमोक्षोऽपि**-அவிழ்ந்துபோவதும்கூட, **यतः**-எவரால், **भवेत** -ஏற்படுமோ, **तमेव**—அவரையே, **गुरुः इति**—குரு என்று, **गुरुशब्दार्थवेदिनः**—குரு என்ற சொல்லின் பொருளை அறிந்தவர்கள், **आहुः**—சொல்கிறார்கள்.

*அஜ்ஞானம் என்கிற மனதிலுள்ள முடிச்சு எவரால் அவிழ்க்கப் படுகிறதோ அவர்தான் குரு என்று சொல்லப்படுகிறார்.* (256)

शिव एव गुरुः साक्षात् गुरुरेव शिवः स्वयम् ।
उभयोरन्तरं किंचित् न द्रष्टव्यं मुमुक्षुभिः ॥ २५७ ॥

*ஶிவ ஏவ குரு: ஸாக்ஷாத் குருரேவ ஶிவ: ஸ்வயம் ।
உபயோரந்தரம் கிஞ்சித் ந த்ரஷ்டவ்யம் முமுக்ஷுபி: ॥*

**गुरुः**—குருவானவர், **साक्षात्**—நேராக வந்த, **शिव एव**—பரமசிவன் தான், **शिवः**—பரமசிவன், **स्वयं**—தானாகவே வந்த, **गुरुरेव**—குருதான், **मुमुक्षुभिः**—மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்களால், **उभयोः**—குரு, சிவன் இருவர்களுக்கும், **किंचित्** -கொஞ்சம்கூட, **अन्तरं**—வேற்றுமை, **न द्रष्टव्यं**—காணக்கூடாது.

*சிவன் தான் குரு. குருதான் சிவன். இருவருக்கும் கொஞ்சம்கூட வித்யாஸமிருப்பதாக முமுக்ஷுக்கள் எண்ணக் கூடாது.* (257)

बन्धमुक्तं ब्रह्मनिष्ठं कृतकृत्यं भजेद्गुरुम् ।
यस्य प्रसादात् संसारसागरो गोष्पदायते ॥ २५८ ॥

*பந்தமுக்தம் ப்ரஹ்மநிஷ்டம் க்ருதக்ருத்யம் பஜேத் குரும் ।*
*யஸ்ய ப்ரஸாதாத் ஸம்ஸாரஸாகரோ கோஷ்பதாயதே ॥*

**यस्य**-எவருடைய, **प्रसादात्** -அநுக்ரஹத்தால், **संसारसागरः**-ஸம்ஸாரமென்னும் கடல், **गोष्पदायते**-மாட்டுக்குள்ம்படிபோல் சிறிதாக ஆகிவிடுகிறதோ (அந்த), **बन्धमुक्तं**-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவரும், **ब्रह्मनिष्ठं**-ப்ரஹ்மஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவரும், **कृत-कृत्यं**-செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடித்தவருமான, **गुरुं**-குருவை, **भजेत्** -ஸேவிக்கவேண்டும்.

*எவருடைய அனுக்கிரஹத்தினால் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரம், பசுவின் குளம்படிபோல், சிறிதாகி விடுகிறதோ, அப்பேற்பட்டவரும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டவரும் பிரஹ்மத்தில் நிலைத்தவரும், செய்யவேண்டியதை யெல்லாம் செய்து முடித்தவராயுமுள்ள, குருவை ஸேவிக்கவேண்டும்.* (258)

**शुश्रूषया सदा भक्त्या प्रणामैः विनयोक्तिभिः ।**
**प्रसन्नं गुरुमासाद्य प्रष्टव्यं ज्ञेयमात्मनः ॥ २५९ ॥**

*சுச்ருஷயா ஸதா பக்த்யா ப்ரணாமைர் விநயோக்திபி: ।*
*ப்ரஸந்நம் குருமாஸாத்ய ப்ரஷ்டவ்யம் ஜ்ஞேயமாத்மந: ॥*

**सदा**-எப்பொழுதும், **भक्त्या**-பக்தியோடு **शुश्रूषया**-பணிவிடையாலும், **प्रणामैः**-நமஸ்காரங்களாலும், **विनयोक्तिभिः**-வணக்கத்தைக் காட்டும் பேச்சுக்களாலும், **प्रसन्नं**-பிரீதி அடைந்த, **गुरुं**-குருவை, **आसाद्य**-நெருங்கி **आत्मनः**-தனக்கு, **ज्ञेयं**-அறியவேண்டிய தத்வம் **प्रष्टव्यं**-கேட்கவேண்டும்.

*எப்பொழுதும் பக்தியுடன் சுசுருஷை செய்து வருவதினாலும், நமஸ்காரங்களினாலும், வினயத்துடன் பேசுவதினாலும், குருவை ஸந்தோஷப்படுத்தி அவரிடம் நெருங்கி தனக்குத் தெரிந்துகொள்ளவேண்டியதைப்பற்றிக் கேட்கவேண்டும்* (259)

*(அ) கேட்கவேண்டிய விஷயத்தையும், கேட்கவேண்டிய முறையையும் மேல் ஆறு சுலோகங்களில் போதிக்கிறார்:—*

**भगवन् करुणासिन्धो भवसिन्धोर्भवांस्तरिः ।**
**यमाश्रित्याश्रमेणैव परं पारं गता बुधाः ॥ २६० ॥**

*பகவன் கருணைஸிந்தோ பவஸிந்தோர் பவாம்ஸ்தரி: I*
*யமாச்ரித்யாச்ரமேணைவ பரம் பாரம் கதா புதா: II*

**भगवन्** –பகவானே! **करुणासिन्धो**–கருணைக்கடலே! **भवान्** – தாங்கள், **भवसिन्धोः**–ஸம்ஸாரமென்னும் கடலுக்கு, **तरिः**–ஓடமாக விளங்குகிறீர். **यं**–எந்த உம்மை, **आश्रित्य**–அண்டி, **बुधाः**–புத்திசாலிகள், **अश्रमेणैव**–சிரமமில்லாமலேயே, **परं पारं**-(ஸம்ஸாரக்கடலின்) எதிர்கரையை. **गताः**–அடைந்திருக்கிறார்களோ.

*ஹேபகவன், கருணைக்கடலே, தாங்கள் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டுவதற்கு ஓடமாக விளங்குகிறீர்கள். வித்வான்கள் தங்களை அண்டி சிரமமன்னியிலேயே ஸம்ஸாரக்கடலைத்தாண்டி அக்கரைக்குப் போய்விட்டார்கள். (260)*

जन्मान्तरकृतानन्तपुण्यकर्मफलोदयः ।
अद्य संनिहितो यस्मात् त्वत्कृपापात्रमस्म्यहम् ॥ २६१ ॥

*ஜந்மாந்தரக்ருதாநந்த புண்யகர்மபலோதய: I*
*அத்ய ஸந்நிஹிதோ யஸ்மாத் த்வத்க்ருபாபாத்ர மஸ்ம்யஹம் II*

**यस्मात्** -எதனால், **अहं**-நான், **त्वत्कृपापात्रं**-உங்களுடைய கருணைக்கு இலக்காக, **अस्मि**–ஆகியிருக்கிறேனோ (ஆகையால்), **जन्मान्तरकृत**–முற்பிறவிகளில் செய்யப்பட்ட, **अनन्त**–ஏராளமான, **पुण्यकर्म**-புண்யகர்மாக்களுடைய, **फलोदयः**–பலாவிர்பாவமானது, **अद्य**- இப்பொழுது, **सन्निहितः**–நெருங்கிவிட்டது.

*முன் ஜன்மாக்களில் செய்திருக்கும் எல்லையற்ற புண்ய கர்மாக்கள் இப்பொழுது பலன் கொடுக்க ஆரம்பித்து விட்டன. அதனால் தான் தங்களுடைய கிருபைக்கு நான் பாத்திரமாகியிருக்கிறேன் பலபிறவிகளில் ஏராளமாகப் புண்யம் செய்தவர்களுக்குத்தான் குருகிருபை கிடைக்கும். (261)*

संप्रीतिमक्ष्णोः वदनप्रसादं आनन्दमन्तःकरणस्य सद्यः ।
विलोकनं ब्रह्मविदस्तनोति छिनत्ति मोहं सुगतिं व्यनक्ति ॥

*ஸம்ப்ரீதிமக்ஷ்ணோர் வதநப்ரஸாதம்*
*ஆநந்த மந்தஃகரணஸ்ய ஸத்ய: ।*
*விலோகநம் ப்ரஹ்மவிதஸ் தநோதி*
*சிநத்தி மோஹம் ஸுகதிம் வ்யநக்தி ॥*

**ब्रह्मविदः**–ப்ரஹ்ம ஞானியின், **विलोकनं**–கடாக்ஷமானது, **अक्ष्णोः** இருகண்களுக்கும், **संप्रीतिं**–ப்ரீதியையும், **वदनप्रसादं**–முகத்திற்குத் தெளிவையும், **सद्यः**–உடனே, **अन्तःकरणस्य**–மனதிற்கு, **आनन्दं**–ஆனந்தத்தையும், **तनोति**–உண்டுபண்ணுகிறது. **मोहं**–அக்ஞானத்தை, **छिनत्ति**–தொலைக்கிறது, **सुगतिं**–நற்கதியை, **व्यनक्ति**–வெளிப்படுத்துகிறது.

*பிரஹ்மவித்தின் கடாக்ஷ வீக்ஷணமானது (பிரஹ்மவித்தைப் பார்ப்பது என்றும் வைத்துக்கொள்ளலாம்) உடனே இரு கண்களுக்கு விசேஷப் ப்ரீதியையும், முகத்தில் தெளிவையும் மனதில் ஆனந்தத்தையும் கொடுக்கிறது. மோஹத்தைப் பிளந்து விடுகிறது. நல்ல கதியைத் தெளிவுபடுத்துகிறது.*

**हुताशनानां शशिनामिनानामप्यर्बुदं वाऽपि न यन्निहन्तुम् ।**
**शक्नोति तद्ध्वान्तमनन्तमान्तरं हन्त्यात्मवेत्ता सकृदीक्षणेन ॥**

*ஹுதாஶநாநாம் ஶஶிநாமிநாநாம்*
*அப்யர்புதம் வாऽபி ந யந் நிஹந்தும் ।*
*ஶக்நோதி தத் த்வாந்தமநந்தமாந்தரம்*
*ஹந்த்யாத்மவேத்தா ஸக்ருதீக்ஷணேந ॥*

**हुताशनानां**–அக்னிகளுடையவும், **शशिनां**–சந்திரன்களுடையவும், **इनानामपि**–ஸூர்யர்களுடையவும், **अर्बुदं वाऽपि**–பத்து கோடியும், **यत्**–எதை, **निहन्तुं**–போக்குவதற்கு, **न शक्नोति**–முடியாதோ, **तत्**–அந்த **अनन्तं**–முடிவில்லாத, **आन्तरं**–மனதிலுள்ள, **ध्वान्तं**–அக்ஞான இருளை, **आत्मवेत्ता**–ஆத்மஞானி, **सकृत्**–ஒரு தடவை, **ईक्षणेन**–கடாக்ஷத்தால், **हन्ति**–போக்குகிறார்.

*பத்துகோடி அக்னிகளோ, சந்திரன்களோ, ஸூர்யன்களோ சேர்ந்து வந்தாலும் கூட மனதிலுள்ள முடிவற்ற அக்ஞான இருளைப் போக்க முடியாது. ஆனால் ஆத்மஞானி ஒருதடவை*

பார்வையினலேயே (பார்க்கப்படுவதினலேயே) அந்த அச்ஞான இருளை போக்கடித்து விடுகிருர். இதைத்தவிற வேறுவிதமாக முடிவு இல்லாததால் அது அநந்தம். (263)

दुष्पारे भवसागरे जनिमृतिव्याध्यादिदुःखोत्कटे
घोरे पुत्रकलत्रमित्रबहुलग्राहाकरे भीकरे ।
कर्मोत्तुङ्गतरङ्गभङ्गनिकरैः आकृष्यमाणो मुहुः
यातायातगतिभ्रमेण शरणं किंचिन्न पश्याम्यहम् ॥ २६४ ॥

துஷ்பாரே பவஸாகரே ஜநிம்ருதிவ்யாத்யாதி
துःகோத்கடே
கோரே புத்ரகளத்ரமித்ரபஹுளக்ராஹாகரே பீகரே ।
கர்மோத்துங்கதரங்கபங்கநிகரைராக்ருஷ்யமாணோ
முஹுः
யாதாயாதகதிப்ரமேண ஶரணம் கிஞ்சித் ந
பச்யாம்யஹம் ॥

**दुष्पारे**-சிரமப்பட்டு அடையக்கூடிய அக்கரையை உடையதும், **जनिमृतिव्याध्यादि**-பிறவி, மரணம், வியாதி முதலியவைகளால் உண்டாகும், **दुःखोत्कटे**-துன்பங்கள் நிறைந்ததும, **घोरे**-கோரமானதும் **पुत्रकलत्रमित्र**-பிள்ளைகள், மனைவி, நண்பர்கள இவர்களாகிற, **बहुल-ग्राहाकरे**-அநேகம் முதலைகளுக்கு இருப்பிடமானதும், **भीकरे**-பயங்கரமானதுமான, **भवसागरे**-ஸம்ஸாரக்கடலில், **कर्मोत्तुङ्गतरङ्गभङ्गनिकरैः**-கர்மாக்களாகிற உயரமான பற்பல அலைகளின் கூட்டங்களாலும், **यातायातगतिभ्रमेण**-போவது, வருவது என்ற கதியாகிற சுழலினலும், **मुहुः**-அடிக்கடி, **आकृष्यमाणः**-இழுக்கப்படுகிற, **अहं**-நான், **शरणं**-காப்பாற்றுகிற, **किंचित्**-ஒன்றையும், **न पश्यामि**-பார்க்கவில்லை.

அக்கரை சேரமுடியாததாய் ஜனனம் மரணம் வியாதி முதலான துக்கங்கள் நிறைந்ததாய், மிகவும் கோரமாய், புத்ரன், மனைவி மித்திரன் முதலான பலவித முதலைகள் கூடியிருப்பதாய், பயங்கரமாய் இருக்கும் ஸம்ஸாரமாகிற ஸாகரத்தில், கர்மாக்களாகிற உயரமான பலவித அலைகளின் கூட்டங்களினலும், போகிறது வருகிறது என்ற நிலமையாகிற சுழலினலும், அடிக்கடி இழுக்கப்பட்டவனுக இருந்துவரும் நான் சரணமாக (என்னை காப்பாற்றக் கூடியதாக) எதையும் காணவில்லை. (264)

केन वा पुण्यशेषेण तव पादाम्बुजद्वयम् ।
दृष्टवानस्मि मामार्तं मृत्योस्त्राहि दयादृशा ॥ २६५ ॥

கேந வா புண்யஶேஷேண தவ பாதாம்புஜத்வயம் ।
த்ருஷ்டவானஸ்மி மாமார்த்தம் ம்ருத்யோஸ்த்ராஹி
தயாத்ருஶா ॥

**केन वा पुण्यशेषेण**-மீதியிருந்த ஏதோ புண்யவசத்தால், **तव**-உங்களுடைய, **पादाम्बुजद्वयं**-தாமரைபோன்ற இருதிருவடிகளையும், **दृष्टवानस्मि**-பார்த்துவிட்டவனுயிருக்கிறேன், **आर्तं**-துன்பமடைந்த, **मां**-என்னை, **दयादृशा**-கருணை கடாக்ஷத்தால், **मृत्योः**-மரணத்திலிருந்து, **त्राहि**-காப்பாற்றவேணும்.

ஏதோ பாக்கியிருந்த புண்ணியத்தினுல் தங்களுடைய இரு பாதாரவிந்தங்களையும் தர்சித்துவிட்டேன் மிகவும் துக்கப்படும் என்னை தாங்கள் தயையோடு கூடிய பார்வையினுல் மிருத்யுவிடமிருந்து காப்பாற்றிவிடுங்கள். (265)

(அ) இவ்விதம் வினயத்தோடு பிரார்த்திக்கும் சிஷ்யனுக்கு குருவானவர் உடனே அபயப் பிரதானம் செய்து பயத்திற்குக் காரணமேயில்லை யென்று உபதேசிக்கவேண்டிய கிரமத்தையும் ஸ்ரீமத் ஆசார்யார் காட்டுகிறுர்:—

वदन्तमेवं तं शिष्यं दृष्ट्वैव दयया गुरुः ।
दद्यादभयमेतस्मै मा भैष्टेति मुहुर्मुहुः ॥ २६६ ॥

வதந்தமேவம் தம் ஶிஷ்யம் த்ருஷ்ட்வைவ தயயா குரு: ।
தத்யாதபயமேதஸ்மை மாபைஷ்டேதி முஹுர்முஹு: ॥

**एवं**-இவ்வாறு, **वदन्तं**-சொல்கிற, **तं**-அந்த, **शिष्यं**-சிஷ்யனை, **दयया**-கருணையால், **दृष्ट्वैव**-கடாக்ஷித்து, **गुरुः**-குருவானவர், **मुहुर्मुहुः**-அடிக்கடி, **मा भैष्ट**-பயப்படவேண்டாம், **इति**-என்று, **एतस्मै**-இந்த சிஷ்யனுக்கு, **अभयं दद्यात्**-அபயப்ரதானம் செய்யவேண்டும்.

இவ்விதம் சொல்லும் அந்த சிஷ்யனை குரு கருணையுடன் கடாக்ஷித்து அடிக்கடி பயப்படாதே பயப்படாதே என்று அவனுக்கு அபயம்கொடுக்கவேண்டும். (266)

विद्वन् मृत्युभयं जहीहि भवतो नास्त्येव मृत्युः क्वचित्
नित्यस्य द्वयवर्जितस्य परमानन्दात्मनो ब्रह्मणः ।
भ्रान्त्या किंचिदवेक्ष्य भीतमनसा मिथ्या त्वया कथ्यते
मां त्राहीति हि सुप्तवत् प्रलपनं शून्यात्मकं ते मृषा ॥

வித்வன் ம்ருத்யுபயம் ஜஹீஹி பவதோ நாஸ்த்யேவ
ம்ருத்யு: க்வசித்
நித்யஸ்ய த்வயவர்ஜிதஸ்ய பரமாநந்தாத்மநோ
ப்ரஹ்மண: ।
ப்ராந்த்யா கிஞ்சிதவேக்ஷ்ய பீதமநஸா மித்யா த்வயா
கத்யதே
மாம் த்ராஹீதி ஹி ஸுப்தவத் ப்ரலபநம்
ஶூந்யாத்மகம் தே ம்ருஷா ॥

**विद्वन्**-அறிவுள்ளவனே, **मृत्युभयं**-மரணபயத்தை, **जहीहि**-விட்டுவிடு, **नित्यस्य**-அழிவற்றவனும், **द्वयवर्जितस्य**-இரண்டற்றவனும், **परमानन्दात्मनः**-உயர்ந்த ஆனந்தஸ்வரூபனும், **ब्रह्मणः**-ப்ரஹ்மஸ்வரூபமாயுமுள்ள, **भवतः**-உனக்கு, **क्वचित्**-ஒரு இடத்திலும், **मृत्युः**-மரணம், **नास्त्येव**-கிடையவே கிடையாது, **भ्रान्त्या**-ப்ரமத்தினால், **किंचित्**-வேறாக எதையோ, **अवेक्ष्य**-பார்த்து, **भीतमनसा**-பயந்த மனமுள்ள, **त्वया**-உன்னால், **मां**-என்னை, **त्राहि**-காப்பாற்று, **इति**-என்று, **मिथ्या**-பொய்யாக, **कथ्यते**-சொல்லப்படுகிறது, **ते**-உன்னுடைய, **प्रलपनं**-பிதற்றல், **सुप्तवत्**-தூங்குகிறவனுடையதுபோல், **मृषा**-பொய்யானது, **शून्यात्मकं**-அர்த்தமில்லாதது.

ஏ அறிவுள்ளவனே, மரண பயத்தை விட்டுவிடு. நித்யமாயும் இரண்டாவதற்றதாயும் மேலான ஆனந்த ஸ்வரூபமாயும் பிரஹ்மமாயும் இருக்கும் உனக்கு எவ்விடத்திலும் எக்காலத்திலும் எதிலிருந்தும் மிருத்யு கிடையவே கிடையாது. பிராந்தியினால் எதையோ பார்த்து விட்டு பயந்த மனஸுடன் "என்னைக் காப்பாற்று" என்று பொய்யாக உன்னால் சொல்லப்படுகிறது. தூக்கத்தில் ஸ்வப்னம் கண்டவன் பிதற்றுவதுபோல் நீயும் பிதற்றுகிறாய். உன் வாக்கியத்திற்கு அர்த்தமேயில்லை. வெறும் பொய்.

நித்யம், இரண்டாவதற்றது, பரமானந்த ஸ்வரூபம்; பிரஹ்மமாயிருத்தல், என்ற ஒவ்வொரு அம்சமும் பயத்திற்கு நிமித்தமில்லை யென்பதைக் காட்டுகிறது. நித்யமானதினால் நாசத்திற்கு இடமில்லை. இரண்டாவது எதுவும் இல்லாததினால் பயப்படுத்தக் கூடியதொன்றுமில்லை. ஆனந்தமே ஸ்வரூபமான தினால் துக்கத்திற்கு அவகாசமில்லை. மிகப்பெரிதானதினால் பயப்படவேண்டியதில்லை. அப்படியிருந்தும் பயம் ஏற்பட்டிருக்கிறதே, அதற்குக் காரணம் என்னவென்றால், பிராந்தியைத்தவிர வேறு காரணம் சொல்ல முடியாது. தூக்கத்தில், வாஸ்தவமாக எவ்வித நிமித்தமும் இல்லாமல் இருக்கும் போது, ஸ்வப்னம் கண்டு பயப்படுவது எப்படியோ, அப்படியே தான் இதுவும்.

(அ) ஸ்வப்னதிருஷ்டாந்தத்தை விவரித்துச் சொல்கிறார்:—

निद्रागाढतमोवृतः किल जनः स्वप्ने भुजङ्गादिना
ग्रस्तं स्वं समवेक्ष्य यत् प्रलपति त्रासात् हतोऽस्मीत्यलम् ।
आप्तेन प्रतिबोधितः करतलेनाताड्य पृष्टः स्वयं
किंचिन्नेति वदत्यमुष्य वचनं स्यात् तत् किमर्थं वद ॥ २६८ ॥

நித்ராகாடதமோவ்ருத: கில ஜந: ஸ்வப்நே புஜங்காதிநா
க்ரஸ்தம் ஸ்வம் ஸமவேக்ஷ்ய யத் ப்ரலபதி த்ராஸாத்
ஹதோऽஸ்மீத்யலம் ।
ஆப்தேந ப்ரதிபோதித: கரதலேநாதாட்ய ப்ருஷ்ட:
ஸ்வயம்
கிஞ்சிந்நேதி வதத்யமுஷ்ய வசநம் ஸ்யாத் தத் கிமர்த்தம்
வத ॥

**निद्रा**—தூக்கமாகிற, **गाढतमोवृतः**—நல்ல இருளினால் சூழப்பட்ட **जनः**—மனிதன், **स्वप्ने**—ஸ்வப்னத்தில், **भुजङ्गादिना**—பாம்பு முதலியவற்றால், **ग्रस्तं**—பிடிக்கப்பட்டதாக, **स्वं**—தன்னை, **समवेक्ष्य**—பார்த்து, **त्रासात्**—பயத்தால், "**हतोऽस्मि**—கொல்லப்பட்டிருக்கிறேன்" **इति**—என்று, **यत्**—எதனால், **अलं**—நன்றாக, **प्रलपति**-புலம்புகிறானோ (பிறகு), **आप्तेन**—நண்பனால், **करतलेन**—கையால், **आताड्य**-தட்டி, **प्रतिबोधितः**—எழுப்பப்பட்டு, **पृष्टः**- கேட்கப்பட்டவனாய், **स्वयं**—தானாகவே, **किंचित् न**—ஒன்றும் இல்லை **इति**-என்று, **वदति**—சொல்கிறான், **तत्**—ஆகையால்,

**अमुष्य**–அவனுடைய, **वचनं**–வார்த்தை, **किमर्थं**–என்ன பொருளை உடையதாக, **स्यात्**–இருக்கும்? **वद**–சொல் (அவன் வார்த்தைக்குப் பொருளே கிடையாது பொய்தான்).

நன்றாகத் தூங்கும் பொழுது ஸ்வப்னத்தில் மனிதன் தன்னை ஸர்ப்பம் முதலானது பிடித்துக்கொண்டு விட்டதாகப் பார்த்து பயத்தினால் "நான் கொல்லப்பட்டு விட்டேன்" என்று கதறுகிறானல்லவா? அச்சமயம் ஒரு நண்பன் கையால் தட்டி அவனை எழுப்பி ஏன் கதறினாய் என்று கேட்டால் அவன் "ஒன்றுமில்லை" என்று தானாகவே சொல்கிறானே! ஆகவே அவனுடைய வார்த்தை பொய்தானே! முதலில் அவன் சொன்ன வார்த்தைக்கு ஏதாவது பொருள் உண்டா? சொல்

ஸ்வப்னத்திலிருந்து விழித்துக்கொண்ட பிறகு "தான் ஸ்வப்னகாலத்தில் பிதற்றினதற்கு வாஸ்தவமாக எவ்வித காரணமும் கிடையாது. இருந்ததாக நினைத்து பிராந்தியினால் பிதற்றினோம்" என்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்படுவதினால் தான் "ஒன்றுமில்லை" என்று சொல்கிறான். தூங்கி ஸ்வப்னம் காணும் போதுதான் இல்லாத பதார்த்தம் இருப்பதாகத்தோன்றி பிரமத்தை யுண்டுபண்ணுகிறது என்பதில்லை, விழித்துக் கொண்டிருக்கும்போதே பிரமம் ஏற்படுவதுமுண்டு என்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார். (268)

रज्जोस्तु तत्त्वमनवेक्ष्य गृहीतसर्प-
भावः पुमान् अयमहिर्वसतीति मोहात् ।
आक्रोशति प्रतिबिभेति च कम्पते तत्
मिथ्यैव नात्र भुजगोऽस्ति विचार्यमाणे ॥ २६९ ॥

ரஜ்ஜோஸ்து தத்வமநவேக்ஷ்ய க்ருஹீதஸர்ப்ப
பாவ: புமாநயமஹிர் வஸதீதி மோஹாத் ।
ஆக்ரோஶதி ப்ரதிபிபேதி ச கம்பதே தத்
மித்யைவ நாத்ர புஜகோऽஸ்தி விசார்யமாணே ॥

**रज्जोः**–கயிற்றின், **तत्त्वं**–உண்மையை, **अनवेक्ष्य**–கவனிக்காமல், **गृहीतसर्पभावः**–பாம்பு இருப்பதாக எண்ணிக்கொண்ட, **पुमान्**–மனிதன் "**अयं अहिः वसति**–இது பாம்பு, வஸிக்கிறது" **इति**–என்று **मोहात्**–

ப்ராந்தியினால், आक्रोशति–கத்துகிறான், प्रतिबिभेति–பயப்படுகிறான், कम्पते च–நடுங்குகிறான், तत्–அது, मिथ्यैव–பொய்தான், विचार्यमाणे–நன்கு கவனித்துப்பார்க்கும்பொழுது, अत्र–இங்கு, भुजगः–பாம்பு नास्ति–இல்லை.

வாஸ்தவமாகக் கயிறு இருப்பதைப் பார்க்காமல், மோஹத்தினால் ஸர்ப்பமிருப்பதாக எண்ணிக்கொண்ட மனிதன் "இது ஸர்ப்பம். இது இங்கேயிருக்கிறது" என்று சப்தமிடுகிறான், பயப்படுகிறான், நடுங்குகிறான். இது பொய்யேதான். இங்கே கவனித்து விசாரித்துப்பார்த்தால் ஸர்ப்பமே கிடையாது. (269)

तद्वत् त्वयाऽप्यात्मन उक्तमेतत् जन्माप्ययव्याधिजरादिदुःखम् ।
मृषैव सर्वं भ्रमकल्पितं ते सम्यग्विचार्यात्मनि मुञ्च भीतिम् ॥

தத்வத் த்வயாऽப்யாத்மந உக்தமேதத்
ஜன்மாப்யய வ்யாதி ஜராதிதுக்கம் ।
ம்ருஷைவ ஸர்வம் ப்ரமகல்பிதம் தே
ஸம்யக் விசார்யாத்மநி முஞ்ச பீதிம் ॥

तद्वत्–அதுபோல், त्वया–உன்னால், उक्तं–சொல்லப்பட்ட, एतत्–இந்த, आत्मनः–ஆத்மாவினுடைய, जन्माप्ययव्याधिजरादिदुःखमपि–பிறவி, மரணம், பிணி, மூப்பு முதலியவைகளால் உண்டாகும் துன்பமும் मृषैव–பொய்தான், सर्वं–எல்லாம், ते–உன்னுடைய, भ्रमकल्पितं–பிராந்தியினால் கல்பிக்கப்பட்டது, सम्यक्–நன்றாக, विचार्य–ஆராய்ந்து பார்த்து, आत्मनि–ஆத்மாவில், भीतिं–பயத்தை, मुञ्च–விட்டு விடு.

அது போலவே தனக்கு பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, முதலான துக்கமிருப்பதாக உன்னால் சொல்லப்பட்டதே, அது எல்லாம் பொய்தான். உன்னிடத்தில் பிரமத்தினால் கல்பிக்கப்பட்டது. நன்கு விசாரித்துப்பார்த்து தன்னிடமுள்ள பயத்தை விட்டு விடு. (270)

भवान् अनात्मनो धर्मान् आत्मन्यारोप्य शोचति ।
तदज्ञानकृतं सर्वं भयं त्यक्त्वा सुखी भव ॥ २७१ ॥

பவாநநாத்மநோ தர்மாநாத்மந்யாரோப்ய ஶோசதி ।
ததஜ்ஞாநக்ருதம் ஸர்வம் பயம் த்யக்த்வா ஸுகீ பவ ॥

**भवान्** -நீ, **अनात्मनः**-ஆத்மாவைக்காட்டிலும் வேறான வஸ்துவின் **धर्मान्**-தர்மங்களை, **आत्मनि**-ஆத்மாவில், **आरोप्य**-(பிராந்தியால்) இருப்பதாக எண்ணி, **शोचसि**-துக்கப்படுகிறாய், **तत्** -ஆகையால், **अज्ञानकृतं**-அஜ்ஞானத்தால் ஏற்பட்ட, **सर्वं भयं**-எல்லா பயத்தையும், **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **सुखी भव**-ஸுகமாக இரு.

*ஆத்மாவல்லாதது எதுவோ, அதன் லக்ஷணங்களை ஆத்மாவினிடத்தில் ஏற்றிக்கொண்டு, சோகத்தையடைகிறாய். ஆகையால் அறிவின்மையால் ஏற்பட்டிருக்கும் எல்லா பயத்தையும் விட்டு விட்டு ஸுகமாக இரு.* **(271)**

*(அ) இவ்விதம் குரு தெளிவாக எடுத்துச் சொன்னது சிஷ்யனுக்கு நன்கு புரிந்துவிட்ட போதிலும் அனுபவத்திற்கு வராததினால் பலவித ஸந்தேகங்கள் ஏற்படுகின்றன அவைகளை யும் நிவிருத்தி செய்து கொடுக்கும்படி குருவை மிக வணக்கத் துடன் பிரார்த்தித்துக்கேட்டுக்கொள்கிறான்:—*

**शिष्यः**—

**श्रीमद्भिरुक्तं सकलं मृषेति दृष्टान्त एव ह्युपपद्यते तत् ।**
**दार्ष्टान्तिके नैव भवादिदुःखं प्रत्यक्षतः सर्वजनप्रसिद्धम् ॥**

*ச்ரீமத்பிருக்தம் ஸகலம் ம்ருஷேதி*
*த்ருஷ்டாந்த ஏவ ஹ்யுபபத்யதே தத் ।*
*தார்ஷ்டாந்திகே நைவ பவாதிதுக்கம்*
*ப்ரத்யக்ஷத: ஸர்வஜநப்ரஸித்தம் ॥*

**शिष्यः**-சிஷ்யன் (கேட்கிறான்).

**सकलं**-எல்லாம், **मृषा**-பொய், **इति**-என்று, **श्रीमद्भिः**-தாங்களால் **उक्तं**-சொல்லப்பட்டது, **दृष्टान्ते एव**-த்ருஷ்டாந்தத்தில்தான், **उपपद्यते**-பொருந்துகிறது, **तत्** -அது, **दार्ष्टान्तिके**-தார்ஷ்டாந்திகத்தில், **नैव**-பொருந்தவே இல்லை (ஏனெனில்), **भवादिदुःखं**-பிறப்பு முதலானதால் உண்டாகும் துன்பம், **प्रत्यक्षतः**-நேராக, **सर्वजनप्रसिद्धं**-எல்லா ஜனங் களுக்கும் பிரஸித்தமானது.

*எல்லாம் பொய் என்று தாங்கள் சொன்னது திருஷ்டாந்தத் தில் தான் பொருந்துகிறது. தார்ஷ்டாந்திகத்தில் அது*

பொருந்தவேயில்லை. ஏனென்றால் ஸம்ஸாரம் முதலான துக்கம் பிரத்யக்ஷமாக ஸகல ஜனங்களாலும் அனுபவிக்கப்படுகிறதே! என்று சிஷ்யன் தன் ஸந்தேகங்களையெல்லாம் கேட்க ஆரம்பிக்கிறான். (272)

प्रत्यक्षेणानुभूतार्थः कथं मिथ्यात्वमर्हति ।
चक्षुषो विषयं कुम्भं कथं मिथ्या करोम्यहम् ॥ २७३ ॥

*ப்ரத்யக்ஷேணாநுபூதார்த்த: கதம் மித்யாத்வமர்ஹதி ।*
*சக்ஷுஷோ விஷயம் கும்பம் கதம் மித்யா கரோம்யஹம் ॥*

**प्रत्यक्षेण**-பிரத்யக்ஷ பிரமாணத்தால், **अनुभूत**-அனுபவிக்கப்பட்ட, **अर्थः**-வஸ்து, **कथं**-எப்படி, **मिथ्यात्वमर्हति**-பொய்த்தன்மையை அடையும்? **चक्षुषः**-கண்பார்வைக்கு, **विषयं**-இலக்காக இருக்கும், **कुम्भं**-குடத்தை, **अहं**-நான், **कथं**-எவ்வாறு, **मिथ्याकरोमि**-பொய்யாகச் செய்வேன்?

*நாம் பிரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும் பொருளை எப்படிப் பொய்யென்று கூறமுடியும்? எதிரில் குடம் வைத்திருக்கிறது. நேரில் நான் என்கண்களால் பார்க்கிறேன். இக்குடத்தை எப்படிப்பொய்யாக ஆக்கமுடியும்?* (273)

विद्यमानस्य मिथ्यात्वं कथं नु घटते प्रभो ।
प्रत्यक्षं खलु सर्वेषां प्रमाणं प्रस्फुटार्थकम् ॥ २७४ ॥

*வித்யமாநஸ்ய மித்யாத்வம் கதம் நு கடதே ப்ரபோ ।*
*ப்ரத்யக்ஷம் கலு ஸர்வேஷாம் ப்ரமாணம்*
*ப்ரஸ்புடார்த்தகம் ॥*

**भो**-பிரபுவே! **विद्यमानस्य**-இருக்கும் பொருளுக்கு, **मिथ्यात्वं**-பொய்த்தன்மை, **कथं नु घटते**-எப்படிப்பொருந்தும்? **सर्वेषां**-எல்லோருக்கும், **प्रत्यक्षं**-பிரத்யக்ஷமானது, **प्रस्फुटार्थकं**-பொருளை நன்கு தெளிவாகக் காட்டும், **प्रमाणं खलु**-பிரமாணமல்லவா!

*உலகில் எல்லோருக்கும் பிரத்யக்ஷம் தான் பொருளை நன்கு விளக்கிக் காட்டும் பிரமாணம் இந்த பிரத்யக்ஷப்பிரமாணத்தால் வஸ்து இருப்பது நன்கு தெரிகிறது. என் கண்ணால் நேரில் நான் காணும் பொருள் நிச்சயமாக அங்கு இருக்கும் பொழுது*

அந்தப்பொருள் இல்லையென்றே, பொய் என்றே எப்படிக்கூற முடியும்? (274)

मर्त्यस्य मम जन्मादिदुःखभाजोऽल्पजीविनः ।
ब्रह्मत्वं अपि नित्यत्वं परमानन्दता कथम् ॥ २७५ ॥

மர்த்யஸ்ய மம ஜந்மாதிதுக்கபாஜோऽல்பஜீவிந: ।
ப்ரஹ்மத்வமபி நித்யத்வம் பரமாநந்ததா கதம் ॥

**मर्त्यस्य**—மரணமடைகிறவனும், **जन्मादिदुःखभाजः**—பிறவி முதலிய வற்றால் துன்பமடைகிறவனும், **अल्पजीविनः**—சிறிது காலமே வாழ்கிறவனுமான, **मम**—எனக்கு, **ब्रह्मत्वं**—மிகப்பெரியதான ப்ரஹ்மத்தன்மையும், **नित्यत्वं**—உத்பத்திவிநாசமில்லாதிருக்கும் தன்மையும், **परमानन्दतापि**—பரமானந்தத்தன்மையும், **कथम्**—எப்படிப்பொருந்தும்?

நான் மரணம் (நாசம்) அடைபவன். எனக்குப்பிறவி முதலானவைகளால் துக்கமுண்டு. சிறிது காலமே நான் வாழ்பவன். இப்பேற்பட்ட நான் ப்ரஹ்மமாகவும் அதாவது எல்லாவற்றையும்விட மிகப்பெரியவனாகவும், பிறப்பு நாசங்களற்றவனாகவும், மேலான ஆனந்த ரூபியாகவும் எப்படி ஆகமுடியும்?

क आत्मा कस्त्वनात्मा च किमु लक्षणमेतयोः ।
आत्मन्यनात्मधर्माणां आरोपः क्रियते कथम् ॥ २७६ ॥

किं अज्ञानं तदुत्पन्नभयत्यागोऽपि वा कथम् ।
किमु ज्ञानं तदुत्पन्नसुखप्राप्तिश्च वा कथम् ॥ २७७ ॥

सर्वमेतत् यथापूर्वं करामलकवत् स्फुटम् ।
प्रतिपादय मे स्वामिन् श्रीगुरो करुणानिधे ॥ २७८ ॥

க ஆத்மா கஸ்த்வநாத்மா ச கிமு லக்ஷணமேதயோ: ।
ஆத்மந்யநாத்மதர்மாணுமாரோப: க்ரியதே கதம் ॥

கிமக்ஞாநம் தது்த்பந்நபயத்யாகோऽபி வா கதம் ।
கிமு ஞாநம் தது்த்பந்நஸுகப்ராப்திச்ச வா கதம் ॥

ஸர்வமேதத் யதாபூர்வம் கராமலகவத் ஸ்புடம் ।
ப்ரதிபாதய மே ஸ்வாமின் ச்ரீகுரோ கருணாநிதே ॥

कः–எது, आत्मा–ஆத்மா? अनात्मा च–அநாத்மாவும், कस्तु–எது एतयोः–இவ்விரண்டுகளுடைய, लक्षणं–லக்ஷணம், किमु–என்ன? आत्मनि–ஆத்மாவில், अनात्मधर्माणां–அநாத்மாவினுடைய தர்மங்களின், आरोपः–ஆரோபம், कथं–எவ்விதம், क्रियते–செய்யப்படுகிறது?

किं अज्ञानं–அக்ஞானம் எது? तदुत्पन्नभयत्यागोऽपि वा–அதனுல் உண்டான பயத்தை விடுவதும், कथम्–எப்படி? किमु ज्ञानं–ஞானம் எது? तदुत्पन्नसुखप्राप्तिश्च वा–அதனுலுண்டான ஸுகத்தை அடைவதும், कथम्–எப்படி?

स्वामिन्–ஹே ஸ்வாமியே, श्रीगुरो–ஸ்ரீ குருவே, करुणानिधे–கருணாநிதியே, एतत् सर्वं–இது எல்லாவற்றையும், यथापूर्वं–முன்போல், करामलकवत्–உள்ளங்கையில் விளங்கும் நெல்லிக்கனிபோல, स्फुटम्–தெளிவாக, मे–எனக்கு, प्रतिपादय–விளக்கவேண்டும்.

*ஆத்மா எது? அநாத்மா எது? இவ்விரண்டிற்கும் லக்ஷணம் என்ன? ஆத்மாவிடத்தில் அநாத்மாக்களின் தர்மங்களை எவ்விதம் ஆரோபம் செய்யப்படுகிறது? அக்ஞானம் என்பது என்ன? அதினுல் ஏற்படும பயத்தை விடுவது தான் எப்படி? ஞானம் என்பது என்ன? அதினுல் ஏற்படும் ஸுகத்தின் பிராப்திதான் எப்படி? ஹே ஸ்வாமின், ஸ்ரீகுரோ, கருணாநிதே, இது எல்லாவற்றையும் முன்போல கையிலுள்ள நெல்லிக்கனிபோல தெளிவாக எனக்கு எடுத்துச் சொல்லுங்கள். (276-278)*

*(அ) இவ்வாறு சிஷ்யன் ஆத்மா, அநாத்மா, ஞானம், அக்ஞானம், மித்யாத்வம், அத்யாஸம், ஜீவப்ரஹ்மைக்யம், பந்த முக்தி, ஆனந்தப்ராப்தி இவைபற்றி தன்க்கு உபதேசிக்க வேண்டும் என்று பிரார்த்தித்ததும் குருவானவர் ச்லோகங்களால் சிஷ்யனையும் அவனுடைய கேள்வியையும் புகழ்ந்து விட்டு பிறகு அவன் கேட்டதற்கெல்லாம் ஸமாதானம் கூறுகிறுர்:—*

श्रीगुरुः–ஸ்ரீ குரு சொல்கிறுர்.

धन्यः कृतार्थस्त्वमहो विवेकः शिवप्रसादस्तव विद्यते महान् ।
विसृज्य तु प्राकृतलोकमार्गं ब्रह्मावगन्तुं यतसे यतस्त्वम् ॥ २७९ ॥

–தந்ய : க்ருதார்த்தஸ்த்வமஹோ விவேக :
ஶிவப்ரஸாதஸ்தவ வித்யதே மஹான் ।
விஸ்ருஜ்ய து ப்ராக்ருதலோகமார்க்கம்
ப்ரஹ்மாவகந்தும் யதஸே யதஸ்த்வம் ॥

त्वं–நீ, धन्यः–பாக்யசாலி, कृतार्थः–பயன்பெற்றவன். अहो विवेकः–ஆச்சரியமான விவேகம், तव–உனக்கு, महान् शिवप्रसादः–நிறைய, ஈசுவர அநுக்ரஹம், विद्यते–இருக்கிறது, यतः–ஏனெனில், त्वं–நீ, प्राकृतलोकमार्गं–பாமரஜனங்கள் செல்லும் வழியை, विसृज्य–விட்டுவிட்டு, ब्रह्म–ப்ரஹ்மஸ்வரூபத்தை, अवगन्तुं–அறிவதற்கு, यतसे–முயற்சிக்கிறாய்.

ஸாமான்யமாக பாமரஜனம் போகும் வழியை விட்டு விட்டு, நீயோ பிரஹ்மத்தை யறிந்துகொள்ளப் பிரயத்தினம் செய்கிறாய். அதனால் நீ பாக்யசாலி. நீ நினைத்த கார்யம் கைகூடும். நல்ல விவேகமுள்ள உனக்கு பகவானுடைய பிரஸாதம் பூர்ணமாக இருக்கிறது, (279)

शिवप्रसादेन विना न सिद्धिः शिवप्रसादेन विना न बुद्धिः ।
शिवप्रसादेन विना न युक्तिः शिवप्रसादेन विना न मुक्तिः ॥ २८० ॥

ஶிவப்ரஸாதேந விநா ந ஸித்தி:
ஶிவப்ரஸாதேந விநா ந புத்தி: ।
ஶிவப்ரஸாதேந விநா ந யுக்தி:
ஶிவப்ரஸாதேந விநா ந முக்தி: ॥

शिवप्रसादेन विना–ஈசனது அனுக்ரஹமில்லாமல், न सिद्धिः–காரியஸித்தி ஏற்படாது, शिवप्रसादेन विना–ஈசனது அருளில்லாமல், बुद्धिः न–ஞானம் ஏற்படாது. शिवप्रसादेन विना–ஈசுவரானுக்ரஹம் இல்லாமல், युक्तिः न–உபாயம் தெரியாது, शिवप्रसादेन विना–ஈசுவர அனுக்ரகமில்லாமல, न मुक्तिः–முக்தி கிடைககாது.

சிவனுடைய பிரஸாதமன்னியில் கார்யம் கைகூடாது. சிவனுடைய பிரஸாதமன்னியில் நல்ல புத்தி உண்டாகாது சிவனுடைய பிரஸாதமன்னியில் நல்ல யுக்தி தோன்றாது. சிவனுடைய பிரஸாதமன்னியில் மோக்ஷம் கிடையாது. (280)

**यस्य प्रसादेन विमुक्तसङ्गाः शुकादयः संसृतिबन्धमुक्ताः ।**
**तस्य प्रसादो बहुजन्मलभ्यो भक्त्येकगम्यो भवमुक्तिहेतुः ॥ २८१ ॥**

*யஸ்ய ப்ரஸாதேந விமுக்தஸங்கா :*
*ஶுகாதய :ஸம்ஸ்ருதிபந்த முக்தா : ।*
*தஸ்ய ப்ரஸாதோ பஹுஜந்மலப்யோ*
*பக்த்யேககம்யோ பவமுக்திஹேது : ॥*

**यस्य**-எவருடைய, **प्रसादेन**-அநுக்ரஹத்தால், **शुकादयः**-சுகர் முதலியவர்கள், **विमुक्तसङ्गाः**-பற்றுதலை விட்டவர்களாய், **संसृतिबन्धमुक्ताः**-ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்து விடுபட்டவர்களோ, **तस्य प्रसादः** அவருடைய அநுக்ரஹம், **बहुजन्मलभ्यः**-பல பிறவிகளுக்குப்பின் கிடைக்கக்கூடியது, **भक्त्येकगम्यः**-பக்தி ஒன்றினாலேயே அடையத் தக்கது, **भवमुक्तिहेतुः**-ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்குக் காரணம்.

*ஈசுவர பிரஸாதத்தினால் தான் ஸகல பற்றுகளையும் நீக்கி சுகர் முதலிய மஹான்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டிருக்கிறார்கள், அந்த ஈசுவரனுடைய பிரஸாதம் ஸுலபமாக எல்லோருக்கும் கிடைக்காது பல பிறவிகளில் ஏகாந்த பக்தியுடன் ஈசுவரனை உபாஸித்தவருக்குத் தான் பகவத் ப்ரஸாதம் கிடைக்கும். பகவத் ப்ரஸாதமிருந்தால்தான் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட முடியும்* (281)

**विवेको जन्तूनां प्रभवति जनिष्वेव बहुषु**
**प्रसादादेवैशात् बहुसुकृतपाकोदयवशात् ।**
**यतस्तस्मादेव त्वमपि परमार्थावगमने**
**कृतारम्भः पुंसामिदमिह विवेकस्य तु फलम् ॥ २८२ ॥**

*விவேகோ ஜந்தூநாம் ப்ரபவதி ஜநிஷ்வேவ பஹுஷு*
*ப்ரஸாதாதேவைஶாத் பஹுஸுக்ருத பாகோதயவஶாத் ।*
*யதஸ் தஸ்மாதேவ த்வமபி பரமார்த்தாவகமநே*
*க்ருதாரம்ப : பும்ஸாமிதமிஹ விவேகஸ்ய து பலம் ॥*

**यतः**-எதனால், **जन्तूनां**-பிராணிகளுக்கு, **बहुषु जनिष्वेव**-பல பிறவிகளில்தான், **बहुसुकृतपाकोदयवशात्**-அநேக புண்யங்களின்

பலன் தொடங்குவதற்கு அதீனமாக (உண்டாகும்), **ऐशात् प्रसादादेव**-ஈசுவரனின் அநுக்ரஹத்தாலேயே, **विवेकः**-விவேகம், **प्रभवति**-உண்டாகிறதோ, **तस्मादेव**-அதனாலேயே, **त्वमपि**-நீயும், **परमार्थावगमने**-மேலான வஸ்துவை அறிந்துகொள்வதில், **कृतारम्भः**-முயற்சி ஆரம்பித்துள்ளவனாயிருக்கிறாய், **इदं**-இது, **इह**-இவ்வுலகில், **पुंसां**-மனிதர்களுக்கு, **विवेकस्य**-விவேகத்தின், **फलम्**-பலன்.

*அநேக ஜன்மாக்களின் செய்த ஏராளமான புண்ணிய கர்மாக்களில் பலனாக ஈசுவரனுடைய பிரஸாதம் ஏற்பட்டு அதனாலேயே மனிதர்களுக்கு விவேகம் ஏற்படுகிறது. உனக்கு அந்த விவேகம் ஏற்பட்டிருப்பதால் தான் ஸத்யவஸ்துவான ஆத்மதத்வத்தை அறிந்துகொள்ள முயற்சி செய்கிறாய். இது தான் மனிதர்களுக்கு விவேகத்தின் பலன்.* *(282)*

**मर्त्यत्वसिद्धेरपि पुंस्त्वसिद्धेः विप्रत्वसिद्धेश्च विवेकसिद्धेः ।**
**वदन्ति मुख्यं फलमेव मोक्षं व्यर्थं समस्तं यदि चेन्न मोक्षः ॥**

*மர்த்யத்வ ஸித்தேரபி பும்ஸ்த்வஸித்தே:*
*விப்ரத்வஸித்தேச்ச விவேகஸித்தே: ।*
*வதந்தி முக்யம் பலமேவ மோக்ஷம்*
*வ்யர்த்தம் ஸமஸ்தம் யதி சேத் ந மோக்ஷ: ॥*

**मर्त्यत्वसिद्धेरपि**-மனுஷ்யத்தன்மை கிடைத்திருப்பதற்கும், **पुंस्त्वसिद्धेः**-புருஷத்தன்மை கிடைத்திருப்பதற்கும், **विप्रत्वसिद्धेश्च**-பிராமணத்தன்மை கிடைத்ததற்கும், **विवेकसिद्धेः**-விவேகம் ஏற்பட்டிருப்பதற்கும், **मुख्यं फलम्**-முக்ய பலனாக, **मोक्षमेव**-மோக்ஷத்தையே, **वदन्ति**-சொல்கிறார்கள். **मोक्षः**-மோக்ஷம், **यदि न चेत्**-ஏற்படாவிட்டால், **समस्तं**-எல்லாம், **व्यर्थं**-வீண்.

*மனுஷ்யப்பிறவி, அதிலும் புருஷ ஜன்ம, அதிலும் ப்ராஹ்மண்யம், விவேகம் இத்தனையும் ஏற்பட்டதற்குப்பலன், மோக்ஷம் தான். இவ்வளவும் இருந்தும் மோக்ஷத்தை அடைய ப்ரயத்னம் செய்யாவிடில் அவனுக்கு அத்தனையும் வீண் தான்.*

**प्रश्नः समीचीनतरस्तवायं यदात्मतत्त्वावगमे प्रवृत्तिः ।**
**ततस्तवैतत् सकलं समूलं निवेदयिष्यामि मुदा शृणुष्व ॥**

*ப்ரச்ந: ஸமீசீநதரஸ்தவாயம்*
*யதாத்மதத்வாவகமே ப்ரவ்ருத்தி: ।*
*ததஸ் தவைதத் ஸகலம் ஸமூலம்*
*நிவேதயிஷ்யாமி முதா ச்ருணுஷ்வ ॥*

**तव**-உன்னுடைய, **अयं**-இந்த, **प्रश्न**-கேள்வி, **समीचीनतरः**-மிகவும் சிலாக்யமானது, **यत्**-எதனுல், **आत्मतत्त्वावगमे**-ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதில், **प्रवृत्तिः**-(உனக்கு) ப்ரவ்ருத்தி ஏற்பட்டு உள்ளதோ, **ततः**-அதனுல், **तव**-உனக்கு, **मुदा**-ஸந்தோஷத்தோடு **एतत् सकलं**-இது எல்லாவற்றையும், **समूलं**-ஆதியோடு, **निवेदयिष्यामि**-தெரிவிக்கிறேன், **शृणुष्व**-கேள்.

*உன்னுடைய இந்தக் கேள்வி மிகவும் சிலாக்யமானது ஆத்மாவின் தத்வத்தை அறிந்துகொள்ள நீ பிரவிருத்தி செய்கிற படியால் உனக்கு அடியிலிருந்து எல்லாவற்றையும் ஸந்தோஷ மாகத் தெரிவிக்கிறேன். கேள்.* (284)

*(அ) முதலில் 275வது சலோகத்தில் கேட்ட கேள்விக்கு பதில் கூறுகிறார்:—*

**मर्त्यत्वं त्वयि कल्पितं भ्रमवशात् तेनैव जन्मादयः**
**तत्संभावितमेव दुःखमपि ते नो वस्तुतः तन्मृषा ।**
**निद्रामोहवशात् उपागतसुखं दुःखं च किं नु त्वया**
**सत्यत्वेन विलोकितं क्वचिदपि ब्रूहि प्रबोधागमे ॥ २८५ ॥**

*மர்த்யத்வம் த்வயி கல்பிதம் ப்ரமவசாத் தேநைவ ஜன்மாதய:*
*தத்ஸம்பாவிதமேவ துக்கமபி தே நோ வஸ்துதஸ் தன் ம்ருஷா ।*
*நித்ராமோஹவசாதுபாகதஸுகம் துக்கம் ச கிம் நு த்வயா*
*ஸத்யத்வேந விலோகிதம் க்வசிதபி ப்ரூஹி ப்ரபோதாகமே ॥*

**त्वयि**-உன்னிடம், **मर्त्यत्वं**-மனிதத்தன்மை, **भ्रमवशात्**-பிராந்தியினுல், **कल्पितं**-ஆரோபிக்கப்பட்டிருக்கிறது, **तेनैव**-அதனுல்தான்,

**जन्मादयः**–பிறவி முதலியவைகள். **ते**–உனக்கு, **दुःखमपि**–துக்கமும், **तत्संभावितमेव**–அதனுல ஆரோபிக்கப்பட்டதுதான், **वस्तुतः नो**–உண்மையாக இல்லை, **तत्**–அது, **मृषा**–பொய், **निद्रामोहवशात्**–தூக்கமாகிற மயக்கத்தால், **उपागतसुखं**–வந்த ஸுகமும், **दुःखं च**–துக்கமும், **प्रबोधागमे**–விழிப்புவந்தபின், **क्वचिदपि**–ஒரு இடத்திலாவது, **त्वया**–உன்னுல், **सत्यत्वेन**–உண்மையாக, **किं नु विलोकितं**–பார்க்கப்பட்டிருக்கிறதா, ? **ब्रूहि**–சொல்.

*மர்த்யத்வம் (மரணமடையும் தன்மை) மனுஷ்யத்தன்மை உனக்கு ஸ்வபாவத்தில் கிடையாது இது சரீரத்தைச் சேர்ந்தது. ப்ராந்தியினுல் இதை உன்னிடத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிருய். இதனுல் தான் பிறவி முதலானவைகளும் அவைகள் மூலம் துன்பமும் உன்னிடம் ஏற்படுவதாகத் தோன்றுகிறது. இது எல்லாம் உண்மையல்ல. பொய்தான். இரவில் தூக்கத்தில் சுய அறிவு இழந்த நிலையில் ஸுகமும் துக்கமும் உனக்கு ஏற்படுவதாகத் தோன்றுகிறது. ஒரு சமயத்திலாவது விழித்துக்கொண்டபின் அந்த ஸுகதுக்கங்களை நீ உண்மையென்று நம்புகிருயா ? தூக்கத்தில் காண்பதைப்போலவே விழித்திருக்கும் நிலையில் ஏற்படும் துக்கமும் பொய்தான். (285)*

**नाशेषलोकैरनुभूयमानः प्रत्यक्षतोऽयं सकलप्रपञ्चः ।**
**कथं मृषा स्यादिति शङ्कनीयं विचारशून्येन विमुह्यता त्वया ॥**

*நாசேஷ லோகைரநுபூயமாந:*
*ப்ரத்யக்ஷதோऽயம் ஸகலப்ரபஞ்ச: |*
*கதம் ம்ருஷா ஸ்யாதிதி சங்கனீயம்*
*விசாரசூந்யேந விமுஹ்யதா த்வயா ||*

**अशेषलोकैः**–எல்லா ஜனங்களாலும், **प्रत्यक्षतः**–நேராக, **अनुभूयमानः**–அனுபவிக்கப்படுகிற, **अयं**–இந்த, **सकलप्रपञ्चः**–எல்லா பிரபஞ்சமும், **कथं**–எப்படி, **मृषा**–பொய்யாக, **स्यात्**–ஆகும், **इति**–என்று, **विचारशून्येन**–விசாரமில்லாத, **विमुह्यता**–மோஹமடைகிற, **त्वया**–உன்னுல், **न शंकनीयं**–ஸந்தேஹப்படவேண்டாம்.

*எல்லா ஜனங்களாலும் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படுகிற இந்த எல்லா ப்ரபஞ்சமும் எப்படி பொய்யாக இருக்கும் என்று*

விசாரம் செய்யாமல் மோஹம் கொண்டு மற்றவர்களைப் போல் நீ கேள்வி கேட்க கூடாது. விசாரம் செய்து மோஹத்தை நீக்கியவர்கள் கேட்கமாட்டார்கள். (286)

दिवान्धदृष्टेस्तु दिवान्धकारः प्रत्यक्षसिद्धोऽपि स किं यथार्थः ।
तद्वत् भ्रमेणावगतः पदार्थो भ्रान्तस्य सत्यः सुमतेर्मृषैव ॥२८७॥

*திவாந்தத்ருஷ்டேஸ்து திவாந்தகார:*
*ப்ரத்யக்ஷஸித்தோऽபி ஸ கிம் யதார்த்த: ।*
*தத்வத் ப்ரமேணாவகத: பதார்த்தோ*
*ப்ராந்தஸ்ய ஸத்ய: ஸுமதேர் ம்ருஷைவ ॥*

**दिवान्धदृष्टे:**–பகலில கண் குருடாக உள்ள ஆந்தைக்கு, **दिवान्धकार:**–பகலில் இருட்டு, **प्रत्यक्षसिद्धोऽपि**–நேரில் கண்டபோதிலும், **स:**–அது, **यथार्थ: किम्**–உண்மையா? **तद्वत्**–அதுபோலவே, **भ्रमेण**–பிராந்தியால், **अवगत:**–அறிந்துகொள்ளப்பட்ட, **पदार्थ:**–வஸ்து, **भ्रान्तस्य**–மோஹமுள்ளவனுக்கு, **सत्य:**–உண்மை, **सुमतेस्तु**–நல்ல புத்தியுள்ளவனுக்கோவெனில், **मृषैव**–பொய்தான்.

பகலில் குருட்டுக்கண்ணுள்ள ஆந்தைக்கு பகலில் இருட்டு பிரத்யக்ஷமாகத் தெரிந்தபோதிலும் அந்த இருட்டு வாஸ்தவமாகி விடுமா? அது போலவே, பிரமத்தினால் காணப்படும் பதார்த்தம் பிராந்தனுக்கு ஸத்யமாகத்தோன்றிய போதிலும் பிராந்தியில்லாத நல்ல புத்தியுள்ளவனுக்குப் பொய் தான். (287)

घटोऽयमित्यत्र घटाभिधानः प्रत्यक्षतः कश्चिदुदेति दृष्टेः ।
विचार्यमाणे स तु नास्ति तत्र मृदस्ति तद्भावविलक्षणा सा ॥

*கடோऽயமித்யத்ர கடாபிதாந:*
*ப்ரத்யக்ஷத: கச்சிதுதேதி த்ருஷ்டே: ।*
*விசார்யமாணே ஸ து நாஸ்தி தத்ர*
*ம்ருதஸ்தி தத்பாவவிலக்ஷணா ஸா ॥*

**अयं घट:**–இது குடம், **इत्यत्र**–என்ற இடத்தில், **घटाभिधान:**–குடம் என்ற பெயருள்ள, **कश्चित्**–ஒரு பொருள், **प्रत्यक्षत:**–நேராக, **दृष्टे:**–கண் பார்வைக்கு, **उदेति**–தோன்றுகிறது, **विचार्यमाणे**–நன்கு

ஆராய்ந்து பார்க்கும்பொழுது, **स तु**—அந்த குடமோவெனில், **तत्र**—அங்கு **नास्ति**—இல்லை, **मृत**—மண்தான், **अस्ति**—இருக்கிறது. **सा**—அந்த மண் **तद्भावविलक्षणा**—குடத்தன்மையைக்காட்டிலும் மாறுபட்ட லக்ஷண முள்ளது.

*"இது குடம்" என்கிற இடத்தில் குடமென்ற பெயருள்ள ஒரு பதார்த்தம் கண்ணுக்கு பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. ஆனல் நன்கு விசாரித்துப் பார்த்தால் அங்கே அவ்வித பதார்த்தமே கிடையாது. மண்தான் இருக்கிறது. அது குடத்தின் தன்மைக்கு மாறுபட்ட தன்மையுள்ளது.* (288)

**प्रादेशमात्रः परिदृश्यतेऽर्कः शास्त्रेण संदर्शितलक्षयोजनः ।**
**मानान्तरेण क्वचिदेति बाधां प्रत्यक्षमप्यत्र हि न व्यवस्था ॥**

*ப்ராதேஶமாத்ர: பரித்ருச்யதேऽர்க:*
*ஶாஸ்த்ரேண ஸந்தர்சிதலக்ஷயோஜந: ।*
*மாநாந்தரேண க்வசிதேதி பாதாம்*
*ப்ரத்யக்ஷமப்யத்ர ஹி ந வ்யவஸ்த்தா ॥*

**शास्त्रेण**—வான சாஸ்திரத்தால், **संदर्शितलक्षयोजनः**—லக்ஷம் யோஜனை விஸ்தாரமுள்ளதாக காட்டப்படும், **अर्कः**—ஸூரியன், **प्रादेशमात्रः**—ஒட்டச்சாண் அகலமுள்ளதாகத்தான், **परिदृश्यते**—காணப்படுகிறுன். **प्रत्यक्षमपि**— பிரத்யக்ஷமும், **क्वचित्**—சில இடத்தில், **मानान्तरेण**—வேறு பிரமாணத்தால், **बाधां एति**—பாதிக்கப்படுகிறது. **अत्र**—இவ்விஷயத்தில, **व्यवस्था नहि**—தீர்மானம் இல்லையல்லவா !

*நம் கண்ணுக்கு ஒட்டச் சாண் அகல முள்ளதாகத்தான் ஸூரியன் தெரிகிறது. ஆனல் வானசாஸ்திரமோ ஸூரிய மண்டலம் லக்ஷம் யோஜனை விஸ்தார முள்ளதாகக் கூறுகிறது. ஆகையால் பிரத்யக்ஷமும் சிலஸமயங்களில் வேறு பிரமாணத்தினல் பாதிக்கப்பட்டு விடுகிறது, இவ்விஷயத்தில் இப்படித்தான் என்ற தீர்மானம் கிடையாது என்பது பிரஸித்தம்* (289)

**तस्मात् त्वयीदं भ्रमतः प्रतीतं मृषैव नो सत्यमवेहि साक्षात् ।**
**ब्रह्म त्वमेवासि सुखस्वरूपं त्वत्तो न भिन्नं विचिनुष्व बुद्धौ ॥**

தஸ்மாத் த்வயீதம் ப்ரமத: ப்ரதீதம்
ம்ருஷைவ நோ ஸத்யமவேஹி ஸாக்ஷாத் ।
ப்ரஹ்ம த்வமேவாஸி ஸுகஸ்வரூபம்
த்வத்தோ ந பிந்நம் விசிநுஷ்வ புத்தௌ ॥

**तस्मात्**–ஆகையினுல், **त्वयि**-உன்னிடம், **भ्रमतः**–பிராந்தியினுல், **प्रतीत**–தோன்றின, **इदं**-இது, **मृषैव**–பொய்தான், **नो सत्यम्** –உண்மையல்ல, **अवेहि**–அறிந்துகொள், **त्वं**–நீ **सुखस्वरूप**-ஆனந்த ரூபமான் **साक्षात् ब्रह्मैवासि**-ஸாக்ஷாத்ப்ரஹ்மமாகவே இருக்கிருய், (அது) **त्वत्तः**-உன்னைக்காட்டிலும், **न भिन्नं**-வேருனதல்ல, **बुद्धौ**–புத்தியில், **विचिनुष्व**–ஆராய்ந்துபார்.

*ஆகையால் இது எல்லாம் உன்னிடத்தில் பிரமத்தால் தோன்றுபவை, ஆதலால் பொய் தான், ஸத்யமில்லை, நீ ஸாக்ஷாத்தாக ஆனந்தஸ்வரூபமாயுள்ள பிரஹ்மம் தான், என்று தெரிந்துகொள். இது உன்னை விட்டு வேறுபட்டதல்ல. புத்தியில் இதை நன்கு பரிசீலனை செய்து பார்.* (290)

**लोकान्तरे वाऽत्र गुहान्तरे वा तीर्थान्तरे कर्मपरंपरान्तरे ।**
**शास्त्रान्तरे नास्त्यनुपश्यतामिह स्वयं परं ब्रह्म विचार्यमाणे ॥**

லோகாந்தரே வாऽத்ர குஹாந்தரே வா
தீர்த்தாந்தரே கர்மபரம்பராந்தரே ।
மாஸ்த்ராந்தரே நாஸ்த்யநுபச்யதாமிஹ
ஸ்வயம் பரம் ப்ரஹ்ம விசார்யமாணே ॥

(பிரஹ்மமானது) **लोकान्तरे वा**–வேறு உலகத்திலோ, **अत्र**–இந்த உலகத்தில், **गुहान्तरे वा**-குகைக்குள்ளோ, **तीर्थान्तरे**–புண்ய தீர்த்தங்களின் மத்தியிலோ, **कर्मपरंपरान्तरे**-கர்மாக்களின் வரிசையின் நடுவிலோ, **शास्त्रान्तरे**-சாஸ்திரங்களின் நடுவிலோ, **नास्ति**–இல்லை, **विचार्यमाणे**-விசாரித்துப் பார்க்கும்பொழுது, **इह**-இங்கு, **अनुपश्यतां**-கவனித்துப்பார்க்கிறவர்களுக்கு, **स्वयं**–தானே, **परं ब्रह्म**–பர ப்ரஹ்மம்.

*அந்த பிரஹ்மம் வேறு உலகத்திலோ, இவ்வுலகில் குகைக்குள்ளோ. தீர்த்தங்களின் மத்தியிலோ, கர்மாக்களின் வரிசையின்*

மத்தியிலோ, சாஸ்திரங்களுக்குள்ளேயோ, இல்லை. இங்கேயே அதைத்தேடிப்பார்ப்பவர்களுக்கு விசாரித்துப் பார்க்கும் போது தானே தான் அந்த மேலான பிரஹ்மம் என்பது துலங்கும் (291)

**तत्त्वमात्मस्थमज्ञात्वा मूढः शास्त्रेषु पश्यति ।**
**गोपः कक्षगतं छागं यथा कूपेषु दुर्मतिः ॥ २९२ ॥**

தத்த்வமாத்மஸ்த்தமக்ஞாத்வா மூட: ஶாஸ்த்ரேஷு பச்யதி ।
கோப: கக்ஷகதம் சாகம் யதா கூபேஷு துர்மதி: ॥

**यथा**–எப்படி, **दुर्मतिः**–முட்டாளான, **गोपः**–இடையன், **छागं**–ஆட்டுக்குட்டி, **कक्षगतं**–கஷ்கத்திலிருப்பதை, **अज्ञात्वा**–தெரிந்து கொள்ளாமல், **कूपेषु**–கிணறுகளில் **पश्यति**–பார்க்கிருனே (அதுபோல), **मूढः**–முட்டாள், **तत्त्वं**–தத்வமானது, **आत्मस्थं** – தன்னிடத்திலேயே இருப்பதை, **अज्ञात्वा**–அறிந்துகொள்ளாமல், **शास्त्रेषु**–சாஸ்திரங்களில், **पश्यति**–பார்க்கிருன்.

எப்படி முட்டாளான இடையன் தன் கஷ்கத்தில் ஆட்டுக் குட்டியிருப்பதை மறந்து அதைத் தேடியலைந்து கடைசியில் கிணறுகளில் குனிந்து பார்த்து (கிணற்றில் தோன்றும் பிரதி பிம்பத்தைப் பார்த்து) ஆட்டுக்குட்டி அங்கே இருப்பதாக நினைக் கிருனே, அதேமாதிரி தத்வம் தன்னிடமே யிருக்கிறதென்பதை தெரிந்துகொள்ளாமல் அறிவற்றவன் சாஸ்திரங்களில் தேடிப் பார்க்கிருன். (292)

**स्वमात्मानं परं मत्वा परमात्मानमन्यथा ।**
**विमृग्यते पुनः स्वात्मा बहिः कोशेषु पण्डितैः ॥ २९३ ॥**

ஸ்வமாத்மாநம் பரம் மத்வா பரமாத்மாநமந்யதா ।
விம்ருக்யதே புந: ஸ்வாத்மா பஹி: கோஶேஷு பண்டிதை: ॥

**स्वमात्मानं**–தனது ஆத்மாவை, **परं**–வேருகவும், **परमात्मानं**–பரமாத்மாவை, **अन्यथा**–வேறுவிதமாகவும். **मत्वा**–எண்ணி, **पुनः**–பிறகு, **पण्डितैः**–பண்டிதர்களால, **बहिः**–வெளியே, **कोशेषु**–புஸ்தக கோசங்களில, **स्वात्मा**–தனது ஆத்மா, **विमृग्यते**–தேடப்படுகிறது.

தன்னுடைய ஆத்மாவை வேறான சரீராதிகளாக எண்ணி பரமாத்மாவையும் வேறு விதமாக நினைத்துப் பின்னர் பண்டிதர்கள் வெளியில் புஸ்தக கோசங்களில் (அல்லது அந்நமயாதி கோசங்களில்) தனது ஆத்மாவைத் தேடுகிறார்கள். (293)

**विस्मृत्य वस्तुनस्तत्त्वं अध्यारोप्य च वस्तुनि ।**
**अवस्तुतां च तद्धर्मान् मुधा शोचति नान्यथा ॥ २९४ ॥**

விஸ்ம்ருத்ய வஸ்துநஸ்தத்வமத்யாரோப்ய ச வஸ்துநி ।
அவஸ்துதாம் ச தத்தர்மான் முதா ஶோசதி நாந்யதா ॥

**वस्तुनः**–வஸ்துவின், **तत्त्वं**–உண்மைஸ்வரூபத்தை, **विस्मृत्य**–மறந்து, **वस्तुनि**–வஸ்துவில், **अवस्तुतां**–வஸ்துவல்லாத பொய்ப் பொருள்களின் தன்மையையும், **तद्धर्मान् च**–அதன் தர்மங்களையும், **अध्यारोप्य**–ஆரோபம் செய்து, **मुधा**–வீணாக, **शोचति**–துன்புறுகிறான். **न अन्यथा**–வேறுவிதமாக இல்லை.

வஸ்துவினுடைய உண்மை ஸ்வருபத்தை மறந்து, வஸ்துவினிடத்தில் பொய்ப்பொருளின் தன்மையையும் அதன் தர்மங்களையும் ஏற்றிவைத்துவிட்டு வீணாக சோகத்தை யடைகிறான். இதைத்தவிர வேறில்லை. (294)

**आत्मानात्मविवेकं ते वक्ष्यामि शृणु सादरम् ।**
**यस्य श्रवणमात्रेण मुच्यतेऽनात्मबन्धनात् ॥ २९५ ॥**

ஆத்மாநாத்மவிவேகம் தே வக்ஷ்யாமி ச்ருணு ஸாதரம் ।
யஸ்ய ச்ரவணமாத்ரேண முச்யதேऽநாத்மபந்தநாத் ॥

**यस्य**–எதை, **श्रवणमात्रेण**–கேட்பதாலேயே, **अनात्मबन्धनात्**–அநாத்மக்கட்டிலிருந்து, **मुच्यते**–விடுபடுகிறானோ (அந்த), **आत्मानात्मविवेकं**–ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்துகொள்ளும் பிரகாரத்தை, **ते**–உனக்கு, **वक्ष्यामि**–சொல்கிறேன், **सादरं**–ஆதரவுடன், **शृणु**–கேள்.

ஆத்மாவையும் அநாத்மாவையும் நன்கு பிரித்துத் தெரிந்துகொள்ளும் பிரகாரத்தை உனக்குச் சொல்கிறேன் கவனமாகக் கேள். இதை கேட்டமாத்திரத்தில் அநாத்மாவின் பந்தத்திலிருந்து விடுபடுவான். (295)

इत्युक्त्वाऽभिमुखीकृत्य शिष्यं करुणया गुरुः ।
अध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपञ्चयन् ॥ २९६ ॥

सम्यक् प्राबोधयत् तत्त्वं शास्त्रदृष्टेन वर्त्मना ।
सर्वेषामुपकाराय तत्प्रकारोऽत्र दर्श्यते ॥ २९७ ॥

*இத்யுக்த்வாऽபிமுகீக்ருத்ய ஶிஷ்யம் கருணயா குரு: ।*
*அத்யாரோபாபவாதாப்யாம் நிஷ்ப்ரபஞ்சம் ப்ரபஞ்சயன் ॥*

*ஸம்யக் ப்ராபோதயத் தத்வம் ஶாஸ்த்ரத்ருஷ்டேன வர்த்மநா ।*
*ஸர்வேஷாமுபகாராய தத்ப்ரகாரோऽத்ர தர்ச்யதே ॥*

**इति**–என்று, **उक्त्वा**–சொல்லி, **गुरुः**–குரு, **करुणया**–கிருபையால், **शिष्यं**–சிஷ்யனை, **अभिमुखीकृत्य**–கவனிக்கும்படி செய்து, **शास्त्रदृष्टेन**–சாஸ்திரத்தில் காட்டப்பட்ட, **वर्त्मना**–வழியாக, **निष्प्रपञ्चं**–பிரபஞ்ச ஸம்பந்தமில்லாத, **तत्त्वं**–தத்வத்தை, **अध्यारोपापवादाभ्यां**–ஆரோபம் (ஏற்றுவது) அபவாதம் (நீக்குவது) இவைகளால், **प्रपञ्चयन्** –விரிவாக விளக்கிக்கொண்டு, **सम्यक्**–நன்றாக, **प्राबोधयत्** –போதித்தார், **सर्वेषां**–எல்லோருக்கும், **उपकाराय**–உபகாரத்தின் பொருட்டு, **तत्प्रकारः**–அந்த முறை, **अत्र**–இங்கு, **दर्श्यते**–காட்டப்படுகிறது.

*இவ்விதமாகச்சொல்லி சிஷ்யனை நன்கு கவனிக்கச் செய்து குருவானவர் கருணையோடுகூட எவ்வித விஸ்தாரமுமில்லாத பிரஹ்மதத்வத்தை, சாஸ்திரத்தில் கண்டிருக்கும் முறைப்படி, அத்யாரோபம், அபவாதம் ஆகிய இருவகையாகவும் விஸ்தரித்து நன்கு போதித்தார். எல்லோருக்கும் உபகாரமாயிருக்கும் பொருட்டு அந்த முறை இங்கு காட்டப்படுகிறது. (296–297)*

*(அ) முதலில் அத்யாரோபம் என்பது என்னவென்று சொல்லிவிட்டு, அதன் மூலமாய் எப்படி பிரஹ்மத்தை யறியலாமென்று விஸ்தாரமாய் எடுத்துச்சொல்ல ஆரம்பிக்கிறார்:— (296–297)*

वस्तुन्यवस्त्वारोपो यः सोऽध्यारोप इतीर्यते ।
असर्पभूते रज्ज्वादौ सर्पत्वारोपणं यथा ॥ २९८ ॥

வஸ்துந்யவஸ்த்வாரோபோ யஃ ஸோऽத்யாரோப இதீர்யதே ।
அஸர்ப்பபூதே ரஜ்ஜ்வாதௌ ஸர்பத்வாரோபணம் யதா ॥

**वस्तुनि**–உண்மைப்பொருளில், **अवस्त्वारोपः**–உண்மையில்லாத் பொருளை ஏற்றுவது, **यः**–எதுவோ, **सः**–அது, **अध्यारोपः**–அத்யாரோபம், **इति**–என்று, **ईर्यते**–சொல்லப்படுகிறது. **असर्पभूते**–பாம்பாக இல்லாத, **रज्ज्वादौ**–கயிறு முதலியவற்றில், **सर्पत्वारोपणं यथा**–பாம்புத் தன்மையை ஆரோபம் செய்வதுபோல்.

*ஸர்பமாக இல்லாத கயிறு முதலியவற்றில் ஸர்பமாயிருக்கும் தன்மையை ஏற்றுவது எப்படியோ, அதேபோல வஸ்துவில் வஸ்துவல்லாததை ஏற்றுவது அத்யாரோபம் என்ப்படுகிறது.*

वस्तु तावत् परं ब्रह्म सत्यज्ञानादिलक्षणम् ।
इदं आरोपितं यत्र भाति खे नीलतादिवत् ॥ २९९ ॥

வஸ்து தாவத் பரம் ப்ரஹ்ம ஸத்யஞானாதிலக்ஷணம் ।
இதமாரோபிதம் யத்ர பாதி கே நீலதாதிவத் ॥

**खे**–ஆகாசத்தில், **नीलतादिवत्**–நீல நிறமாயிருக்கும் தன்மை முதலியது போல், **इदं**–இந்த பிரபஞ்சம், **यत्र**–எதில், **आरोपितं**–ஆரோபிக்கப்பட்டு, **भाति**–தோன்றுகிறதோ (அந்த), **सत्यज्ञानादिलक्षणं**–ஸத்யம் ஞானம் முதலியவற்றை ஸ்வரூபமாகக்கொண்ட, **परं ब्रह्म**–பரப்ரஹ்மம், **वस्तु तावत्**–வஸ்து என்பது.

*இங்கே வஸ்து என்பது ஸத்யம் (முக்காலத்திலும் மாறுமலிருப்பது) ஞானம் (சித்ரூபம்) முதலான லக்ஷணங்களையுடைய பரப்ரஹ்மம். ஆகாசத்தில் நீலமாயிருக்கும் தன்மை முதலியது ஏற்றப்படுவதுபோல இந்த ப்ரஹ்மத்தினிடத்தில் இந்த ஜகத்தானது ஏற்றப்பட்டு விளங்குகிறது.* (299)

तत्कारणं यदज्ञानं सकार्यं सद्विलक्षणम् ।
अवस्त्वित्युच्यते सद्भिः यस्य बाधा प्रदृश्यते ॥ ३०० ॥

தத்காரணம் யதக்ஞானம் ஸகார்யம் ஸத்விலக்ஷணம் ।
அவஸ்த்வித்யுச்யதே ஸத்பிர் யஸ்ய பாதா ப்ரத்ருச்யதே ॥

**कारणं**-காரணமாயும், **सकार्यं**-கார்யங்களோடு கூடினதாயும், **सद्विलक्षणं**-ஸத்ஸ்வரூபத்தைக்காட்டிலும் விலக்ஷணமாயும் உள்ள, **यत् अज्ञानं**-எந்த அக்ஞானமுண்டோ, **तत्**-அது, **अवस्तु**-அவஸ்து, **इति**-என்று, **सद्भिः**-ஸாதுக்களால், **उच्यते**-சொல்லப்படுகிறது, **यस्य**-எதற்கு, **बाधा**-பாதமானது, **प्रदृश्यते**-காணப்படுகிறதோ.

*அவ்விதம் ஏற்றப்படுவதற்கு காரணமாயும், ஸத் வஸ்துவின் லக்ஷணத்திற்கு மாறான லக்ஷணத்தையுடையதாயும் உள்ள அக்ஞானமும் அதன் காரியங்களும் அவஸ்து என்று கூறப்படுகிறது இது பின்னால் பாதிக்கப்பட்டு விடும். அதாவது இல்லை என்று ஆகிவிடும் (300)*

अवस्तु तत् प्रमाणैर्यत् बाध्यते शुक्तिरौप्यवत् ।
न बाध्यते यत् तत् वस्तु त्रिषु कालेषु शुक्तिवत् ॥ ३०१ ॥
शुक्तेर्बाधा न खल्वस्ति रजतस्य यथा तथा ।

*அவஸ்து தத் ப்ரமாணைர் யத் பாத்யதே சுக்திரௌப்யவத் ।*
*ந பாத்யதே யத் தத் வஸ்து த்ரிஷு காலேஷு ஶுக்திவத்॥*
*ஶுக்தேர் பாதா ந கல்வஸ்தி ரஜதஸ்ய யதா ததா ।*

**शुक्तिरौप्यवत्**-கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல், **यत्**-எது, **प्रमाणैः**-ப்ரமாணங்களால், **बाध्यते**-பாதிக்கப்படுகிறதோ (இல்லாமல் போய்விடுகிறதோ), **तत्**-அது, **अवस्तु**-அவஸ்துவாகும். **शुक्तिवत्**-கிளிஞ்சல்போல், **त्रिषु कालेषु**-மூன்று காலங்களிலும், **यत्**-எது, **न बाध्यते**-பாதிக்கப்படுவதில்லையோ, **तत्**-அது, **वस्तु**-வஸ்துவாகும். **यथा रजतस्य**-வெள்ளிக்கு எப்படியோ, **तथा**-அப்படி, **शुक्तेः**-கிளிஞ்சலுக்கு, **बाधा**-பாதமானது, **न खल्वस्ति**-இல்லையல்லவா.

*எது பிரமாணங்களினால் பாதிக்கப்படுகிறதோ - இல்லையென்று ஏற்படுகிறதோ அது அவஸ்து, சிப்பியில் தோன்றும் வெள்ளியைப்போல. எது மூன்று காலங்களிலும் பாதிக்கப்படவில்லையோ-ஒருக்காலும் இல்லை என்று ஆவதில்லையோ-அது வஸ்து, சிப்பியைப்போல வெள்ளிக்கு எப்படி பாதகமானது ஏற்படுகிறதோ அப்படி சிப்பிக்கு பாதம் ஏற்படுவதில்லையல்லவா ?*

சிப்பியில் தோன்றும் வெள்ளி தோன்றுவதற்கு முன் இல்லை, சிப்பின் தத்வம் தெரிந்த பிறகும் இல்லை, தோன்றும்போதும் வாஸ்தவத்தில் இல்லை. இவ்விதமாக பாதிக்கப்படுகிறபடியால், அது அவஸ்து என்று சொல்லப்படுகிறது. முன், பின், மத்ய காலங்கள் மூன்றிலும் சிப்பி அப்படியே யிருப்பதால், அதை வஸ்து என்கிறார்கள். (301)

अवस्तुसंज्ञितं यत् तत् जगदध्यासकारणम् ॥ ३०२ ॥

सदसद्भ्यां अनिर्वाच्यं अज्ञानं त्रिगुणात्मकम् ।
वस्तुतत्त्वावबोधैकबाध्यं तत् भावलक्षणम् ॥ ३०३ ॥

அவஸ்து ஸம்ஜ்ஞிதம் யத் தத் ஜகதத்யாஸகாரணம் ॥

ஸதஸத்ப்யாமநிர்வாச்யமக்ஞாநம் த்ரிகுணாத்மகம் ।
வஸ்து தத்வாவபோதைகபாத்யம் தத்பாவலக்ஷணம் ॥

**यत्** -எது, **अवस्तुसंज्ञितं**-அவஸ்து என்று பெயருள்ளதோ, **तत्**-அது, **जगदध्यासकारणं**-(பிரஹ்மத்தில) பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணம். **तत्**-அந்தககாரணமான, **अज्ञानं**-அக்ஞானமானது, **सदसद्भ्यां** ஸத் (இருக்கிறது) என்றோ அஸத் (இல்லாதது) என்றோ, **अनिर्वाच्यं**-விளக்கிக்கூற முடியாதது, **त्रिगुणात्मकं**-முக்குண வடிவமாயுள்ளது, **वस्तुतत्त्वावबोधैकबाध्यं**-வஸ்துவின் உண்மைத்தன்மையை அறிவது ஒன்றுலேயே பாதிக்கத்தக்கது, **भावलक्षणम्** -பாவஸ்வரூபமானது,

எது அவஸ்து என்ற பெயருடையதோ, அதுதான் பிரஹ்மத்தினிடத்தில் ஜகத் தோன்றுவதற்குக் காரணம். அந்தக் காரணமாகிய அக்ஞானம் என்பது இருக்கிறது என்றோ இல்லையென்றோ நிர்வசனம் செய்ய முடியாதது. மூன்று குணங்களை (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவைகளை) ஸ்வரூபமாகவுடையது. வஸ்துவின் தத்வத்தினுடைய ஞானமொன்றினால் தான் பாதிக்கப் படும். அது இருக்கும் தன்மையுடையது.

எது மூன்று காலங்களிலும் இருக்கிறதோ அதைத்தான், வாஸ்தவமாக "இருக்கிறது" என்று சொல்லலாம். இவ்வக்ஞானம் ஞானம் வந்தவுடன் மறைந்துவிடுகிறபடியால் இதை "இருக்கிறது" என்று சொல்ல முடியவில்லை, எது மூன்று

காலங்களிலும் இல்லவேயில்லையோ, முயல் கொம்பு மாதிரி அதைத்தான் வாஸ்தவமாக "இல்லை" என்று சொல்லலாம். இவ்வஜ்ஞானத்தினல் பலவித கார்யங்கள் ஏற்படுகிற படியால் இதை "இல்லை" என்று சொல்லவும் முடியவில்லை. வாஸ்தவத்தில் மூன்று காலங்களிலும் இல்லாமலிருந்த போதிலும் மத்தியில் இருப்பது போல் தோன்றும் வாய்ப்பு இதற்கு இருப்பதால் இதை "இருக்கிறது" என்பதில் சேர்க்க முடியாமலும் "இல்லை" என்பதில் சேர்க்கமுடியாமலும் இருக்கிறதனி பதார்த்தமாக கணக்கிடவேண்டியிருக்கிறது. முயல் கொம்புபோல அத்யந்தம் இல்லை யென்பதற்கில்லாததினல் இதை "அபாவம்" என்று சொல்ல முடியாது. இதற்கும் கார்யங்கள் இருப்பதினல் இதையும் "பாவ" பதார்த்தமாகவே கருதவேண்டியிருக்கிறது. ஆனாலும் இதனுடைய இருப்பு முக்காலங்களிலும் பாதிக்கப்படாத இருப்பு ஆகாது. (302-303)

(அ) இந்த அஜ்ஞானம் எங்கேயிருக்கிறது, எப்படியிருக்கிறது, என்று மேல் ச்லோகத்தில் சொல்கிறார்:—

मिथ्यासंबन्धतस्तत्र ब्रह्मण्याश्रित्य तिष्ठति ।
मणौ शक्तिर्यथा तद्वत् नैतदाश्रयदूषकम् ॥ ३०४ ॥

மித்யாஸம்பந்ததஸ் தத்ர ப்ரஹ்மண்யாச்ரித்ய திஷ்டதி ।
மணௌ ஶக்திர் யதா தத்வத் நைததாச்ரயதூஷகம் ॥

यथा—எப்படி, मणौ—ரத்னத்தில், शक्तिः—விசேஷமான சக்தி (இருக்கிறதோ), तद्वत्—அதுபோல, तत्र—அந்த, ब्रह्मणि—ப்ரஹ்மத்தில், मिथ्यासंबन्धतः—பொய்யான ஸம்பந்தத்தால், आश्रित्य—ஆச்ரயித்துக் கொண்டு, (அஜ்ஞானம்), तिष्ठति—இருக்கிறது, एतत्—இந்த அஜ்ஞானம் न आश्रयदूषकम्—தனது ஆச்ரயவஸ்துவைக் கெடுக்கிறதில்லை.

ரத்தினத்தில் சக்தியிருப்பதுபோல் அந்த பிரஹ்மத்தினிடத்தில் பொய்யான ஸம்பந்தத்தினல் (ஆத்யாஸிக ஸம்பந்தத்தால்) அஜ்ஞானம் ஆசிரயித்துக்கொண்டு இருக்கிறது. ஆனல் இது ஆசிரயமான பிரஹ்மத்தைக் கெடுக்காது.

சில ரத்னங்களில் அபூர்வமான சில சக்திகள் உண்டு. அந்த ரத்னத்தை தரித்துக்கொண்டு நெருப்பைத் தொட்டாலும் சூடு தெரிவதில்லை. இம்மாதிரியான சக்தியை ரத்தினத்தை விட்டுத்

தனியாகக் காணமுடியாது. ஆனாலும் அது ரத்தினத்தைத் தவிற வேறில்லை யென்றும் சொல்லமுடியாது. இரண்டு பதார்த்தங்கள் வெவ்வேறாக இருந்தால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் சொல்ல முடியும். வெவ்வேறாக இல்லாமல் ஒன்றைவிட்டு மற்றொன்று தனியாகக் காணப்படாமலிருக்கையில், அவ்விரண்டிற்கும் உள்ள ஸம்பந்தம் பொய் என்று தான் சொல்லவேண்டும். தவிரவும் இவ்விதம் எது பொய் ஸம்பந்தத்தினால் மற்றொன்றில் இருப்பதாகக் காணப்படுகிறதோ, அது அந்த மற்றொன்றை எவ்விதத்திலும் பாதிக்கமாட்டாது. கயிற்றில் தோன்றும் ஸர்பத்தினால் கயிறு விஷமுள்ளதாக ஆகிவிடாது. தூணில் தோன்றும் திருடன் தூணிலுள்ள எந்த சாமானையும் திருட முடியாது இதுபோல் அக்ஞானமும் ப்ரஹ்மத்தை விட்டுத் தனியாகப்பிரித்து வேறாகக் காணமுடியாதபடி ப்ரஹ்மத்திலேயே பொய்யான ஸம்பந்தத்தால் இருக்கிறது இவ்வித அக்ஞானத்தால் ஆச்ரயமான ப்ரஹ்மத்திற்கு எவ்வித மாறுபாடும் ஏற்படுவதில்லை. (304)

(அ) அக்ஞானத்தின் ஸ்வரூபத்தை இவ்விதம் சொல்லிவிட்டு அது இருக்கிறது என்பதற்கு என்ன பிரமாணம் என்பதை அடுத்த சுலோகத்தில் சொல்கிறார். அனுமானத்தினால் அதை அறியலாம், சப்த பிரமாணத்தினாலும் அறியலாம், பிரத்யக்ஷமாகவும் அறியலாம், என்று எடுதது்க்காட்டுகிறார் :—

सद्भावे लिङ्गमेतस्य कार्यमेतच्चराचरम् ।
मानं श्रुतिः स्मृतिश्चाज्ञोऽहमित्यनुभवोऽपि च ॥ ३०५ ॥

ஸத்பாவே லிங்கமேதஸ்ய கார்யமேதத் சராசரம் ।
மாநம் ச்ருதி: ஸ்மருதிச்சாஜ்ஞோऽஹமித்யநுபவோऽபி ச ॥

एतत्–இந்த, चराचरं–ஸ்தாவர ஜங்கமரூபமான, कार्यं–உண்டாகும் பிரபஞ்சம், एतस्य सद्भावे–இந்த அக்ஞானம் இருப்பதற்கு, लिङ्गं–அடையாளம். श्रुतिः–வேதமும், स्मृतिश्च–ஸ்மிருதியும், अहं अज्ञः–நான் அறியாதவன், इति–என்ற, अनुभवोऽपि च–அநுபவமும், मानं–அக்ஞானமிருப்பதற்கு பிரமாணம்.

இந்த அக்ஞானம் இருக்கிறது என்ற விஷயத்தில் அடையாளம் இதன் கார்யமான அசையும் பொருள் அசையாப் பொருள் அடங்கிய இந்த உலகமே யாகும். 'माया तु प्रकृतिं

**विद्यास्'** இது முதலான சுருதிகளும் **'मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरं.'** இது முதலான ஸ்மிருதிகளும் 'நான் அறியாதவன்.' என்ற நம்முடைய அனுபவமும் இந்த அக்ஞானம் இருப்பதற்குப் பிரமாணங்களாகும். (305)

(அ) ஜகத்தின் தோற்றத்திற்குக் காரணமாயும் பிரமாணங்களால் இருப்பதாக நிச்சயிக்கத்தக்கதாயுமுள்ள அக்ஞானத்திற்கே வேறு பல பெயர்களினால் வியவஹாரம் உண்டென்பதைக் காட்டுகிறார்:—

**अज्ञानं प्रकृतिः शक्तिः अविद्येति निगद्यते ।**

*அக்ஞானம் ப்ரக்ருதி: ஶக்திரவித்யேதி நிகத்யதே ।*

**अज्ञानं**-அக்ஞானமானது, **प्रकृतिः**-ப்ரக்ருதி என்றும், **शक्तिः**-சக்தி என்றும், **अविद्या इति**-அவித்யை என்றும், **निगद्यते**-சொல்லப்படுகிறது.

அக்ஞானமானது பிரகிருதி என்றும் சக்தி என்றும் அவித்யை என்றும் சொல்லப்படுகிறது.

(அ) இதன் ஸ்வரூபம் இன்னவிதமென்று சொல்ல முடியாதென்று முன்னால் சொன்னதையே மறுபடியும் விஸ்தாரமாக எடுத்துக்காட்டுகிறார்:—

**तदेतत् सन्न भवति नासद्वा शुक्तिरौप्यवत् ॥ ३०६ ॥**

**सतो भिन्नं अभिन्नं वा न दीपस्य प्रभा यथा ।**
**न सावयवं अन्यद्वा बीजस्यांकुरवत् क्वचित् ।**
**अत एतदनिर्वाच्यं इत्येव कवयो विदुः ॥ ३०७ ॥**

*ததேதத் ஸத் ந பவதி நாஸத் வா ஶுக்திரௌப்யவத் ॥*

*ஸதோ பிந்நமபிந்நம் வா ந தீபஸ்ய ப்ரபா யதா ।*
*ந ஸாவயவமந்யத் வா பீஜஸ்யாங்குரவத் க்வசித் ॥*
*அத ஏததநிர்வாச்யமித்யேவ கவயோ விது: ॥*

**तत् एतत्** -அந்த இது (அக்ஞானம்), **शुक्तिरौप्यवत्**-கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல, **सत् न भवति**-ஸத்தாக இல்லை, **असद्वा**-

அஸத்தாகவும் न-இல்லை. दीपस्य-தீபத்தின், प्रभा यथा-ஒளிபோல, सतः-ஸத் வஸ்துவைக்காட்டிலும், भिन्न-வேறுபட்டதாகவோ, अभिन्न वा-வேறுபடாததாகவோ, न-இல்லை. बीजस्य-விதையின், अंकुरवत्-முளைபோல, क्वचित्-ஒரு இடத்திலும், सावयवं-அவயவத்துடன் கூடியதாகவோ, अन्यद्वा-அவயவம் இல்லாததாகவோ, न-இல்லை. अतः-ஆகையால், एतत्-இந்த அஞ்ஞானம், अनिर्वाच्यं-இன்னவிதமென்று, நிர்வசனம் செய்யமுடியாதது, इत्येव-என்றுதான், कवयः-வித்வான்கள், विदुः-அறிந்திருக்கிறார்கள்.

அந்த அக்ஞானம் இருப்புள்ளது என்றோ, இருப்பற்றது என்றோ கூறமுடியாது சிப்பியில் தோன்றும் வெள்ளியைப் போல. அது வாஸ்தவமாயிருக்கும் பதார்த்தத்திலிருந்து வேறுபட்டதில்லை, வேறுபடாததும் இல்லை தீபத்தின் ஒளி போல. அது ஒருக்காலும் அவயவங்களுடன் கூடினதில்லை, அவயவங்களற்றதாகவும் இல்லை விதையின் முளையைப்போல. ஆகையால் இது நிர்வசனம் செய்யத்தக்கதில்லையென்றே அறிவாளிகள் அறிந்திருக்கிறார்கள்.

சிப்பியில் தோன்றும் வெள்ளி இல்லாத பதார்த்தமானால் தோன்றாது. இருக்கிற பதார்த்தமானால் மறையாது; ஆகையால் அது இரண்டு இனங்களிலும் சேராது தீபத்தின் வெளிச்சம் தீபத்தை விட்டு தனித்து இருக்க முடியாது, ஆனாலும் தீபமில்லாத விடத்தில் வியாபிக்கிறது; ஆகையால் அது தீபத்தை விட வேறு என்றாவது, வேறில்லையென்றாவது சொல்வதற்கில்லை. விதையை சோதித்துப்பார்த்தால் அதில் முளை தெரியவில்லை, அதில் முளை இல்லையானால் பின்னால் முளை வெளிக்கிளம்ப முடியாது; ஆகையால் அதை முளை என்னும் அவயவத்துடன் கூடியதென்றோ முளை என்னும் அவயவமற்றதென்றோ சொல்ல முடியாது. இவ்விதமே தோற்றமாயும் சக்தியாயும் காரணமாயும் உள்ள அக்ஞானம் இன்னதென்று சொல்வதற்கில்லை. இதையே அநிர்வசனீயம் என்று கூறுவார்கள். (306-307)

(அ) ப்ரஹ்ம விஷயமான அக்ஞானம் தான் ஜகத்தின் தோற்றத்திற்குக் காரணம் என்று முன் சொல்லப்பட்டது. அந்த அக்ஞானத்தைக் காரணமாகக் கொண்டு ஜகத் எந்த கிரமமாய்த் தோன்றுகிறது என்பதைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்வதற்காக முதலில் அந்த அக்ஞானம் இருவகைப்படுமென்று ஆரம்பிக்கிறார்.

समष्टिव्यष्टिरूपेण द्विधाऽज्ञानं निगद्यते ॥ ३०८ ॥

ஸமஷ்டிவ்யஷ்டிரூபேண த்விதாऽஜ்ஞாநம் நிகத்யதே ॥

**अज्ञानं**–அக்ஞானமானது, **समष्टिव्यष्टिरूपेण**–ஸமஷ்டி ரூபம், வியஷ்டி ரூபம் என்று, **द्विधा**–இரண்டுவிதமாக, **निगद्यते**–சொல்லப் படுகிறது.

*ஸமஷ்டி, வ்யஷ்டி, என்று அக்ஞானம் இரண்டு விதமாகச் சொல்லப்படுகிறது.* (308)

नानात्वेन प्रतीतानां अज्ञानानां अभेदतः ।
एकत्वेन समष्टिः स्यात् भूरुहाणां वनं यथा ॥ ३०९ ॥

நாநாத்வேந ப்ரதீதாநாமக்ஞாநாநாமபேதத: ।
ஏகத்வேந ஸமஷ்டி: ஸ்யாத் பூருஹாணாம் வநம் யதா ॥

**भूरुहाणां**–மரங்களுக்கு, **वनं यथा**–காடுபோல, **नानात्वेन**–பலவாக **प्रतीतानां**–தோன்றுகிற, **अज्ञानानां**–அக்ஞானங்களுக்குள், **अभेदतः**–வேற்றுமையில்லாததால், **एकत्वेन**–ஒன்றாக, **समष्टिः स्यात्**–ஸமஷ்டி யாகும்.

*பலவிதமான அநேகம் மரங்கள் சேர்ந்து காடு என்ற முறையில் எப்படி ஒன்றாகிறதோ அப்படியே பலவிதமாகத் தோன்றுகிற அக்ஞானங்களுக்குள் (அக்ஞானம் என்ற முறையில்) வேற்றுமையில்லாததினால் ஒன்றாகவே கருதப்பட்டால், 'ஸமஷ்டி' எனப்படும். மரங்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஒன்றாகவே காடு என்று பாவித்தால் ஸமஷ்டி என்று பெயர். மரங்களை தனித்தனியே பாவித்தால் வியஷ்டி என்பார்கள். அப்படியே எல்லா அக்ஞானங்களையும் ஒன்றாகச்சேர்த்து மொத்தமாய்ப் பார்த்தால் ஸமஷ்டியாகும். அக்ஞானங்களைத் தனித்தனியே பார்த்தால் வியஷ்டியெனப்படும்* (309)

इयं समष्टिरुत्कृष्टा सत्त्वांशोत्कर्षतः पुरा ।
मायेति कथ्यते तज्ज्ञैः शुद्धसत्त्वैकलक्षणा ॥ ३१० ॥

இயம் ஸமஷ்டிருத்க்ருஷ்டா ஸத்வாம்ஶோத்கர்ஷத: புரா ॥
மாயேதி கத்யதே தஜ்ஞை: ஶுத்தஸத்வைக லக்ஷணா ।

**पुरा**–முதலில், **सत्त्वांशोत्कर्षतः**–ஸத்வகுணம் மேலிட்டிருப்பதால், **उत्कृष्टा**–சிறந்ததான, **शुद्धसत्त्वैकलक्षणा**–சுத்தமான (ரஜஸ்தமோ குணங்களால் தாக்கப்படாத) ஸத்வகுணத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட **इयं समष्टिः**–இந்த ஸமஷ்டி அக்ஞானமானது, **तज्ज्ञैः**–அதை அறிந்தவர்களால், **माया इति**–மாயை என்று, **कथ्यते**–சொல்லப்படுகிறது.

*இந்த ஸமஷ்டி அக்ஞானத்தில் முக்குணங்களிருந்தபோதிலும் எப்பொழுதும் ஸத்வகுணமே மேலிட்டிருப்பதால் இது சிறந்தது சுத்தமான ஸத்வ குணத்தை ஸ்வரூபமாகக் கொண்ட இது மாயை என்று சொல்லப்படுகிறது ரஜஸ் தமோகுணங்கள் கட்டுப்பட்டு மேலோங்காமல், அவைகளால் ஸத்வ குணம் தாக்கப்படாமல் ஸத்வகுணமே மேலோங்கியிருப்பது தான் சுத்த ஸத்வம் என்பதன் பொருள். மூன்று குணங்களும் ஸமமாக இருக்கும் போது "மேல்" "கீழ்" என்ற வியவஹாரத்திற்கு இடமில்லை. அந்த ஸமமாயிருக்கும் நிலை மாறி ஏதாவது ஒரு குணம் அதிகமாயும் மற்றது குறைந்தும் இருக்கும்போது தான் வேற்றுமையே ஏற்படுகிறது.* *(310)*

*(அ) ஸமஷ்டி அக்ஞானமாகிற மாயையில் பிரதிபலிக்கும் பிரஹ்ம சைதன்யமே ஈசுவரன் என்பதை குறிப்பிடுகிறார்:—*

मायोपहितचैतन्यं साभासं सत्त्वबृंहितम् ।
सर्वज्ञत्वादिगुणकं सृष्टिस्थित्यन्तकारणम् ।
अव्याकृतं तत् अव्यक्तं ईश इत्यपि गीयते ॥ ३११ ॥

*மாயோபஹிதசைதன்யம் ஸாபாஸம் ஸத்வப்ருஂஹிதம் ।*
*ஸர்வக்ஞத்வாதிகுணகம் ஸ்ருஷ்டிஸ்தித்யந்த காரணம் ।*
*அவ்யாக்ருதம் ததவ்யக்தமீஶ இத்யபி கீயதே ॥*

**साभासं**–பிரதிபிம்பத்துடன் கூடியதும், **सत्त्वबृंहितं**–ஸத்வகுணம் விருத்தியடைந்ததும், **सर्वज्ञत्वादिगुणकं**–எல்லாவற்றையும் அறியும் தன்மை முதலான குணங்களுள்ளதும், **सृष्टिस्थित्यन्तकारणं**–ஸிருஷ்டி, ஸ்திதி, முடிவு இவைகளுக்குக் காரணமானதுமான, **तत्**–அந்த, **मायोपहितचैतन्यं**–மாயையை உபாதியாகக்கொண்ட சைதன்யம், **अव्याकृतं**–அவ்யாக்ருதமென்றும், **अव्यक्तं**–அவ்யக்தமென்றும், **ईश इत्यपि**–ஈசன் என்றும், **गीयते**–சொல்லப்படுகிறது.

மாயையை உபாதியாகக்கொண்ட பிரஹ்ம சைதன்யம் மாயையில் ஏற்படும் பிரதிபிம்பத்துடன் ஸத்வகுணம் அதிகமாயிருந்து ஸர்வக்ஞத்தன்மை ஸர்வ சக்திகளுடன் கூடியிருக்கும் தன்மை முதலான குணங்களோடு கூடினதாய் ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கும் ஸ்திதிக்கும் முடிவிற்கும் காரணமாகும். அது அவ்யாகிருதம் (தனித்தனி பெயரும் ரூபமும் இல்லாதது) என்றும் அவ்யக்தம் (தெளிவாய் ஏற்படாதது) என்றும், ஈசுவரன் (ஆளுபவர்) என்றும் சொல்லப்படுகிறது. (311)

सर्वशक्तिगुणोपेतः सर्वज्ञानावभासकः ।
स्वतन्त्रः सत्यसंकल्पः सत्यकामः स ईश्वरः ॥ ३१२ ॥

ஸர்வஶக்திகுணோபேத: ஸர்வஞாநாவபாஸக: ।
ஸ்வதந்த்ர: ஸத்யஸங்கல்ப: ஸத்யகாம: ஸ ஈச்வர: ॥

सः-அந்த, ईश्वरः-ஈசுவரன், सर्वशक्तिगुणोपेतः-எல்லா சக்திகளோடும் குணங்களோடும் கூடியவர், सर्वज्ञानावभासकः-எல்லா ஞானங்களையும் பிரகாசப்படுத்துகிறவர். स्वतन्त्रः-பிறருக்குக் கட்டுப்படாதவர், सत्यसंकल्पः-ஸத்யமான ஸங்கல்பத்தை உடையவர், सत्यकामः-வீணாகாத காமனைகளை உடையவர்.

அந்த ஈசுவரர் எல்லா சக்திகளோடும் குணங்களோடும் கூடினவர், எல்லா ஞானத்தையும் பிரகாசப்படுத்துகிறவர், ஸ்வதந்திரர், அவருடைய ஸங்கல்பம் ஸத்யமானது அதன்படியே காரியம் நடைபெறும். அவருடைய காமம் வீண்போகாது. கட்டாயம் நிறைவேறும்.

ஒரு சிறிய தீபத்தின் பின் புறத்தில் பளிச்சென்ற ஒருவித கண்ணாடியையோ தகரத்தையோ வைத்து விட்டால், அதில் தீபத்தின் வெளிச்சம் பிரதிபலித்து அதிகமான பிரகாசத்தை உண்டுபண்ணும். கண்ணாடிக்கோ, தகரத்திற்கோ தனித்த முறையில் வெளிச்சம் கொடுக்க யோக்கியதையே கிடையாது. அப்படியிருந்தும் வெளிச்சத்தின் ஸமீபத்தில் இருந்தால் அவ்வெளிச்சத்தையே அதிகப்படுத்திக்காட்ட யோக்கியதையுள்ளதாயிருக்கிறது. அதுபோல, மாயை என்பது தான் ஜடமாயிருந்த போதிலும் பிரஹ்ம சைதன்யத்தின் ஸம்பந்தத்தினால் அனந்தமான குணங்களைத் தோன்றும்படிச் செய்யசக்திவாய்ந்தது

அதின் சேர்க்கையினால் தான் ஸர்வக்ஞத்தன்மை, ஸர்வசக்தத் தன்மை முதலிய குணங்கள் ஏற்பட்டு ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி லயங்கள் நடக்கின்றன. பின்னுள்ள கண்ணாடியோ, தகரமோ எப்படி தீபத்தின் ஸ்வரூபத்தில் சேராமல் இருந்து கொண்டு பக்கத்தில் இருந்து தீபப்பிரகாசத்தை அதிகப்படுத்துகிறதோ அப்படியே மாயை பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தில் சேராமல் இருந்து கொண்டு அதை பலவிதமாக பிரகாசிக்கச் செய்கிறது. சேராம லிருந்தும் சேர்ந்திருப்பது போல் தோன்றுவதால் பிரஹ்மத் திற்கும் மாயைக்குமுள்ள ஸம்பந்தம் மித்யா (பொய்யானது) என்று முன் 304வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. (312)



तस्यैतस्य महाविष्णोः महाशक्तेः महीयसः ।
सर्वज्ञत्वेश्वरत्वादिकारणत्वात् मनीषिणः ।
कारणं वपुः इत्याहुः समष्टिं सत्त्वबृंहितम् ॥ ३१३ ॥

தஸ்யைதஸ்ய மஹாவிஷ்ணோ: மஹாசக்தேர் மஹீயஸ: ।
ஸர்வக்ஞத்வேச்வரத்வாதி காரணத்வான் மநீஷிண: ।
காரணம் வபுரித்யாஹு: ஸமஷ்டிம் ஸத்வப்ருஹ்மிதம் ॥

**महाविष्णोः**–மஹாவியாபகராயும், **महाशक्तेः**–பெரிய சக்திகளுள்ள வராயும், **महीयसः**–மிகப்பெரியவராயும் உள்ள, **तस्य**–அந்த, **एतस्य**–இந்த ஈசுவரனுக்கு, **सर्वज्ञत्वेश्वरत्वादिकारणत्वात्**–ஸர்வஜ்ஞத்வம், ஈசுவரத்வம் முதலானவை ஏற்படக்காரணமாயிருப்பதால், **सत्त्वबृंहितं**–ஸத்வகுணம் விருத்தியடைந்த, **समष्टिं**–ஸமஷ்டி அக்ஞானமான மாயையை, **कारणं वपुः इति**–காரண சரீரமென்று, **मनीषिणः**–வித்வான்கள், **आहुः**–சொல்கிறார்கள்.

மஹாவியாபகராய் மஹாசக்தியுள்ளவராய் மிகப்பெரியவரா யிருக்கும் அந்த ஈசுவரருக்கு ஸர்வக்ஞத்தன்மை ஈசுவரத்தன்மை முதலானதுகளை ஏற்படுத்திக்கொடுக்கக் காரணமாயிருப்பதால் ஸத்வகுணம் தூக்கி நிற்கும் ஸமஷ்டி அக்ஞானத்தைக் காரண சரீரம் என்று சொல்கிறார்கள். (313)

आनन्दप्रचुरत्वेन छादकत्वेन कोशवत् ।
सैषाऽऽनन्दमयः कोश इतीशस्य निगद्यते ॥ ३१४ ॥

ஆநந்தப்ரசுரத்வேந சாதகத்வேந கோசவத் ।
ஸைஷாऽऽநந்தமய: கோச இதீசஸ்ய நிகத்யதே ॥

आनन्दप्रचुरत्वेन–ஆனந்தம் அதிகமாக இருப்பதாலும், कोशवत्–உரைபோல, छादकत्वेन–(ப்ரஹ்ம சைதன்யத்தை) மறைப்பதாலும், सा एषा–அந்த அக்ஞான ஸமஷ்டியானது, ईशस्य–ஈசுவரனுக்கு, आनन्दमयः कोश इति–ஆனந்தமயகோசமென்று, निगद्यते–சொல்லப்படுகிறது.

ஆனந்தம் அதிகமாக இருக்கிற காரணத்தினுலும், கத்தியை உரை மறைப்பது போல் இது சுத்த சைதன்யத்தை மறைக்கிற காரணத்தினுலும், இந்த ஸமஷ்டி அக்ஞானம் ஈசுவரருடைய ஆனந்தமய கோசம் (ஆனந்தம் மிகுந்த உரை) எனப்படுகிறது.

सर्वोपरमहेतुत्वात् सुषुप्तिस्थानमिष्यते ।
प्राकृतः प्रलयो यत्र श्राव्यते श्रुतिभिर्मुहुः ॥ ३१५ ॥

ஸர்வோபரமஹேதுத்வாத் ஸுஷுப்திஸ்தான மிஷ்யதே ।
ப்ராக்ருத: ப்ரளயோ யத்ர ச்ராவ்யதே ச்ருதிபிர்முஹு: ॥

यत्र–எதில், प्रलयः–எல்லாம் ஒடுங்குவது, प्राकृतः–ப்ராக்ருதமாக, श्रुतिभिः–வேதங்களால், मुहुः–அடிக்கடி, श्राव्यते–கேட்கும்படி செய்யப்படுகிறதோ (இது), सर्वोपरमहेतुत्वात्–எல்லாம் ஒடுங்குவதற்குக் காரணமாயிருப்பதால், सुषुप्तिस्थानं–ஸுஷுப்திஸ்தானமாக, इष्यते–கருதப்படுகிறது.

எல்லாம் ஒடுங்குவதற்குக் காரணமாயிருப்பதால், அந்த ஸமஷ்டி அக்ஞானம் ஸுஷுப்தி ஸ்தானம் (நல்லதூக்கநிலை) என்று கருதப்படுகிறது. இந்த ஸமஷ்டி அக்ஞானத்தில் எல்லாம் ஒடுங்கும் நிலையைத்தான் ப்ராக்ருதப்ரளயம் என்று வேதம் கூறுகிறது.

இவ்விதமாக ஈசுவரருக்கு உபாதியாயிருக்கும் ஸமஷ்டி அக்ஞானத்தை சரீரம் என்று வியவஹரித்தால் காரண சரீரம் என்றும், மறைக்கிற உரை என்று பார்த்தால் ஆனந்தமயகோசம் எனறும், ஒடுங்கும் நிலயாக பாவித்தால் ஸுஷுப்தி அவஸ்தை என்றும், பலவாறுகச் சொல்லமுடிகிறது. (315)

(அ) இதுவரை ஸமஷ்டி அக்ஞானத்தைப்பற்றிச் சொல்லி விட்டு இனி வியஷ்டி அக்ஞானத்தைப்பற்றி விவரிக்கிறார் :—

**अज्ञानं व्यष्टयभिप्रायात् अनेकत्वेन भिद्यते ।**
**अज्ञानवृत्तयो नाना तत्तद्गुणविलक्षणाः ॥ ३१६ ॥**

*அக்ஞாநம் வ்யஷ்ட்யபிப்ராயாத் அநேகத்வேந பித்யதே ।*
*அக்ஞாநவ்ருத்தயோ நாநா தத்தத்குணவிலக்ஷணா: ॥*

**अज्ञानवृत्तयः**—அக்ஞானத்தின் விருத்திகள், **तत्तद्गुणविलक्षणाः**— அந்தந்த குணங்களால் மாறுபட்ட தன்மைகளுள்ளவைகளாக, **नाना**— பல்வாக இருக்கின்றன. (ஆகையால்), **अज्ञानं**—அக்ஞானமானது, **व्यष्टयभिप्रायात्** —தனித்தனி என்ற அபிப்பிராயத்தில், **अनेकत्वेन**—பல் வாக, **भिद्यते**—வேற்றுமையடைகிறது.

அக்ஞானத்தில் அந்தந்த குணங்களையொட்டி விலக்ஷணமான அநேகம் விருத்திகள் ஏற்படுகின்றன. எல்லாவற்றையும் சேர்த்து பொதுவாகப்பார்த்தால் அக்ஞானம் என்பது ஒன்றாக இருந்த போதிலும் தனித்தனியாகப்பார்க்கும் பொழுது அக்ஞானமே அநேகமாக ஆகிறது (316)

**वनस्य व्यष्टयभिप्रायात् भूरुहा इत्यनेकता ।**
**यथा तथैवाज्ञानस्य व्यष्टितः स्यादनेकता ॥ ३१७ ॥**

*வநஸ்ய வ்யஷ்ட்யபிப்ராயாத் பூருஹா இத்யநேகதா ।*
*யதா ததைவாக்ஞாநஸ்ய வ்யஷ்டித: ஸ்யாதநேகதா ॥*

**वनस्य**—காட்டிற்கு, **व्यष्टयभिप्रायात्**—தனித்தனி என்ற அபிப் ராயத்தினால், **भूरुहाः इति**—மரங்கள் என்று, **अनेकता**—பல்வாக இருக்கும் தன்மை, **यथा**—எப்படியோ, **तथैव**—அப்படியே, **व्यष्टितः**—தனித்தனித் தன்மையால், **अज्ञानस्य**—அக்ஞானத்திற்கு, **अनेकता**—அநேகமாயிருக்கும் தன்மை **स्यात्** —ஏற்படும்.

அநேகம் மரங்கள் ஓரிடத்தில் சேர்ந்து இருப்பதைக்காடு என்கிறோம். காடு என்பது ஒன்றாக இருந்த போதிலும் அதிலுள்ள மரங்களைத்தனித்தனியாகப்பார்க்கும் பொழுது

அநேகமாகத்தெரிகிறது. இதுபோலவேதான் அக்ஞானமும் அநேகமாக ஆகிறது. (317)

**व्यष्टिर्मलिनसत्त्वैषा रजसा तमसा युता ।**
**ततो निकृष्टा भवति योपाधिः प्रत्यगात्मनः ॥ ३१८ ॥**

*வ்யஷ்டிர் மலிநஸத்வைஷா ரஜஸா தமஸா யுதா ।*
*ததோ நிக்ருஷ்டா பவதி யோபாதி: ப்ரத்யகாத்மந: ॥*

**रजसा**–ரஜோகுணத்தோடும், **तमसा**–தமோகுணத்தோடும், **युता**–கூடிய, **एषा**–இந்த, **व्यष्टिः**–வியஷ்டி அக்ஞானமானது, **मलिनसत्वा**–மலினமான ஸத்வகுணமுள்ளது, **ततः**–ஆகையால், **निकृष्टा**–தாழ்ந்ததாக **भवति**–ஆகிறது, **या**–எந்த இது, **प्रत्यगात्मनः**–ஜீவாத்மாவுக்கு, **उपाधिः**–உபாதியோ,

*பரமாத்மாவுக்கு உபாதியாக உள்ள ஸமஷ்டி அக்ஞானத்தில் ஸத்வகுணம் மேலோங்கியும் ரஜஸ்தமோகுணங்கள் இதற்கு உள் அடங்கியுமிருப்பதால் அது சிறந்ததாகக்கூறப்பட்டது. வியஷ்டி அக்ஞானத்திலோவெனில் ரஜஸ்தமோகுணங்கள் மேலிட்டும் இவைகளால் ஸத்வகுணம் மறைக்கப்பட்டும் இருப்பதால் இது நிக்ருஷ்டமானது இந்த வியஷ்டி அக்ஞானம்தான் பிரத்யகாத்மாவுக்கு உபாதி* (318)

*பிரத்யகாத்மாவென்பது எது என்று மேல் இரண்டு சுலோகங்களில் எடுத்துச் சொல்கிறர் :—*

**चैतन्यं व्यष्ट्यवच्छिन्नं प्रत्यगात्मेति गीयते ।**
**साभासं व्यष्ट्युपहितं सत्तादात्म्येन तद्गुणैः ॥ ३१९ ॥**
**अभिभूतः स एवात्मा जीव इत्यभिधीयते ।**
**किंचिज्ज्ञत्वानीश्वरत्वसंसारित्वादिधर्मवान्॥ ३२० ॥**

*சைதந்யம் வ்யஷ்ட்யவச்சிந்நம் ப்ரத்யகாத்மேதி கீயதே ।*
*ஸாபாஸம் வ்யஷ்ட்யுபஹிதம் ஸத் தாதாத்ம்யேந தத்குணை: ॥*
*அபிபூத: ஸ ஏவாத்மா ஜீவ இத்யபிதீயதே ।*
*கிஞ்சிஜ்ஞத்வாநீச்வரத்வஸம்ஸாரித்வாதி தர்மவான் ॥*

**व्यष्ट्यवच्छिन्नं**-வியஷ்டி அக்ஞானத்துடன் கூடியது, **व्यष्ट्युप-हितं सत्**-வியஷ்டி அக்ஞானத்தை உபாதியாகக்கொண்டு, **साभासं**-ப்ரதிபிம்பத்துடன் கூடியதுமான, **चैतन्यं**-சைதன்யமானது, **प्रत्यगात्मा इति**-பிரத்யகாத்மா என்று, **गीयते**-சொல்லப்படுகிறது, **तादात्म्येन**-அந்த அக்ஞான ஸ்வரூபமாகவே இருப்பதால், **तद्गुणैः**-அதன் குணங்களால், **अभिभूतः**-மறைக்கப்பட்டு, **किंचिज्ज्ञत्व**-அல்ப அறிவு, **अनीश्वरत्व**-ஈசுவரனுயில்லாதிருக்கும் தன்மை, **संसारित्वादि**-ஸம்ஸாரியாயிருக்கும் தன்மை முதலான, **धर्मवान्**-தர்மங்களுடன் கூடிய, **स एव आत्मा**-அந்த ஆத்மாவே, **जीव इति**-ஜீவன் என்று, **अभिधीयते**-சொல்லப்படுகிறது.

*வியஷ்டி அக்ஞானத்துடன் கூடிய சைதன்யம் அதாவது வியஷ்டி அக்ஞானத்தை உபாதியாகக்கொண்டு அதில் ஏற்படும் பிரதிபிம்பத்துடன் கூடிய சைதன்யம் ப்ரத்யகாத்மா என்று சொல்லப்படுகிறது. உபாதியான அக்ஞானஸ்வருபத்துடன் ஒன்றுகக்கலந்து அதன்குணங்களால் மறைக்கப்பட்டு கிஞ்சிஜ் ஞத்வம் (அல்பஞானமுள்ளதன்மை) அநீசுவரத்வம் (ஸ்வதந்திரமற்றதன்மை) ஸம்ஸாரித்வம் (பிறவிமரணங்களுடன் கூடியிருக்கும் தன்மை) முதலான தர்மங்களுடன் கூடிய அந்த ஆத்மாவே ஜீவன் என்று சொல்லப்படுகிறது. (319–320)*

**अस्य व्यष्टिः अहंकारकारणत्वेन कारणम् ।**
**वपुः तत्राभिमान्यात्मा प्राज्ञ इत्युच्यते बुधैः ॥ ३२१ ॥**

*அஸ்ய வ்யஷ்டிரஹங்காரகாரணத்வேந காரணம் ।*
*வபுஸ் தத்ராபிமாந்யாத்மா ப்ராஜ்ஞ இத்யுச்யதே புதை: ॥*

**अस्य**-இந்த ஜீவாத்மாவுக்கு, **अहंकारकारणत्वेन**-அஹங்காரத்திற்கு காரணமாக இருப்பதால், **व्यष्टिः**-வியஷ்டி அக்ஞானம், **कारणं वपुः**-காரண சரீரமாகும், **तत्र**-அந்தக்காரண சரீரத்தில், **अभिमानी**-அபிமானம் கொண்ட, **आत्मा**-ஆத்மா, **प्राज्ञ इति**-பிராக்ஞன் என்று, **बुधैः**-வித்வான்களால், **उच्यते**-சொல்லப்படுகிறுன்.

*இந்த ஆத்மாவிற்கு அஹங்காரம் அதாவது நான் என்கிற எண்ணம் உண்டாவதற்குக் காரணம் வியஷ்டி அக்ஞானம்தான்*

ஆகையால் இது ஆத்மாவிற்குக் காரண சரீரம் ஆகும். அந்த சரீரத்தை அபிமானிக்கும் ஆத்மா பிராக்ஞன் என்று சொல்லப் படுகிறது. (321)

प्राज्ञत्वं अस्यैकाज्ञानभासकत्वेन संमतम् ।
व्यष्टेर्निकृष्टत्वेनास्य नानेकाज्ञानभासकम् ॥ ३२२ ॥

ப்ராஜ்ஞத்வமஸ்யைகாஜ்ஞாநபாஸகத்வேந ஸம்மதம் ।
வ்யஷ்டேர் நிக்ருஷ்டத்வேநாஸ்ய நாநேகாஜ்ஞாந
பாஸகம் ॥

**एकाज्ञान भासकत्वेन**—ஒரு அஜ்ஞானத்தை விளக்குவதால், **अस्य**—இவனுக்கு, **प्राज्ञत्वं**—பிராக்ஞத்தன்மை, **संमतं**—ஒப்புக்கொள்ளப்பட்டது. **अस्य**—இவனுடைய, **व्यष्टेः**—வியஷ்டியானது, **निकृष्टत्वेन**—தாழ்ந்ததாயிருப்பதால், **न अनेकाज्ञानभासकम्**—அநேகம் அக்ஞானங்களை விளக்குவது இல்லை.

ஸாதாரணமாக நல்ல அறிவுள்ளவனைத்தான் பிராக்ஞன் என்று சொல்வது நியாயமாகும். அஹங்கார காரணமான வியஷ்டி அக்ஞானமாகிற காரண சரீரத்தை அபிமானிக்கிற ஜீவனை எப்படி பிராக்ஞன் என்று சொல்லலாம் என்று ஸந்தேகிக்கலாம் இவன் அக்ஞானத்தையே விளங்கும்படிச் செய்வதால் இவனுக்கு அந்தப் பெயர் ஏற்பட்டதென்றும், ஆனால் ஜீவனுடைய உபாதி தாழ்ந்ததானபடியால் இவனால் ஒரு அக்ஞானத்தைத் தான் விளங்கவைக்க முடியும். ஈசுவரனைப்போல எல்லா அக்ஞானங்களையும் விளங்கவைக்கும் சக்தி இவனுக்கு இல்லையென்றும் ஆசார்யார் தெளிவுபடுத்துகிறார். (322)

स्वरूपाच्छादकत्वेनाप्यानन्दप्रचुरत्वतः ।
कारणं वपुरानन्दमयः कोश इतीर्यते ॥ ३२३ ॥

ஸ்வருபாச்சாதகத்வேநாப்யாநந்தப்ரசுரத்வத: ।
காரணம் வபுராநந்தமய: கோஶ இதீர்யதே ॥

**स्वरूपाच्छादकत्वेन**—சைதன்யஸ்வரூபத்தை மறைப்பதாலும், **आनन्दप्रचुरत्वतः अपि**—ஆனந்தம் அதிகமாயிருப்பதாலும், **कारणं वपुः**—காரண சரீரம், **आनन्दमयः कोश इति**—ஆனந்தமயகோசம் என்று, **ईर्यते**—சொல்லப்படுகிறது.

இந்தக் காரண சரீரமான வியஷ்டி அஜ்ஞானமானது கோசம் அதாவது உரை கத்தியை மறைப்பதுபோல் ஸ்வரூபத்தை மறைப்பதாலும் ஆனந்தம் அதிகமாயிருப்பதாலும் ஆனந்தமய கோசம் என்று சொல்லப்படுகிறது. (323)

अस्यावस्था सुषुप्तिः स्यात् यत्रानन्दः प्रकृष्यते ।
एषोऽहं सुखमस्वाप्सं न तु किंचिदवेदिषम् ।
इत्यानन्दसमुत्कर्षः प्रबुद्धेषु प्रदृश्यते ॥ ३२४ ॥

அஸ்யாவஸ்த்தா ஸுஷுப்தி: ஸ்யாத் யத்ராநந்த: ப்ரக்ருஷ்யதே ।
ஏஷோऽஹம் ஸுகமஸ்வாப்ஸம் நது கிஞ்சிதவேதிஷம் ।
இத்யாநந்தஸமுத்கர்ஷ: ப்ரபுத்தேஷு ப்ரத்ருச்யதே ॥

**अस्य**-இவனுடைய, **अवस्था**-அவஸ்தையானது, **सुषुप्तिः स्यात्**-ஸுஷுப்தியாகும், **यत्र**-எதில், **आनन्दः**-ஆனந்தமானது, **प्रकृष्यते**-சிறப்பாக இருக்கிறதோ, **एषः अहं**-இந்த நான், **सुखं**-ஸுகமாக, **अस्वाप्सम्**-தூங்கினேன், **न तु किंचिदवेदिषम्**-ஒன்றையும் அறிந்து கொள்ளவில்லை, **इति**-என்று, **प्रबुद्धेषु**-(தூக்கத்திலிருந்து) விழித்துக் கொண்டவர்களிடம், **आनन्दसमुत्कर्षः**-ஆனந்தத்தின் சிறப்பு, **प्रदृश्यते**-காணப்படுகிறதோ.

"நான் ஸுகமாகத் தூங்கினேன். எனக்கு ஒன்றும் தெரியாது" என்று தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவன் சொல்கிறான். இரவில் நன்றாகத் தூங்கும்பொழுது தான் அனுபவித்த ஆனந்தத்தை நினைவுபடுத்திக்கொண்டு காலையில் இவ்வாறு கூறுவதால் ஸுஷுப்தி அவஸ்தையில் ஆனந்தம் அதிகமாக இருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் ஆனந்தமய கோசமென்னும் காரண சரீரத்தில் அபிமானியான ப்ராஜ்ஞனுக்கு ஸுஷுப்தி ஸ்தானமாகும். (324)

(ஆ) இவ்விதமாக ஸமஷ்டி அஜ்ஞானத்தை உபாதியாக உடைய ஈச்வரனுக்கு அதுவே காரண சரீரம், ஆனந்தமய கோசம், ஸுஷுப்தி நிலை என்றும், வியஷ்டி அஜ்ஞானத்தை உபாதியாக உடைய பிராஜ்ஞனுக்கு அதுவே காரண சரீரம், ஆனந்தமய கோசம், ஸுஷுப்தி நிலை என்றும் வர்ணித்திருக்கிறபடியால்,

முன்னாலேயே ஸமஷ்டிக்கும் வியஷ்டிக்கும் ஸ்வரூபத்தில் பேத மில்லையென்று காட்டிய நியாயப்படி, ப்ராக்ஞனும் ஈசவரனும் ஸ்வரூபத்தில் வேறுபட்டவர்களில்லை என்பதை துலக்குகிறார் :—

समष्टेरपि च व्यष्टेः उभयोर्वनवृक्षवत् ।
अभेद एव नो भेदो जात्यैकत्वेन वस्तुतः ॥ ३२५ ॥
अभेद एव ज्ञातव्यः तथेशप्राज्ञयोरपि ॥ ३२६ ॥

ஸமஷ்டேரபி ச வ்யஷ்டேருபயோர் வநவ்ருக்ஷவத் ।
அபேத ஏவ நோ பேதோ ஜாத்யைகத்வேந வஸ்துத: ॥
அபேத ஏவ ஞாதவ்யஸ்ததேச ப்ராஜ்ஞயோரபி ॥

**वस्तुतः**—உண்மையில், **जात्यैकत्वेन**—ஜாதி ஒன்றாயிருப்பதால், **समष्टेरपि**—ஸமஷ்டிக்கும், **व्यष्टेः च**—வியஷ்டிக்கும், **उभयोः**—இரண்டிற்கும், **वनवृक्षवत्**—காட்டிற்கும் மாத்திரத்தும்போல், **अभेद एव**—அபேதம் தான், **नो भेदः**—வேற்றுமை இல்லை **तथा**—அவ்வாறே, **ईशप्राज्ञयोरपि**—ஈசுவரனுக்கும் ப்ராக்ஞனுக்கும், **अभेद एव**—அபேதம்தான், **ज्ञातव्यः**—அறியத்தக்கது.

தனியான மரம், அநேகம் மரங்கள் சேர்ந்துள்ள காடு இரண்டிலும் மரம் என்ற ஒரே ஜாதியிருப்பதால் இரண்டிற்கும் வேற்றுமை கிடையாது இதுபோலவே ஸமஷ்டி, வியஷ்டி இரண்டும் அக்ஞானம் என்ற ஒரே ஜாதியைச் சேர்ந்ததால் இரண்டும் ஒன்றுதான், பேதம் கிடையாது. உபாதியான ஸமஷ்டி அக்ஞானத்திற்கும் வியஷ்டி அக்ஞானத்திற்கும் பேதமில்லாததால் இவைகளை உபாதியாகக்கொண்ட ஈசுவரனுக்கும் ப்ராக்ஞனுக்கும் பேதம் கிடையாது. அபேதம்தான். (325-326)

सत्युपाध्योरभिन्नत्वे क्व भेदस्तद्विशिष्टयोः ।
एकीभावे तरङ्गाब्ध्योः को भेदः प्रतिबिम्बयोः ॥ ३२७ ॥

ஸத்யுபாத்யோரபிந்நத்வே க்வ பேதஸ்தத்விசிஷ்டயோ: ।
ஏகீபாவே தரங்காப்த்யோ: கோ பேத: ப்ரதிபிம்பயோ: ॥

**उपाध्योः**-இருஉபாதிகளுக்கும், **अभिन्नत्वे सति**-வேற்றுமையில்லாதிருக்கும்பொழுது, **तद्विशिष्टयोः**-அவைகளுடன் கூடியவைகளுக்கு

**को भेदः**—வேற்றுமை ஏது? **तरङ्गाब्ध्योः**—அலையும் ஸமுத்திரமும், **एकीभावे**—ஒன்றாயிருக்கும்பொழுது, **प्रतिबिम्बयोः**-(அவைகளிலுள்ள) ப்ரதிபிம்பங்களுக்கு, **को भेदः**—என்ன வேற்றுமை?

*உபாதிகள் இரண்டும் வேறுபடாமலிருக்கையில், அவைகளுடன் சேர்ந்திருப்பவைகளுக்குள் வேற்றுமை எங்கிருந்துவரும்? அலையும் ஸமுத்திரமும் ஒன்றாயிருக்கும்போது அவைகளில் ஏற்படும் (ஸூர்ய) பிரதிபிம்பங்களுக்குள் என்ன வேற்றுமையிருக்கும்? (327)*

**अज्ञानतदवच्छिन्नाभासयोरुभयोरपि ।**
**आधारं शुद्धचैतन्यं यत् तत् तुर्यमितीर्यते ॥ ३२८ ॥**

*அக்ஞாந ததவச்சிந்நாபாஸயோருபயோரபி ।*
*ஆதாரம் ஶுத்தசைதந்யம் யத் தத் துர்யமிதீர்யதே ॥*

**अज्ञानतदवच्छिन्नाभासयोः उभयोरपि**—ஸமஷ்டியாயும் வியஷ்டியாயுமுள்ள அக்ஞானம் அதில் உள்ள பிரதிபிம்பம் இவ்விரண்டுகளுக்கும் **आधारं**—ஆச்ரயமாக இருக்கும், **यत्**—எந்த, **शुद्धचैतन्यं**—சுத்தசைதன்யமுண்டோ, **तत्**—அது, **तुर्यं**—துர்யம் (நான்காவது), **इति**—என்று, **ईर्यते**—சொல்லப்படுகிறது.

*ஸமஷ்டியாயும் வியஷ்டியாயுமுள்ள அக்ஞானம், அதனால் வரையறுக்கப்பட்டிருக்கும் பிரதிபிம்பம் (ஈசுவரன், பிராக்ஞன் இரண்டுவிதமும்) ஆகிய இரண்டிற்கும் ஆதாரமாய், அடிப்படையாய் இருக்கும் சுத்தமான சைதன்யம் துர்யம் நான்காவது என்று சொல்லப்படுகிறது. காரணம் ஒன்று, அதின் கார்யங்களாகிய ஸூக்ஷ்மம் ஸ்தூலம் என்கிற இரண்டு, ஆகமூன்றுக்கும் அடிப்படையாய் இருப்பதால் சுத்த சைதன்யம் நான்காவது என்று கருதப்படுகிறது. (328)*

**एतदेवाविविक्तं सत् उपाधिभ्यां च तद्गुणैः ।**
**महावाक्यस्य वाच्यार्थो विविक्तं लक्ष्य इष्यते ॥ ३२९ ॥**

*ஏததேவாவிவிக்தம் ஸதுபாதிப்யாம் ச தத்குணை: ।*
*மஹாவாக்யஸய வாச்யார்த்தோ விவிக்தம் லக்ஷ்ய இஷ்யதே ॥*

**उपाधिभ्यां**-இரண்டு உபாதிகளோடும், **तद्गुणैः च**-அவைகளின் குணங்களோடும், **अविविक्तं सत्**-பிரிக்கப்படாமல் சேர்ந்திருக்கும், **एतत् एव**-இந்த சைதன்யமே, **महावाक्यस्य**-மஹாவாக்கியத்திற்கு, **वाच्यार्थः**-பதங்களால் நேரில் சொல்லப்படும் பொருள், **विविक्तं**-பிரிக்கப் பட்டது, **लक्ष्यः**-லக்ஷணையால் குறிக்கப்படும் பொருளாக், **इष्यते**-கருதப்படுகிறது.

*நான்காவதான இந்த சுத்த சைதன்யமே இரண்டுவித உபாதி களிலிருந்தும், அவைகளின் குணங்களிலிருந்தும் வேறுபடாம லிருக்கும்போது, மஹாவாக்கியத்தின் பதங்களால் நேரில் சொல்லப்படும் பொருள் ஆகும். அதையே அவைகளிலிருந்து பிரித்து தனித்திருந்தால் லக்ஷணையால் குறிக்கப்படும் பொருள்.*

*"நீ அது" तत्त्वमसि "நான் பிரஹ்மம்" अहं ब्रह्मास्मि என்று உள்ள மஹாவாக்கியங்களில் "நீ, நான்" என்கிற வார்த்தை களினால் நேரில் சொல்லப்படும் பொருள் வியஷ்டி அக்ஞானமாகிற உபாதியுடன் சேர்ந்த ஜீவனாகும். அதே பதங்களினால் லக்ஷணை யால் குறிக்கப்படும் பொருள் அவ்வுபாதியற்று தனித்திருக்கும் சைதன்யமாகும். அப்படியே, "அது, பிரஹ்மம்" என்ற பதங் களால் நேரில் சொல்லப்படும் பொருள் ஸமஷ்டி அக்ஞானமாகிற உபாதியுடன் சேர்ந்த ஈசுவரனாகும். அதே பதங்களால் லக்ஷணை யால் குறிக்கப்படும் பொருள் அவ்வுபாதியற்று தனித்திருக்கும் "நான்காவதான" சைதன்யமாகும். இவ்விஷயத்தை பின்னால் ஸ்ரீமத் ஆசார்யாரே மிகவும் தெளிவாயும் விஸ்தாரமாயும் சொல்லப்போகிறார். (329)*

*(அ) இவ்வாறு ஆனந்தமய கோசத்தை வர்ணித்துவிட்டு விக்ஞானமய கோசத்தை விளக்குவதற்காக, ஸமஷ்டி அக்ஞான மாகிய மாயையை அவலம்பித்துக்கொண்டு ஈசுவரன் பிரபஞ்சத்தை ஸிருஷ்டி செய்யும் பிரகாரத்தை விரிவாகக் கூறு கிறார் :—*

**अनन्तशक्तिसंपन्नो मायोपाधिक ईश्वरः ।**
**ईक्षामात्रेण सृजति विश्वमेतच्चराचरम् ॥ ३३० ॥**

*அநந்தசக்திஸம்பந்நோ மாயோபாதிக ஈச்வர: ।*
*ஈக்ஷாமாத்ரேண ஸ்ருஜதி விச்வமேதச் சராசரம் ॥*

**अनन्तशक्तिसंपन्नः**-எல்லையற்ற சக்திகளோடுகூடிய, **मायोपाधिकः** மாயையை உபாதியாகக்கொண்ட, **ईश्वरः**-ஈசுவரன், **ईक्षामात्रेण**-ஸங்கல்பத்தினாலேயே, **चराचरं**-ஜங்கமமும் ஸ்தாவரமாயுமுள்ள, **एतत् विश्वं**-இந்த பிரபஞ்சத்தை, **सृजति**-ஸ்ருஷ்டிக்கிறார்.

*ஈசுவரனுக்கு மாயை உபாதியாக உள்ளது. அதனால் அவரிடம் எல்லையற்ற சக்திகள் உள்ளன. அவர் தமது ஸங்கல்பம் ஒன்றினாலேயே ஸ்தாவர ஜங்கம ரூபமான பிரபஞ்சம் முழுவதையும் ஸிருஷ்டிக்கிறார்* (330)

**अद्वितीयस्वमात्रोऽसौ निरुपादान ईश्वरः ।**
**स्वयमेव कथं सर्वं सृजतीति न शङ्क्यताम् ॥ ३३१ ॥**

*அத்விதீயஸ்வமாத்ரோ஽ஸௌ நிருபாதான ஈச்வர: ।*
*ஸ்வயமேவ கதம் ஸர்வம் ஸ்ருஜதீதி ந ஶங்க்யதாம் ॥*

**अद्वितीयस्वमात्रः**-இரண்டாவது பொருளில்லாமல் தான் மட்டுமே தனித்து இருப்பவராயும், **निरुपादान**-உபாதான காரணப்பொருளற்றவராயும் உள்ள, **असौ**-அந்த **ईश्वरः**-ஈசுவரன், **कथं**-எப்படி, **सर्वं**-எல்லாவற்றையும், **स्वयमेव**-தான் ஒருவராகவே, **सृजति**-ஸிருஷ்டி செய்கிறார், **इति**-என்று, **न शंक्यतां**-சந்தேகப்படவேண்டாம்.

*இந்த ஈசுவரன் இரண்டாவது பதார்த்தமில்லாமல் தான் மாத்திரம் தனித்து இருப்பவர், அவருக்கு எடுத்துக் கொள்வதற்கு வேறு பதார்த்தம் கிடையாது. அப்படியிருக்க அவர் தானாகவே எல்லாவற்றையும் எப்படி ஸ்ருஷ்டி செய்ய முடியும் என்று ஸந்தேகப்படவேண்டாம்.* (331)

**निमित्तमप्युपादानं स्वयमेव भवन् प्रभुः ।**
**चराचरात्मकं विश्वं सृजत्यवति लुम्पति ॥ ३३२ ॥**

*நிமித்தமப்யுபாதாநம் ஸ்வயமேவ பவன் ப்ரபு: ।*
*சராசராத்மகம் விச்வம் ஸ்ருஜத்யவதி லும்பதி ॥*

**प्रभुः**-பிரபுவான ஈசுவரன், **स्वयमेव**-தானாகவே, **निमित्तं**-நிமித்த காரணமாகவும், **उपादानमपि**-உபாதான காரணமாகவும், **भवन्**-ஆய்க் கொண்டு, **चराचरात्मकं**-ஜங்கமமாயும், ஸ்தாவரமாயுமுள்ள, **विश्वं**-

பிரபஞ்சத்தை, सृजति-ஸ்ருஷ்டிக்கிறார், अवति-காப்பாற்றுகிறார், लुम्पति-நாசம் செய்கிறார்.

உலகில் ஒரு குடம் உண்டாவதற்கு சேதனனை குயவன் என்ற நிமித்த காரணமும் அசேதனமான மண் என்ற உபாதான காரணமும் தேவைப்படுகிறது. உபாதானம், நிமித்தம் என்ற இரண்டு காரணங்களுமிருந்தால்தான் காரியம் உண்டாகிறது என்பதை உலகில் பார்க்கிறோம். ஸிருஷ்டியின் ஆரம்பத்திலோ ஈசுவரன் ஒருவர்தான் இருக்கிறார். இரண்டாவது பொருள் ஒன்றுமேயில்லை. ஆகவே பிரபஞ்சத்திற்கு சேதனனை ஈசுவரன் நிமித்த காரணமாக இருந்தபோதிலும் குடத்திற்கு மண்போல உபாதான காரணமான மூலப்பொருள் ஒன்றுமில்லாததால் ஈசுவரன் தான் ஒருவராக இருந்துகொண்டு பிரபஞ்சம் முழுவதை எப்படி ஸிருஷ்டிக்கமுடியும் என்று கேள்வி. இதற்கு ஸமாதானம்.

பிரபுவான ஈசுவரன் தானே செய்கிறவனை குயவன் போல நிமித்தகாரணமாயும் செய்யப்படுகிற மண்போல உபாதான காரணமாயும் இருந்துகொண்டு அசையும் பொருள் அசையாப் பொருள் உருவமான உலகத்தை உண்டுபண்ணுகிறார். காப்பாற்றுகிறார். நாசம் செய்கிறார். (332)

(அ) ஒருவரே இரண்டுவிதமாக அதாவது உபாதான காரணமாகவும் நிமித்தகாரணமாகவும் ஆகமுடியும் என்பதற்கு திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார் :—

स्वप्राधान्येन जगतो निमित्तमपि कारणम् ।
उपादानं तथोपाधिप्राधान्येन भवत्ययम् ॥ ३३३ ॥

यथा लूता निमित्तं च स्वप्रधानतया भवेत् ।
स्वशरीरप्रधानत्वेनोपादानं तथेश्वरः ॥ ३३४ ॥

ஸ்வப்ராதாந்யேந ஜகதோ நிமித்தமபி காரணம் ।
உபாதாநம் ததோபாதிப்ராதாந்யேந பவத்யயம் ॥

யதா லூதா நிமித்தம் ச ஸ்வப்ரதாநதயா பவேத் ।
ஸ்வஶரீரப்ரதாநத்வேநோபாதாநம் ததேச்வர: ॥

**यथा**-எப்படி, **लूता**-சிலந்திப்பூச்சியானது, **स्वप्रधानतया**-தான் பிரதானமாக இருப்பதால், **निमित्त**-நிமித்தகாரணமாகவும், **स्वशरीर-प्रधानत्वेन**-தனது சரீரம் பிரதானமாயிருப்பதால், **उपादानं च**-உபாதானகாரணமாகவும், **भवेत्**-ஆகுமோ, **तथा**-அப்படி, **अयं ईश्वरः**-இந்த ஈசுவரன், **स्वप्राधान्येन**-தன்னுடைய ப்ராதான்யத்தால், **जगतः**-பிரபஞ்சத்திற்கு, **निमित्तं कारणं**-நிமித்தகாரணமாகவும், **तथा**-அவ்வாறே, **उपाधिप्राधान्येन**-உபாதியான மாயையின் ப்ராதான்யத்தால், **उपादानं अपि**-உபாதான காரணமாகவும், **भवति**-ஆகிறார்.

*சிலந்திப்பூச்சியானது வெளியிலிருந்து ஒரு பொருளையும் எதிர்பார்க்காமல் தன் சரீரத்திலிருந்தே நூலைத் தயாரித்து கூடு கட்டுகிறது ஜீவசைதன்யமும் சரீரமும் பிரிக்க முடியாதபடி ஒன்றுசேர்ந்து ஒரே பொருளாக விளங்கும் சிலந்தியே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறது. ஜீவனில்லாவிட்டாலும், சிலந்தி உடலில்லாவிட்டாலும் கூடு உண்டாகாது. இரண்டும் சேர்ந்தே கூட்டைத் தயாரித்த போதிலும் ஜீவனுடன் சேர்ந்த சரீரம் உபாதான காரணமாகவும் சரீரத்துடன் சேர்ந்த ஜீவன் நிமித்த காரணமாகவும் ஆகிறது இதைத்தவிர வேறு காரணத்தை எதிர்பார்ப்பதில்லை இது போலவேதான் மாயாவச்சின்ன சைதன்ய ரூபமான ஈசுவரனே பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறார். "**यथोर्णनाभिः सृजते**" என்று முண்டகோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. ஈசுவர ஸ்வரூபத்திலுள்ள மாயை என்ற அம்சத்தைக்கொண்டு உபாதானகாரணமாகவும், சைதன்யாம்சத்தைக்கொண்டு நிமித்தகாரணமாகவும் ஆகிறார். இரண்டு அம்சங்களும் சேர்ந்தே ஈசுவரனாதலால் ஈசுவரனே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறார் என்று கூறப்பட்டது. (333-334)*

*(அ) சுத்த ஸத்வ பிரதானராயிருப்பவர் ஈசுவரன் என்றும், மலின ஸத்வ பிரதானராயிருப்பவன் ஜீவன் என்றும் முன் சொல்லப்பட்டது. ஜகத்திற்கு உபாதான காரணமாயிருப்பது மாயையின் எந்த அம்சம் என்ற கேள்வி ஏற்படக்கூடியதினால், அந்த அம்சம் தமோ குணத்தை முக்கியமாகவுள்ளதென்பதைச் சொல்லி அதிலிருந்துதான் ஆகாசம் முதலான ஐந்து பூதங்களும் அவைகளின் கார்யங்களும் ஏற்படுகின்றன என்பதை விவரிக்கிறார் :—*

**तमःप्रधानप्रकृतिविशिष्टात् परमात्मनः ।**
**अभूत् सकाशात् आकाशं आकाशात् वायुः उच्यते ॥ ३३५ ॥**

**वायोः अग्निः तथैवाग्नेः आपोऽद्भ्यः पृथिवी क्रमात् ।**

*தம: ப்ரதாநப்ரக்ருதி விஶிஷ்டாத் பரமாத்மந: ।*
*அபூத் ஸகாஶாதாகாஶமாகாஶாத் வாயுருச்யதே ॥*

*வாயோரக்நிஸ் ததைவாக்நேராபோऽத்ப்ய: ப்ருதிவீ க்ரமாத் ।*

**तमःप्रधानप्रकृतिविशिष्टात्** -தமோகுணத்தை முக்யமாகக்கொண்ட மாயையுடன்கூடிய, **परमात्मनः सकाशात्** -ஈசுவரனிடமிருந்து, **आकाशं**- ஆகாசம், **अभूत्** -உண்டாயிற்று, **आकाशात्** -ஆகாசத்திலிருந்து, **वायुः**-வாயு, **उच्यते**-உண்டானதாகச் சொல்லப்படுகிறது. **वायोः**- வாயுவிலிருந்து, **अग्निः**-அக்னியும், **तथैव**-அப்படியே, **अग्नेः**-அக்னியிலிருந்து, **आपः**-ஜலமும், **अद्भ्यः**-ஜலத்திலிருந்து, **पृथिवी**-பிருதிவியும், **क्रमात्** -வரிசையாக (உண்டாயிற்று).

*தமோ குணத்தை பிரதானமாயுடைய பிரகிருதியென்ற மாயையுடன் சேர்ந்திருக்கும் பரமாத்மாவான ஈசுவரனிடமிருந்து முதலில் ஆகாசம் உண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயுவும் வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருத்வியும் வரிசையாக உண்டாயின.*

*(அ) தமோகுண ப்ரதானமான மாயைதான் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமென்பதை நிருபணம் செய்கிறார் :—*

**शक्तेः तमःप्रधानत्वं तत्कार्ये जाड्यदर्शनात् ॥ ३३६ ॥**
**आरभन्ते कार्यगुणान् ये कारणगुणा हि ते ।**

*ஶக்தேஸ்தம:ப்ரதாநத்வம் தத்கார்யே ஜாட்யதர்ஶநாத் ॥*
*ஆரபந்தே கார்யகுணான் யே காரணகுணா ஹி தே ।*

**तत्कार्ये**-அதன் காரியத்தில், **जाड्यदर्शनात्** -ஜடத்தன்மை தெரிவதால், **शक्तेः**-காரணமான மாயைக்கு, **तमःप्रधानत्वं**-தமோகுணம் முக்கியமாயிருப்பது (தெரிகிறது). **ये**-எவை, **कारणगुणाः**-காரணத்தின்

குணங்களோ, **ते**-அவைகள். **कार्यगुणान्**-காரியத்தின் குணங்களை **आरभन्ते हि**-உண்டுபண்ணுமல்லவா !

*காரணத்தில் எந்த குணங்கள் உள்ளனவோ அவைகளே கார்யத்திலும் ஏற்படுகின்றன என்பதை உலகில் பார்க்கிறோம். மண்ணிலுள்ள குணங்கள் குடத்தில் காணப்படுகின்றன. காரியமான பிரபஞ்சம் முழுவதிலும் ஜடத்தன்மை காணப்படுகிறது. ஆகலால் இதன் காரணமான மாயையிலும் ஜடத்தன்மை இருக்க வேண்டுமென்று தெரிகிறது, ஜடத்தன்மை என்பது தமோ குணத்தைச்சேர்ந்தது. ஆகையால் தமோகுண ப்ரதானமான மாயைதான் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமென்று தீர்மானிக்கப்படுகிறது.*

**एतानि सूक्ष्मभूतानि भूतमात्रा अपि क्रमात् ॥ ३३७ ॥**

*ஏதாநி ஸூக்ஷ்மபூதாநி பூதமாத்ரா அபி க்ரமாத் ॥*

**एतानि**-இவைகள், **सूक्ष्मभूतानि**-ஸூக்ஷ்ம பூதங்கள், **क्रमात्**-வரிசையாக, **भूतमात्रा अपि**-அந்தந்த பூதங்களின் மாத்திரைகளாகவும் ஆகின்றன.

*இப்பொழுது சொன்னவைகள் ஸூக்ஷ்ம பூதங்கள் ஆகும். அவைகளே வரிசையாக அந்தந்த பூத மாத்திரைகள் அதாவது ஆகாச தன் மாத்திரை, வாயு தன் மாத்திரை, தேஜஸ் தன் மாத்திரை, ஜல தன்மாத்திரை, பிருத்வீ தன் மாத்திரை. (337)*

**एतेभ्यः सूक्ष्मभूतेभ्यः सूक्ष्मदेहा भवन्त्यपि ।**
**स्थूलान्यपि च भूतानि चान्योन्यांशविमेलनात् ॥ ३३८ ॥**

*ஏதேப்ய: ஸூக்ஷ்மபூதேப்ய: ஸூக்ஷ்மதேஹா பவந்த்யபி ।*
*ஸ்தூலாந்யபி ச பூதாநி சாந்யோந்யாம்ஶ விமேளநாத் ॥*

**एतेभ्यः**-இந்த, **सूक्ष्मभूतेभ्यः**-ஸூக்ஷ்மபூதங்களிலிருந்து. **सूक्ष्मदेहा अपि**-ஸூக்ஷ்ம சரீரங்களும், **अन्योन्यांशविमेलनात्**-ஒவ்வொன்றுகளின் பாகங்கள் சேருவதால், **स्थूलान्यपि च भूतानि**-ஸ்தூல பூதங்களும், **भवन्ति**-உண்டாகின்றன,

இந்த ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம தேசங்களும் ஒன்றோடொன்று அம்சங்கள் கலப்பதினால் ஸ்தூல பூதங்களும் உண்டாகின்றன.

[கலக்கும் முறையை பஞ்சீகரணம் என்பார்கள். ஆகாச தன் மாத்திரையில் பாதியும், வாயு தன்மாத்திரையில் அரைக்காலும், தேஜஸ் தன்மாத்திரையில் அரைக்காலும், ஜல தன் மாத்திரையில் அரைக்காலும், பிருத்வீ தன் மாத்திரையில் அரைக்காலும் சேர்ந்தால் ஒரு முழு ஆகாச ஸ்தூல பூதம் ஆகும். அப்படியே மற்ற பூதங்களிலும் பிரதானத்தில் பாதி, மற்ற நான்கில் அரைக்கால் அரைக்கால் என்று சேர்த்தால் அந்தந்த ஸ்தூல பூதங்கள் ஏற்படும் ஆக ஒவ்வொரு ஸ்தூல பூதத்திலும் எல்லா ஐந்து பூதங்களின் அம்சங்களும் சேருவதினால், இவ்விதம் சேர்ப்பதை பஞ்சீகரணம் (ஐந்தாகச் செய்வது) என்று சொல்வார்கள். பஞ்சீகரணம் செய்யப்படாத பூத தன் மாத்திரைகள், அதாவது ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரங்கள் ஏற்படுகின்றன. அப்படியே பஞ்சீகரணம் செய்யப் பட்ட ஸ்தூல பூதங்களிலிருந்து ஸ்தூலமாயுள்ள சரீரம் முதலியவை ஏற்படுகின்றன. பின்னால் 397 முதல் 400 சலோகங்களைப் பார்க்கவும். (338)

(அ) முதலில் பஞ்சீகரணம் செய்யப்படாத ஸூக்ஷ்மமான பூதங்களிலிருந்து ஏற்படும் ஸூக்ஷ்ம சரீரத்தின் தன்மையையும் அதனுள்ளடங்கியிருக்கும் அம்சங்களையும் விவரிக்கிறார்:—

अपञ्चीकृतभूतेभ्यो जातं सप्तदशाङ्गकम् ।
संसारकारणं लिङ्गं आत्मनो भोगसाधनम् ॥ ३३९ ॥

அபஞ்சீக்ருதபூதேப்யோ ஜாதம் ஸப்ததசாங்ககம் ।
ஸம்ஸாரகாரணம் லிங்கம் ஆத்மனோ போகஸாதனம் ॥

सप्तदशाङ्गकं-பதினேழு அவயவங்களை உடையதும், संसारकारणं-பிறவி மரணரூபமான ஸம்ஸாரத்திற்குக் காரணமானதும், आत्मनः-ஆத்மாவிற்கு, भोगसाधनं-ஸுகதுக்கானுபவத்திற்கு ஸாதனமாகவும் உள்ள, लिङ्गं-லிங்கசரீரம், अपञ्चीकृतभूतेभ्यः-பஞ்சீகரணம் செய்யப் படாத ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து, जातं-உண்டானது.

பஞ்சீகரணம் செய்யப்படாத ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களி லிருந்து உண்டானது லிங்க சரீரமென்பப்படும். இதுவே ஸூக்ஷ்ம சரீரம். இதில் 17 அவயவங்கள் உள்ளன. இதுதான் பிறவி மரண ரூபமான ஸம்ஸாரத்திற்குக் காரணம். சரீரத்தில் வஸிக்கும் ஆத்மாவிற்கு ஸுக துக்காதி போகங்கள் ஏற்படுவதற்கும் இதுவே ஸாதனம் (339)

(அ) லிங்க சரீரத்திலுள்ள 17 அங்கங்களைக் கூறுகிறார் :—

**श्रोत्रादिपञ्चकं चैव वागादीनां च पञ्चकम् ।**
**प्राणादिपञ्चकं बुद्धिमनसी लिङ्गमुच्यते ॥ ३४० ॥**

ச்ரோத்ராதிபஞ்சகம் சைவ வாகாதீநாம் ச பஞ்சகம் ।
ப்ராணாதிபஞ்சகம் புத்திமநஸீ லிங்கமுச்யதே ॥

**श्रोत्रादिपञ्चकं चैव**-காது முதலிய ஐந்தும், **वागादीनां पञ्चकं च**-வாக்கு முதலான ஐந்தும், **प्राणादिपञ्चकं**-பிராணன் முதலான ஐந்தும், **बुद्धिमनसी**-புத்தியும் மனமும் (இவை சேர்ந்தது), **लिङ्गं उच्यते**-லிங்கசரீர மென்று சொல்லப்படுகிறது.

காது, த்வக், கண், நாக்கு, மூக்கு இவை ச்ரோத்ராதி பஞ்சகம். வாக்கு, கை, கால், பாயு, உபஸ்த்தம் இவை வாகாதி பஞ்சகம். பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், இவை பிராணாதி பஞ்சகம். புத்தி, மனம், ஆக இந்த 17ம் சேர்ந்தது லிங்க சரீரமெனப்படும். (340)

**श्रोत्रत्वक् चक्षुर्जिह्वाघ्राणानि पञ्च जातानि ।**
**आकाशादीनां सत्त्वांशेभ्यो धीन्द्रियाण्यनुक्रमतः ॥ ३४१ ॥**

ச்ரோத்ரத்வக்சக்ஷுர்ஜிஹ்வாக்ராணானி பஞ்ச ஜாதானி ।
ஆகாசாதீநாம் ஸத்வாம்சேப்யோ
தீந்த்ரியாண்யநுக்ரமத: ॥

**आकाशादीनां**-ஆகாசம் முதலியவைகளின், **सत्त्वांशेभ्यः**-ஸத்வாம் சங்களிலிருந்து, **अनुक्रमतः**-வரிசையாக, **श्रोत्रत्वक् चक्षुर्जिह्वाघ्राणानि**-காது, த்வக்கு, கண், நாக்கு, மூக்கு என்ற, **पञ्च**-ஐந்து, **धीन्द्रियाणि**-ஞானேந்திரியங்கள், **जातानि**-உண்டாயின.

இந்த பதினேழில் காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்தும் ஞானேந்திரியங்கள். இவை ஆகாசம் முதலியவைகளின் ஸத்வாம்சங்களிலிருந்து வரிசையாக ஏற்பட்டவைகள்.

[இங்கே சொல்லப்படும் காது முதலியது ஸ்தூல சரீரத்தில் தெரியும் மாம்ஸ பிண்டங்கள் இல்லை. சப்தத்தை கிரஹிக்கும் சக்தி, ஸ்பர்சத்தை கிரஹிக்கும் சக்தி, ரூபத்தை கிரஹிக்கும் சக்தி, ரஸத்தை கிரஹிக்கும் சக்தி, வாஸனையை கிரஹிக்கும் சக்தி, என்றே அர்த்தம். இவைகள் அந்தந்த உணர்ச்சியை உண்டுபண்ணுவதினால் ஞானேந்திரியங்கள் எனப்படுகின்றன. இவைகளில் ஆகாசத்தின் ஸத்வாம்சத்திலிருந்து ஏற்பட்டது காது என்கிற இந்திரியம், வாயுவின் ஸத்வாம்சத்திலிருந்து தோல் என்ற இந்திரியம், தேஜஸ்ஸின் ஸத்வாம்சத்திலிருந்து கண் என்ற இந்திரியம், ஜலத்தின் ஸத்வாம்சத்திலிருந்து நாக்கு என்ற இந்திரியம், பிருத்வியின் ஸத்வாம்சத்திலிருந்து மூக்கு என்ற இந்திரியம், இவ்விதமாக ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து வரிசையாய் உண்டாகின்றன. முன்னால் மாயையின் தமோகுணப் பிரதானமான அம்சத்திலிருந்து இந்த ஸூக்ஷ்ம பூதங்கள் உண்டானதாகச் சொன்ன போதிலும் தமோகுணம் பிரதானமே தவிர அவைகளில் ஸத்வாம்சமும் உண்டு ரஜஸ் அம்சமும் உண்டு என்பதை மறந்து விடக்கூடாது.] (341)

आकाशादिगताः पञ्च सात्त्विकांशाः परस्परम् ।
मिलित्वैव अन्तःकरणं अभवत् सर्वकारणम् ॥ ३४२ ॥

*ஆகாசாதிகதா: பஞ்ச ஸாத்விகாம்சா: பரஸ்பரம் ।*
*மிலித்வைவாந்த:கரணமபவத் ஸர்வகாரணம் ॥*

**आकाशादिगताः**–ஆகாசம் முதலியவைகளிலுள்ள, **पञ्च सात्त्विकांशाः**–ஐந்து ஸாத்விகாம்சங்களும், **परस्परं**–ஒன்றுக்கொன்று **मिलित्वैव**–சேர்ந்துதான், **सर्वकारणं**–எல்லாவற்றிற்கும் காரணமான, **अन्तःकरणं**–அந்தக்கரணமாக, **अभवत्**–ஆனது.

ஆகாசம் முதலான ஐந்து பூதங்களிலும் உள்ள ஐந்து ஸத்வ அம்சங்களும் ஒன்றோடொன்று சேர்ந்துதான் எல்லாவற்றிற்கும் காரணமாயிருக்கிற அந்தக்கரணம் என்ற உள் கருவி ஏற்பட்டது.

(அ) ஞானேந்திரியங்கள் ஐந்தும் பஞ்ச பூதங்களின் ஸத்வாம்சங்களிலிருந்து உண்டானதற்குக் காரணம் கூறுகிறார் :—

**प्रकाशकत्वात् एतेषां सात्विकांशत्वं इष्यते ।**
**प्रकाशकत्वं सत्त्वस्य स्वच्छत्वेन यतस्ततः ॥ ३४३ ॥**

*ப்ரகாஶகத்வாதேதேஷாம் ஸாத்விகாம்ஶத்வமிஷ்யதே I*
*ப்ரகாஶகத்வம் ஸத்வஸ்ய ஸ்வச்சத்வேந யதஸ்தத: II*

**यतः**–எந்தக்காரணத்தால், **स्वच्छत्वेन** – ஸ்வச்சமாயிருப்பதால், **सत्त्वस्य**–ஸத்வகுணத்திற்கு, **प्रकाशकत्वं**–பிரகாசப்படுத்தும் தன்மையுண்டோ, **ततः**–அந்தக்காரணத்தால், **एतेषां**–இவைகளுக்கு, **प्रकाशकत्वात्**–பிரகாசப்படுத்தும் தன்மை இருப்பதால், **सात्विकांशत्वं**–ஸாத்விகாம்சமாக இருக்கும் தன்மை, **इष्यते**–கருதப்படுகிறது.

*ஸத்வ குணம் மிகத்தெளிவாயிருப்பதால் அதற்குத்தான் பிரகாசப்படுத்தும் சக்தி உண்டு. ரஜஸ் தமோகுணங்களுக்கு இந்த சக்தி கிடையாது. ஐந்து ஞானேந்திரியங்களும் அந்தக்கரணமும் சப்தாதி விஷயங்களை பிரகாசப்படுத்துகின்றன. ஸத்வ குணத்தின் ஸ்வபாவம் இவற்றில் காணப்படுவதால் இவை பஞ்ச பூதங்களின் ஸத்வாம்சங்களிலிருந்து உண்டாயிருக்க வேண்டும் என்று தீர்மானிக்கலாம்.* *(343)*

**तदन्तःकरणं वृत्तिभेदेन स्यात् चतुर्विधम् ।**
**मनो बुद्धिः अहंकारः चित्तं चेति तदुच्यते ॥ ३४४ ॥**

*ததந்தக்கரணம் வ்ருத்தி பேதேந ஸ்யாத் சதுர்விதம் I*
*மநோ புத்திரஹங்கார: சித்தம் சேதி ததுச்யதே II*

**तत्** அந்த, **अन्तःकरणं**–அந்தக்கரணம், **वृत्तिभेदेन**–விருத்திகளின் வேற்றுமையால். **चतुर्विधं स्यात्** –நான்குவிதமாக ஆகும். **तत्** –அது, **मनः**–மனம், **बुद्धिः**–புத்தி, **अहङ्कारः**–அஹங்காரம் **चित्तं चेति**–சித்தம் என்றும், **उच्यते**–சொல்லப்படுகிறது.

*அந்த அந்தஃகரணம் செய்கையின் வேறுபாட்டால் நான்குவிதமாக இருக்கும். அது மனஸ் என்றும், புத்தி என்றும், அஹங்காரம் என்றும், சித்தம் என்றும், சொல்லப்படுகிறது.*

[ லிங்க சரீரத்தில் அடங்கியதாக 340வது சுலோகத்தில் புத்தி மனஸ் இரண்டு சொல்லியிருக்கையில் 342வது சுலோகத்தில் புதிதாக அந்தக்கரணம் என்று ஒன்று சொல்லப்படுகிறதே என்று நினைக்கவேண்டாம், புத்தியும் மனஸும் அந்தக்கரணத்தில் அடங்கியவைதான். தவிரவும் நன்கு விசாரித்துப் பார்த்தால் அந்த:கரணத்தில் புத்தி, மனஸ், சித்தம் அஹங்காரம் என்று நான்கு பிரிவுகள் இருக்கின்றன. அவைகளில் சித்தம் என்பதை மனஸிலும், அஹங்காரம் என்பதை புத்தியிலும், உள்ளடக்கி மனஸ், புத்தி யென்று இரண்டு மாத்திரம் அந்த சுலோகத்தில் கூறப்பட்டது ] (344)

संकल्पात् मन इत्याहुः बुद्धिः अर्थस्य निश्चयात् ।
अभिमानात् अहंकारः चित्तं अर्थस्य चिन्तनात् ॥ ३४५ ॥

ஸங்கல்பாத் மந இத்யாஹு: புத்திரர்த்தஸ்ய நிச்சயாத் ।
அபிமாநாதஹங்கார: சித்தமர்த்தஸ்ய சிந்தநாத் ॥

**संकल्पात्**—ஸங்கல்பம் செய்வதால், **मन इति**—மனமென்றும், **अर्थस्य निश्चयात्** விஷயத்தைத் தீர்மானிப்பதால், **बुद्धिः**—புத்தி என்றும், **अभिमानात्**—நான் என்று அபிமானம் கொள்வதால், **अहङ्कारः**—அஹங்காரமென்றும், **अर्थस्य चिन्तनात्**—விஷயத்தை எண்ணுவதால், **चित्तं**—சித்தமென்றும், **आहुः**—சொல்கிறார்கள்.

ஆலோசனை செய்கிற காரணத்தினால் மனஸ் என்றும், விஷயத்தை நிச்சயம் செய்கிறபடியால் புத்தி என்றும், நான் என்கிற அபிமானம் செய்வதால் அஹங்காரம் என்றும், விஷயத்தை நினைத்துப் பார்ப்பதால் சித்தம் என்றும் இவ்வாறு ஒரே அந்த:கரணம் நான்கு வகைப்படுகிறது. (345)

(அ) அஹங்காரம் சித்தம் இவ்விரண்டும் லிங்க சரீரத்தில் சேர்ந்ததுதான் என்பதை காரணத்துடன் கூறுகிறார் :—

मनस्यपि च बुद्धौ च चित्ताहंकारयोः क्रमात् ।
अन्तर्भावोऽत्र बोद्धव्यो लिङ्गलक्षणसिद्धये ॥ ३४६ ॥

மநஸ்யபி ச புத்தௌ ச சித்தாஹங்காரயோ: க்ரமாத் ।
அந்தர்பாவோऽத்ர போத்தவ்ய: லிங்கலக்ஷணஸித்தயே ॥

**अत्र**—இங்கு, **लिङ्गलक्षणसिद्धये**—லிங்கசரீரத்தின் லக்ஷணம் ஸித்திப்பதற்காக, **मनसि अपि च**—மனதிலும், **बुद्धौ च**—புத்தியிலும், **चित्ताहङ्कारयोः**—சித்தத்திற்கும் அஹங்காரத்திற்கும், **क्रमात्**—வரிசையாக, **अन्तर्भावः**—உள் அடங்கியிருப்பது, **बोद्धव्यः**—அறியத்தக்கது.

*சித்தத்திற்கும் அஹங்காரத்திற்கும் லிங்க சரீர லக்ஷணம் ஸித்திப்பதற்காக மனதில் சித்தமும், புத்தியில் அஹங்காரமும் அடங்கியுள்ளதாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.* (346)

**चिन्तनं च मनोधर्मः संकल्पादिर्यथा तथा ।**
**अन्तर्भावो मनस्येव सम्यक् चित्तस्य सिध्यति ॥ ३४७ ॥**

*சிந்தனம் ச மனோதர்ம: ஸங்கல்பாதிர் யதா ததா ।*
*அந்தர்பாவோ மனஸ்யேவ ஸம்யக் சித்தஸ்ய ஸித்யதி ॥*

**संकल्पादिः**—ஸங்கல்பம் முதலானவை, **यथा**—எப்படியோ, **तथा**—அப்படியே, **चिन्तनं च**—நினைப்பதும், **मनोधर्मः**—மனதின் கார்யம் (ஆகையால்), **चित्तस्य**—சித்தத்திற்கு, **मनस्येव**—மனதில்தான், **अन्तर्भावः**—அடக்கம், **सम्यक्** நன்ருக, **सिध्यति**—ஸித்திக்கிறது.

*எப்படி ஆலோசனை முதலானது மனஸின் தர்மமோ, அப்படியே நினைத்துப் பார்ப்பதும் மனோதர்மம் தான். ஆகையால் சித்தத்தை மனஸிலேயே உள்ளடக்குவது உசிதம் தான்* (347)

**देहादौ अहमित्येव भावो दृढतरो धियः ।**
**दृश्यते अहंकृतेस्तस्मात् अन्तर्भावोऽत्र युज्यते ॥ ३४८ ॥**

*தேஹாதாவஹமித்யேவ பாவோ த்ருடதரோ திய:।*
*த்ருச்யதேऽஹங்க்ருதேஸ் தஸ்மாதந்தர்பாவோऽத்ர யுஜ்யதே ॥*

**देहादौ**—தேஹம் முதலியவற்றில், **अहं इति**—நான் என்ற, **दृढतरः**—மிக உறுதியான, **भावः**—எண்ணம், **धिय एव**—புத்திக்குத்தான், **दृश्यते**—காணப்படுகிறது. **तस्मात्**—ஆகையால, **अत्र**—இந்த புத்தியில், **अहंकृतेः**—அஹங்காரத்திற்கு, **अन्तर्भावः**—அந்தர்பாவம், **युज्यते**—பொருந்துகிறது.

*தேஹம் முதலானதில் நான் என்கிற உறுதியான எண்ணம் புத்திக்குத்தான் காணப்படுகிறது. ஆகையால் இந்த புத்தியில்*

அஹங்காரத்தை உள்ளடக்குவது நியாயம் தான். 339வது சுலோகத்தில் கூறப்பட்ட லிங்கசரீர லக்ஷணத்தில் உள்ள 17 அங்கங்களை விவரிக்கும் பொழுது 340வது சுலோகத்தில் மனமும் புத்தியும் தான் சேர்க்கப்பட்டுள்ளது. சித்தமும் அஹங்காரமும் லிங்கசரீரத்தில் சேர்க்சப்படவில்லை. இங்கேயோ மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் இந்நான்கும் ஒரே அந்தக்கரணத்தின் ரூபங்களாகக் கூறப்படுகிறது சித்தமும், அஹங்காரமும் லிங்க சரீரத்தில் சேரவில்லையே என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. இதைப்போக்குகிறார் அந்தக்கரணத்தின் பேதங்களான மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் இந்நான்கும் லிங்கசரீரத்தில் சேர்ந்தது தான். 340வது சுலோகத்தில் புத்தி, அஹங்காரம் இவ்விரண்டும் புத்திபதத்தால் குறிக்கப்படுகிறது. அப்படியே மனஸ் என்ற பதத்தால் மனம் சித்தம் இரண்டும் குறிக்கப்படு கிறது. ஸங்கல்பம் போலவே சித்தம் என்ற பெயர் ஏற்படக் காரணமான ஸ்மரணமும் மனோ தர்மம். ஆகையால் சித்தமும் மனமும் ஒன்றுதான். நிச்சயத்தைப் போலவே அஹங்காரமும் புத்திதர்மம். ஆகையால் புத்தியும் அஹங்காரமும் ஒன்றுதான் மேலே கோசங்களை நிருபணம் செய்வதற்காகத்தான் மனோபுத்தி களில் சித்தாஹங்காரங்களுக்கு அந்தர்பாவம் கூறப்படுகிறது.

**तस्मादेव तु बुद्धेः कर्तृत्वं तदितरस्य करणत्वम् ।**
**सिध्यत्यात्मन उभयं विद्यात् संसारकारणं मोहात् ॥ ३४९ ॥**

தஸ்மாதேவ து புத்தே: கர்த்ருத்வம் ததிதரஸ்ய
கரணத்வம் ।
ஸித்யத்யாத்மந உபயம் வித்யாத் ஸம்ஸார காரணம்
மோஹாத் ॥

**तस्मादेव तु**–ஆகையினால்தான், **बुद्धेः**–புத்திக்கு, **कर्तृत्वं**–கர்த்தா வாக இருக்கும் தன்மையும், **तदितरस्य**–அதைக்காட்டிலும் வேறான மனதிற்கு, **करणत्वं**–கரணமாக இருக்கும் தன்மையும், **सिध्यति**–ஸித்திக்கிறது. **मोहात्**-அவிவேகத்தால், **आत्मनः**–ஆத்மாவுக்கு, **उभयं**–இரண்டும், **संसारकारणं**-ஸம்ஸார காரணமாக, **विद्यात्**-அறியத்தக்கது.

அஹங்காரம், அதாவது தேஹாதிகளை தான் என்று அபிமானிப்பது புத்தியின் தர்மமானபடியால் தான் புத்தியை கர்த்தாவாகவும், ஸங்கல்பம் முதலியவைகளைச் செய்யும் மனதை

கரணமாகவும் சொல்லுகிறார்கள் கர்த்தாவாகவும், கரணமாகவும் உள்ள புத்தி, மனம் இவ்விரண்டும் தான் அவிவேகியான ஆத்மாவுக்கு ஸம்ஸாரம் ஏற்படக் காரணமாகிறது. நான் என்கிற எண்ணமும், இது என் கருவி என்கிற எண்ணமும் இருந்தால் தான் உலகத்தில் பிரவிருத்தி ஸாத்தியமாகும். பிரவிருத்தி யேற்பட்டால் தான் புண்ணியம், பாபம், ஸுகம், துக்கம் முதலியது அடங்கிய ஸம்ஸாரம் ஏற்படும். (349)

(அ) இவ்விதம் உள்கருவியான அந்தக்கரணத்தை புத்தி மனஸ் என்று இரண்டாகப் பிரித்து, புத்தியுடன் ஞானேந்திரியங்களைச் சேர்த்தால் விக்ஞானமய கோசமென்றும் மனஸுடன் ஞானேந்திரியங்களைச் சேர்த்தால் மனோமய கோசம் என்றும், வியவஹாரம் ஏற்படுகிறதென்பதை மேலால் சொல்கிறார்:—

विज्ञानमयकोशः स्यात् बुद्धिः ज्ञानेन्द्रियैः सह ।
विज्ञानप्रचुरत्वेनाप्याच्छादकतयाऽऽत्मनः ॥
विज्ञानमयकोशोऽयं इति विद्वद्भिरुच्यते ॥ ३५० ॥

விஜ்ஞாநமயகோஶ: ஸ்யாத் புத்திர் ஜ்ஞானேந்த்ரியை: ஸஹ ।
விஜ்ஞாநப்ரசுரத்வேநாப்யாச்சாதகதயா ऽऽத்மந: ।
விஜ்ஞாநமயகோஶோऽயமிதி வித்வத்பிருச்யதே ॥

**ज्ञानेन्द्रियैः सह**—ஞானேந்திரியங்களுடன்கூட, **बुद्धिः**—புத்தியானது, **विज्ञानमयकोशः स्यात्**—விஞ்ஞானமயகோசமாகும், **विज्ञान-प्रचुरत्वेन**—விஞ்ஞானம் அதிகமாக இருப்பதாலும், **आत्मनः आच्छादक-तयाऽपि**—ஆத்மாவை மறைப்பதாலும், **अयं**—இது, **विज्ञानमयकोश इति**—விஞ்ஞானமயகோசமென்று, **विद्वद्भिः**—வித்வான்களால், **उच्यते**—சொல்லப்படுகிறது.

காது, த்வக்கு, கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியும் சேர்ந்தது விஜ்ஞானமய கோசமாகும். இந்த ஆறுகரணங்களாலும் விஷயஞானம் ஏற்படுவதாலும் இவை ஆத்ம ஸ்வரூபத்தை உரைபோல் மறைப்பதாலும் இதற்கு விக்ஞானமய கோசமென்ற பெயர் வந்தது. (350)

अयं महान् अहंकारवृत्तिमान् कर्तृलक्षणः ।
सर्वसंसारनिर्वोढा विज्ञानमयशब्दभाक् ॥३५१॥

அயம் மஹாநஹங்காரவ்ருத்திமான் கர்த்ரு லக்ஷண: ।
ஸர்வஸம்ஸாரநிர்வோடா விஜ்ஞாநமயஶப்தபாக் ॥

**विज्ञानमयशब्दभाक्**-விஞ்ஞானமயன் என்ற பெயரை அடைந்திருக்கிற, **अयं**-இது, **महान्**-பெரியது, **अहंकारवृत्तिमान्**-நான் என்று எண்ணும் விருத்தியுடன் கூடியது. **कर्तृलक्षणः**-செய்கிற ஸ்வபாவமுள்ளது, **सर्वसंसारनिर्वोढा**-எல்லா ஸம்ஸாரத்தையும் வஹிப்பது.

இந்த விஜ்ஞானமய கோசம் பெரியது "அஹம்" (நான்) என்ற எண்ணம் இதற்குத் தான் ஏற்படுகிறது. இது தான் கர்த்தா அதாவது எல்லாக் காரியங்களையும் செய்கிறது. ஸுகம் துக்கம் முதலான ஸம்ஸாரத்தையே நடத்துவது இதுதான். (351)

अहं ममेत्येव सदाऽभिमानं
देहेन्द्रियादौ कुरुते गृहादौ ॥
जीवाभिमानः पुरुषोऽयमेव
कर्ता च भोक्ता च सुखी च दुःखी ॥ ३५२ ॥

அஹம் மமேத்யேவ ஸதாऽபிமாநம்
தேஹேந்த்ரியாதௌ குருதே க்ருஹாதௌ ।
ஜீவாபிமாந: புருஷோऽயமேவ
கர்த்தா ச போக்தா ச ஸுகீ ச துக்கீ ॥

**जीवाभिमानः**-ஜீவன் என்ற அபிமானம் கொண்டு, **कर्ता च** கர்த்தாவாகவும், **भोक्ता च**-போக்தாவாகவும், **सुखी**-ஸுகியாகவும், **दुःखी च**-துக்கியாகவும் உள்ள, **अयमेव पुरुषः**-இந்த புருஷன் தான், **देहेन्द्रियादौ**-தேஹம், இந்திரியம் முதலியவற்றிலும், **गृहादौ**-வீடு முதலியவற்றிலும், **सदा**-எப்பொழுதும், **अहं ममेत्येव**-நான், என்னுடையது என்றே, **अभिमानं कुरुते**-அபிமானத்தைச் செய்கிறான்.

இந்த விஜ்ஞானமயன் தான், தேஹம், இந்திரியம் முதலியவற்றிலும், வெளியிலுள்ள வீடு முதலியவற்றிலும் நான் என்றும்

என்னுடையது என்றும் அபிமானம் கொள்கிறான். தன்னை ஜீவன் என்று எண்ணுகிறவனும் இவனே. கர்மாவைச் செய்பவனும் அதன் பலனை ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறவனும் இவனே. (352)

स्ववासनाप्रेरित एव नित्यं
करोति कर्मोभयलक्षणं च ।
भुङ्क्ते तदुत्पन्नफलं विशिष्टं
सुखं च दुःखं च परत्र चात्र ॥ ३५३ ॥

ஸ்வவாஸநாப்ரேரித ஏவ நித்யம்
கரோதி கர்மோபயலக்ஷணம் ச ।
புங்க்தே ததுத்பந்நபலம் விசிஷ்டம்
ஸுகம் ச துக்கம் ச பரத்ர சாத்ர ॥

**स्ववासनाप्रेरित एव**–தனது வாஸனைகளால் தூண்டப்பட்டவனாகவே (இவன்), **नित्यं**–எப்பொழுதும், **उभयलक्षणं**–இரண்டுவித ஸ்வரூபமுள்ள, **कर्म च**–கர்மாவையும், **करोति**–செய்கிறான், **तदुत्पन्नफलं**–அதிலிருந்து ஏற்பட்ட பலனை, **विशिष्टं**–குறிப்பிட்ட, **सुखं च**–ஸுகத்தையும், **दुःखं च**–துக்கத்தையும், **अत्र**–இவ்வுலகிலும், **परत्र च**–மேலுலகிலும, **भुङ्क्ते**–அனுபவிக்கிறான்.

*முற்பிறவிகளில் செய்த கர்மாக்களின் மூலம் அவற்றிற்குத் தக்கபடி ஸூக்ஷ்மமான வாஸனைகள் இவனிடம் சேர்ந்துள்ளன. இந்த வாஸனைகளால் தூண்டப்பட்டு ஸத்வாஸனையால் நல்ல கர்மாக்களையும், அஸத்வாஸனையால் கெட்ட கர்மாக்களையும் இப்பிறவியில் செய்கிறான். இந்த கர்மாக்களின் பலனை ஸுக துக்கங்களை இவ்வுலகிலும், மேல் லோகங்களான ஸ்வர்க்கநரகாதிகளிலும் அனுபவிக்கிறான். இத்துடன் அந்தந்த கர்மாக்களுக்குத் தக்கவாறு வாஸனைகளும் பலமடைகிறது.* (353)

नानायोनिसहस्रेषु जायमानो मुहुर्मुहुः ।
म्रियमाणो भ्रमत्येष जीवः संसारमण्डले ॥ ३५४ ॥

நாநாயோநிஸஹஸ்ரேஷு ஜாயமாநோ முஹுர் முஹு: ।
ம்ரியமாணோ ப்ரமத்யேஷ ஜீவ: ஸம்ஸாரமண்டலே ॥

**एष जीवः**–இந்த ஜீவன், **मुहुर्मुहुः**–அடிக்கடி **नानायोनिसहस्रेषु**–பல ஆயிரக்கணக்கான பிறவிகளில், **जायमानः**–பிறக்கிறவனாகவும், **म्रियमाणः**–இறக்கிறவனாகவும், **संसारमण्डले**–ஸம்ஸார மண்டலத்தில், **भ्रमति**–சுற்றுகிறான்.

இவ்வாறு இந்த ஜீவன் பலவித ஆயிரக்கணக்கான பிறவிகளில் அடிக்கடி பிறந்து இறந்து ஸம்ஸாரமாகிற மண்டலத்தில் சுழல்கிறான். (354)

(அ) விக்ஞானமய கோசத்தை விளக்கி விட்டு மனோமய கோசத்தை வர்ணிக்கிறார் :—

मनो मनोमयः कोशो भवेत् ज्ञानेन्द्रियैः सह ।
प्राचुर्यं मनसो यत्र दृश्यतेऽसौ मनोमयः ॥ ३५५ ॥

மநோ மநோமய: கோஶோ பவேத் ஞாநேந்த்ரியை: ஸஹ ।
ப்ராசுர்யம் மநஸோ யத்ர த்ருச்யதேऽஸௌ மநோமய: ॥

**ज्ञानेन्द्रियैः सह**–ஞானேந்திரியங்களுடன்கூட, **मनः**–மனமானது, **मनोमयकोशः भवेत्**–மனோமயகோசம் ஆகும். **यत्र**–எதில், **मनसः**–மனதிற்கு, **प्राचुर्यं**–அதிகத்தன்மை, **दृश्यते**–காணப்படுகிறதோ, **असौ**–அது, **मनोमयः**–மனோமயம்.

ஞானேந்திரியங்களுடன் சேர்ந்த மனம் மனோமய கோசம் ஆகும். இதில் மனோவியாபாரம் அதிகமாகக் காணப்படுவதால் இதற்கு மனோமயம் என்று பெயர். (355)

चिन्ताविषादहर्षाद्याः कामाद्याः अस्य वृत्तयः ।
मनुते मनसैवैष फलं कामयते बहिः ।
यतते कुरुते भुङ्क्ते तन्मनः सर्वकारणम् ॥ ३५६ ॥

சிந்தாவிஷாதஹர்ஷாத்யா: காமாத்யா அஸ்ய வ்ருத்தய:
மநுதே மநஸைவைஷ பலம் காமயதே பஹி:
யததே குருதே புங்க்தே தன்மந: ஸர்வகாரணம் ।

**चिन्ता**–கவலை, **विषादः**–துயரம், **हर्षाद्याः**–ஸந்தோஷம் முதலியவைகளும், **कामाद्याः**–காமம் முதலியவைகளும், **अस्य**–இந்த மனோமயனுடைய

**वृत्तयः**-வியாபாரங்கள், **एषः**-இவன், **मनसैव**-மனதாலேயே, **मनुते**-எண்ணுகிறான். **बहिः**-வெளியில், **फलं**-பலனை, **कामयते**-விரும்புகிறான். **यतते**-முயற்சிக்கிறான், **कुरुते**-செய்கிறான், **भुङ्क्ते**-அனுபவிக்கிறான், **तत्**-ஆகையால், **मनः**-மனம், **सर्वकारणं**-எல்லாவற்றிற்கும் காரணம்.

கவலை, துயரம், ஸந்தோஷம் முதலியவைகளும் காமம் முதலிய வைகளும் மனதின் காரியங்கள் வெளியிலுள்ள பலனைப்பற்றிய எண்ணம் முதலில் மனதில் ஏற்பட்டபின்தான் அதை அடைய ஆசை கொள்கிறான். அதற்குப்பின் அதையடைய முயற்சி எடுத்துக்கொண்டு உபாயங்களான கர்மாக்களைச் செய்து பலனை அனுபவிக்கிறான். ஆதலால் எல்லாவற்றிற்கும் மூலகாரணம் மனம்தான். (356).

मनो ह्यमुष्य प्रवणस्य हेतुः
अन्तर्बहिश्चार्थमनेन वेत्ति ।
शृणोति जिघ्रत्यमुनैव चेक्षते
वक्ति स्पृशत्यत्ति करोति सर्वम् ॥ ॥ ३५७ ॥

மநோ ஹ்யமுஷ்ய ப்ரவணஸ்ய ஹேது:
அந்தர் பஹிச்சார்த்தமநேந வேத்தி ।
ச்ருணோதி ஜிக்ரத்யமுநைவ சேக்ஷதே
வக்தி ஸ்ப்ருசத்யத்தி கரோதி ஸர்வம் ॥

**अमुष्य**-இவனுடைய, **प्रवणस्य**-ஈடுபாட்டிற்கு, **मनः**-மனம். **हेतुर्हि**-காரணமல்லவா, **अनेन**-இந்த மனதால், **अन्तर्बहिश्च**-உள்ளும் வெளியும், **अर्थं**-பொருளை, **वेत्ति**-அறிந்துகொள்கிறான். **अमुनैव**-இந்த மனதாலேயே, **शृणोति**-கேட்கிறான், **जिघ्रति**-முகர்கிறான், **ईक्षते**-பார்க்கிறான், **वक्ति**-பேசுகிறான், **स्पृशति**-தொடுகிறான், **अत्ति**-தின்கிறான், **सर्वं**-எல்லாவற்றையும், **करोति**-செய்கிறான்.

ஜீவன் உள்ளும் வெளியிலும் உள்ள விஷயங்களை மனதைக் கொண்டு தான் அறிந்து கொள்கிறான். கேட்பது, தொடுவது, பார்ப்பது, முகர்வது, தின்பது, பேசுவது எல்லாம் மனதால்தான். ஸுஷுப்தியிலும் ஸமாதியிலும் மனம் அடங்கியிருக்கும் பொழுது ஒன்றும் தெரிவதில்லை, மனம் வேறொன்றில் நன்கு ஈடுபட்டிருக்கு

மாணால் கண்கள் திறந்திருந்தும் பார்க்க முடிவதில்லை வாசனையை முகரவோ, காதால் கேட்கவோ முடிவதில்லை இதுபோலவே மற்றவையும். கண் முதலிய இந்திரியங்களே பார்ப்பது முதலியதில் கருவிகளாயிருந்த போதிலும் அவைகளுடன் மனஸ் சேராமலிருந்தால் அவை எவ்வித அறிவையும் உண்டு பண்ணுவதில்லை. இந்தக் காரணத்தினால் மனஸே எல்லாவற்றையும் செய்கிறதென்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. விஷயங்களில் ஈடுபடுவதற்கும் மனம் தான் காரணம். (357)

बन्धश्च मोक्षो मनसैव पुंसां
अर्थोऽप्यनर्थोऽप्यमुनैव सिध्यति ।
शुद्धेन मोक्षो मलिनेन बन्धो
विवेकतोऽर्थोऽप्यविवेकतोऽन्यः ॥ ३५८ ॥

பந்தச்ச மோக்ஷோ மநஸைவ பும்ஸாம்
அர்த்தோऽப்யநர்த்தோऽப்யமுநைவ ஸித்யதி ।
ஶுத்தேந மோக்ஷோ மலிநேந பந்தோ
விவேகதோऽர்த்தோऽப்யவிவேகதோऽந்ய: ॥

**पुंसां**–மனிதர்களுக்கு, **मनसैव**–மனதால்தான், **बन्धश्च**–பந்தமும், **मोक्षः**–மோக்ஷமும் ஏற்படுகிறது, **अमुनैव**–இதனாலேயே, **अर्थोऽपि**–புருஷார்த்தமும், **अनर्थोऽपि**–துன்பமும், **सिध्यति**–கிடைக்கிறது, **शुद्धेन**–சுத்தமான மனதால், **मोक्षः**–முக்தியும், **मलिनेन**–அசுத்தமான மனதால், **बन्धः**–பந்தமும், **विवेकतः**–விவேகத்தால், **अर्थः**–புருஷார்த்தமும், **अविवेकतः**–அவிவேகத்தால், **अन्योऽपि**–மற்றதான துன்பமும் (ஏற்படுகிறது)

மனிதர்களுக்கு பந்தமும் மோக்ஷமும் மனதால் தான் ஏற்படுகிறது. அவ்விதமே புருஷார்த்தமும், அனர்த்தமும் இந்த மனதால் தான் உண்டாகிறது. எப்படியெனில் மனதில் அழுக்கில்லாமல் சுத்தமாயிருந்தால் மோக்ஷம் கிடைக்கும். காமம் முதலான அழுக்குகள் ஏறி அசுத்தமாயிருந்தால் பந்தம் ஏற்படுகிறது ஆத்மாநாத்மவிவேகம் இருந்தால் புருஷார்த்தமும் விவேகமில்லாவிட்டால் அனர்த்தமும் உண்டாகிறது. (358)

रजस्तमोभ्यां मलिनं त्वशुद्धं
अज्ञानजं सत्त्वगुणेन रिक्तम् ।
मनस्तमोदोषसमन्वितत्वात्
जडत्वमोहालसताप्रमादैः ।
तिरस्कृतं सत् न तु वेत्ति वास्तवं
पदार्थतत्त्वं ह्युपलभ्यमानम् ॥ ३५९ ॥

*ரஜஸ்தமோப்யாம் மலிநம் த்வசுத்தம்*
*அக்ஞாநஜம் ஸத்வகுணேந ரிக்தம் ।*
*மநஸ்தமோதோஷஸமந்விதத்வாத்*
*ஜடத்வமோஹாலஸதாப்ரமாதை : ।*
*திரஸ்க்ருதம் ஸத் ந து வேத்தி வாஸ்தவம்*
*பதார்த்த தத்வம் ஹ்யுபலப்யமாநம் ॥*

**रजस्तमोभ्यां**–ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும், **मलिनं**–அழுக்கடைந்ததும், **अशुद्धं**–சுத்தமில்லாததும், **अज्ञानजं**–அக்ஞானத்தால் ஏற்பட்டதும், **सत्त्वगुणेन रिक्तं**–ஸத்வகுணமற்றதுமான, **मनः**–மனமானது, **तमोदोषसमन्वितत्वात्**–தமோகுணமென்னும் தோஷத்துடன் கூடியிருப்பதால், **जडत्व**–அறிவின்மை, **मोह**–மயக்கம், **अलसता**–சோம்பல், **प्रमादैः**–கவனக்குறைவு இவைகளால், **तिरस्कृतं सत्**–மறைக்கப்பட்டதாய்க் கொண்டு, **उपलभ्यमानं**–அறியப்படுகிறதாயிருந்தபோதிலும், **वास्तवं** – உண்மையான, **पदार्थतत्त्वं** – பதார்த்த ஸ்வரூபத்தை, **नतु वेत्ति**–நன்கு அறிகிறதில்லை.

*ரஜோகுணமும் தமோகுணமும் மேலோங்கி ஸத்வகுணம் மறைந்திருக்குமானால் அந்த மனம் அழுக்கடைந்தது சுத்தமில்லாதது அக்ஞானத்தால் ஏற்பட்டது. இந்த மனம் தமோகுணத்தின் கார்யமான அறிவின்மை மயக்கம், சோம்பல், கவனக் குறைவு முதலான தோஷங்களால் மூடப்பட்டு உண்மையை அறியும் சக்தியை இழந்துவிடுகிறது. ஆகையால் வஸ்துக்களைத் தெரிந்துகொண்டாலும் அவற்றின் உண்மை தத்வம் மனதில் புலப்படுவதில்லை.* *(359)*

**रजोदोषैर्युक्तं यदि भवति विक्षेपकगुणैः**
**प्रतीपैः कामाद्यैः अनिशमभिभूतं व्यथयति ।**
**कथंचित् सूक्ष्मार्थावगतिमदपि भ्राम्यति भृशं**
**मनो दीपो यद्वत् प्रबलमरुता ध्वस्तमहिमा ॥**

*ரஜோதோஷைர் யுக்தம் யதி பவதி விக்ஷேபககுணை:*
*ப்ரதீபை: காமாத்யை: அநிசமபிபூதம் வ்யதயதி ।*
*கதஞ்சித் ஸூக்ஷ்மார்த்தாவகதிமதபி ப்ராம்யதி ப்ருசம்*
*மனோ தீபோ யத்வத் ப்ரபலமருதா த்வஸ்த மஹிமா ॥*

**विक्षेपकगुणैः**–விக்ஷேபத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ள, **रजोदोषैः**-ரஜோகுண தோஷங்களோடு, **युक्तं**-கூடினதாக, **यदि भवति**-(மனம்) இருக்குமேயானல், **प्रतीपैः**–ப்ரதிகூலமான, **कामाद्यैः**–காமம் முதலியவைகளால், **अनिशं**–எப்பொழுதும், **अभिभूतं**–தாக்கப்பட்டு, **व्यथयति**–துன்புறுத்துகிறது, **कथंचित्**–சிரமப்பட்டு, **सूक्ष्मार्थावगतिमदपि**-ஸூக்ஷ்மமான விஷயங்களின் அறிவுடன் கூடியிருந்தபோதிலும், **प्रबलमरुता**-வலிமையுள்ள காற்றினல், **ध्वस्तमहिमा**–போக்கப்பட்ட மஹிமையை (பிரகாசப்படுத்தும் சக்தியை) உடைய, **दीपो यद्वत्**– தீபம் போல், **मनः**-மனமானது, **भृशं**-மிகவும், **भ्राम्यति**–சுழலுகிறது.

*ரஜோகுணம் விக்ஷேபத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ளது. இந்த ரஜோகுணத்தின் தோஷங்கள் மனதில் கூடியிருக்குமானல் பிரதிகூலங்களான காமம் முதலியவை மனதைப் பற்றிக்கொண்டு மிகவும் துன்புறுத்துகிறது ஏதாவது ஒருசமயம் ஸூக்ஷ்மமான விஷயங்களை அறிய மனம் முற்பட்ட போதிலும் காமாதிகளினல் சித்தத்திற்கு ப்ரமணம் ஏற்பட்டு நன்கு அறிய முடிவதில்லை. பலமான காற்றின் நடுவில் உள்ள தீபஜ்வாலை அதிகமாக சலிப்பதால் அதன் பிரகாச சக்தி மங்கி விடுவது போல் மனதின் சக்தியும் மங்கிவிடுகிறது.*

(360)

**ततो मुमुक्षुः भवबन्धमुक्त्यै**
**रजस्तमोभ्यां च तदीयकार्यैः ।**
**वियोज्य चित्तं परिशुद्धसत्त्वं**
**प्रियं प्रयत्नेन सदैव कुर्यात् ॥ ३६१ ॥**

ததோ முமுக்ஷுர் பவபந்தமுக்த்யை
ரஜஸ்தமோப்யாம் ச ததீயகார்யை: I
வியோஜ்ய சித்தம் பரிசுத்தஸத்வம்
ப்ரியம் ப்ரயத்நேந ஸதைவ குர்யாத் II

**ततः**–ஆகையால், **मुमुक्षुः**–மோக்ஷம் அடைய விரும்புபவன், **भवबन्धविमुक्त्यै**–ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதன் பொருட்டு, **सदैव**–எப்போதும், **प्रयत्नेन**–முயற்சியுடன், **रजस्तमोभ्यां**–ரஜோகுண தமோகுணங்களோடும், **तदीयकार्यैः च**–அவைகளுடையகாரியங்களோடும் **चित्तं**–மனதை, **वियोज्य**–சேராதிருக்கும்படி செய்து, **परिशुद्धसत्वं**–சுத்தமான ஸத்வகுணமுள்ளதாகவும், **प्रियं**–ப்ரியமானதாகவும், **कुर्यात्**–செய்யவேண்டும்.

ஆகையினால் முமுக்ஷுவாயிருப்பவன், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடையும் பொருட்டு, மனதிலுள்ள ரஜோகுணம், தமோகுணம் அவ்விரண்டின் கார்யங்கள் இவைகளை அடியோடு நன்கு விலக்கி விட்டு மேலும் அவைகளுக்குக் கொஞ்சமும் இடம் கொடாமல் மனதை சுத்தமான ஸத்வகுணமுள்ளதாகவும் பிரியமாகவும் பிரயத்தனத்துடன் எப்பொழுதுமே செய்ய வேண்டும். (361)

गर्भावासजनिप्रणाशनजराव्याध्यादिषु प्राणिनां
यद्दुःखं परिदृश्यते च नरके तच्चिन्तयित्वा मुहुः ।
दोषानेव विलोक्य सर्वविषयेष्वाशां विमुच्याभितः
चित्तग्रन्थिविमोचनाय सुमतिः सत्वं समालम्बताम् ॥

கர்ப்பாவாஸ ஜனிப்ரணாசந ஜராவ்யாத்யாதிஷு
ப்ராணிநாம்
யத் துக்கம் பரித்ருச்யதே ச நரகே தச்சிந்தயித்வா முஹு: I
தோஷாநேவ விலோக்ய ஸர்வவிஷயேஷ்வாசாம்
விமுச்யாபித:
சித்தக்ரந்திவிமோசநாய ஸுமதி: ஸத்வம்
ஸமாலம்பதாம் II

**गर्भावास**–கர்ப்பவாஸம், **जनि**–பிறப்பு, **प्रणाशन**–மரணம், **जरा**–மூப்பு, **व्याध्यादिषु**–பிணிமுதலியவைகளிலும், **नरके च**–நரகத்திலும்,

**प्राणिनां**-பிராணிகளுக்கு, **यत् दुःखं**-எந்த துக்கம், **परिदृश्यते**-காணப் படுகிறதோ. **तत्**-அதை, **मुहुः**-அடிக்கடி, **चिन्तयित्वा**-ஆலோசித்து, **सर्वविषयेषु**-எல்லா விஷயங்களிலும், **दोषानेव**-தோஷங்களையே, **विलोक्य**-பார்த்து, **अभितः**-எங்கும், **आशां**-ஆசையை, **विमुच्य**-விட்டுவிட்டு, **चित्तग्रन्थिविमोचनाय**-மனதிலுள்ள பந்தம் நீங்குவதற்காக, **सुमतिः**-நல்ல புத்தியுள்ளவன், **सत्त्वं**-ஸத்வகுணத்தை, **समालम्बताम्**-ஆச்ரயிக்கட்டும்.

*நல்ல புத்தியுள்ளவன் பிராணிகளுக்கு கர்பத்தில் வாஸம் செய்வது, பிறப்பு, அழிவு, மூப்பு, வியாதி முதலியவைகளிலும் நரகத்திலும் ஏற்படும் துக்கங்களை அடிக்கடி நினைத்துப் பார்த்து எல்லா விஷயங்களிலும் உள்ள தோஷங்களையே நன்கு கவனித்து ஒன்றிலும் ஆசை கொள்ளாமல் மனதிலுள்ள பந்தத்திலிருந்து விடுதலை யடைவதற்காக ஸத்வகுணத்தை அவலம்பிக்கட்டும்.*

*[சரீராதிகளில் நான் என்றும், புத்ரன் மனைவி முதலியவைகளில் என்னுடையவை என்றும் அபிமானம் கொள்வதுதான் சித்தக்ரந்தி என்பது]* **(362)**

*(அ) மனஸ் ரஜஸ்தமஸ்களிலிருந்து விடுபட்டு நல்ல ஸத்வ குணத்தால் சுத்தமாகி விட்டால் நன்கு தெளிவடைந்து ஆத்ம தத்வத்தை கிரஹிக்கும் யோக்கியதையைப் பெற்று முக்திக்கு ஸாதனமாகக் கூடியதினால், அந்த மனத்தெளிவு ஏற்படுவதற்குள்ள உபாயங்களையும் அதன் அவசியத்தன்மையையும் மேலால் விளக்குகிறார் :—*

**यमेषु निरतो यस्तु नियमेषु च यत्नतः ।**
**विवेकिनः तस्य चित्तं प्रसादमधिगच्छति ॥ ३६३ ॥**

*யமேஷு நிரதோ யஸ்து நியமேஷு ச யத்நத: ।*
*விவேகிநஸ் தஸ்ய சித்தம் ப்ரஸாதமதிகச்சதி ॥*

**यस्तु**-எவன், **यत्नतः**-முயற்சியுடன், **यमेषु**-யமங்களிலும், **नियमेषु च**-நியமங்களிலும், **निरतः**-ஈடுபட்டிருக்கிறானோ, **तस्य**-அந்த, **विवेकिनः** விவேகமுள்ளவனுடைய, **चित्तं**-மனது, **प्रसादं अधिगच्छति**-தெளிவை அடைகிறது.

எவன் யமங்களிலும் நியமங்களிலும் ப்ரயத்தின புரஸ்ஸரமாக ஈடுபட்டிருக்கிறானோ, அந்த விவேகியினுடைய மனஸ் தெளிவை யடைகிறது.

[ அஹிம்ஸை (எல்லா பிராணிகள் விஷயமாயும் மனோவாக்குக் காயங்களால் துன்பம் ஏற்படுத்தாமலிருப்பது), ஸத்யம் (கண்டதை, கேட்டதை அப்படியே சொல்லுதல்) அஸ்தேயம் (பிறர் பொருளை மனோவாக்குக் காயங்களால் அபஹரிக்காம லிருத்தல்); பிரஹ்மசர்யம் (முன் 109, 110 சுலோகங்களில் சொல்லியபடி ஸ்திரீ ஸங்கமில்லாமலிருப்பது), அபரிக்ரஹம் (தன்னுடையது என்று எதையும் வைத்துக் கொள்ளாம லிருப்பது), ஆகிய இவை ஐந்தும் யமங்கள் எனப்படும். சௌசம் (சரீரத்தையும் மனஸையும் சுத்தமாக வைத்துக் கொள்வது) ஸந்தோஷம் (எப்பொழுதும் திருப்தியுடனிருப்பது), தபஸ் (இந்திரியங்கள் முதலானவைகளை நிக்ரஹம் செய்வது), ஸ்வாத்யாயம் (தனக்கு ஏற்பட்ட வேதபாகத்தை அத்யயனம் செய்வது), ஈச்வர பிரணிதானம் (பகவானிடத்தில் ஈடுபடல்), ஆகிய இவ்வைந்தும் நியமங்கள் எனப்படுகின்றன. பொதுவாக, தனக்கும் உலகத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தை கட்டுப்படுத்திக் கொள்வது யமம் என்றும், தன் நடத்தையே கட்டுப்படுத்திக் கொள்வது நியமம் என்றுமாகும். இந்த இரண்டுவித ஸாதனங் களும் மனஸ் தெளிவடைவதற்கு மிகவும் அவசியம். ] (363)

आसुरीं संपदं त्यक्त्वा भजेद्यो दैवसंपदम् ।
मोक्षैककाङ्क्षया नित्यं तस्य चित्तं प्रसीदति ॥ ३६४ ॥

ஆஸுரீம் ஸம்பதம் த்யக்த்வா பஜேத்யோ தைவஸம்பதம் ।
மோக்ஷைககாங்க்ஷயா நித்யம் தஸ்ய சித்தம் ப்ரஸீததி ॥

यः-எவன், मोक्षैककाङ्क्षया-மோக்ஷம் ஒன்றிலேயே விருப்பத் துடன், आसुरीं संपदं-ஆஸுர ஸம்பத்தை, त्यक्त्वा-விட்டுவிட்டு, नित्यं - எப்பொழுதும், दैवसंपदं - தைவஸம்பத்தை, भजेत् - அடைகிறானோ, तस्य - அவனுடைய, चित्तं - மனது, प्रसीदति- தெளிவடைகிறது.

எவன் மோக்ஷம் ஒன்றிலேயே ஆசையுடன், ஆஸுரமான ஸம்பத்தை விட்டு விட்டு தைவமான ஸம்பத்தையே, எப்பொழுதும் நாடுவானோ, அவனுடைய மனம் தெளிவடையும்,

[ ஆஸுர ஸம்பத்து, தைவ ஸம்பத்து இரண்டும் பகவத்கீதை 16வது அத்யாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அதை இங்கே எடுத்துச் சொல்வதானால் மிகவும் விரியும். பொதுவாக எதெல்லாம் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாயிருக்குமோ, அவையெல்லாம் ஆஸுர ஸம்பத்து, எதெல்லாம் அப்பந்தத்திலிருந்து விடுதலை யடைவதற்கு உபயோகப்படுமோ, அவையெல்லாம் தைவ ஸம்பத்து என்று அவ்வத்யாயம் 5வது சுலோகத்தில் கண்டிருப்பதை லக்ஷணமாக வைத்துக் கொள்ளலாம். மனதின் தெளிவு மோக்ஷத்திற்கு ஸாதனமானதினால் தைவ ஸம்பத்து அவசியம் வேண்டுமென்பதில் ஸந்தேகமில்லை ]. (364)

परद्रव्यपरद्रोहपरनिन्दापरस्त्रियः ।
नालम्बते मनो यस्य तस्य चित्तं प्रसीदति ॥ ३६५ ॥

பரத்ரவ்யபரத்ரோஹபரநிந்தாபரஸ்த்ரிய: ।
நாலம்பதே மனோ யஸ்ய தஸ்ய சித்தம் ப்ரஸீததி ॥

परद्रव्य–பிறருடைய பொருள், परद्रोह–பிறருக்கு த்ரோஹம் செய்தல், परनिन्दा–பிறரை தூஷிப்பது, परस्त्रियः–பிறர் மனைவி இவைகளை, यस्य मनः–எவருடைய மனம், नालम्बते–நாடவில்லையோ, तस्य–அவனுடைய, चित्तं–மனது, प्रसीदति–தெளிவடைகிறது.

பிறர் பொருளில் ஆசை கொள்ளாமலும், பிறருக்குத் தீங்கு செய்யாமலும், பிறரை நிந்திக்காமலும், பிறர் மனைவியிடம் ஆசை கொள்ளாமலும் இருப்பவனுடைய மனம் தான் ப்ரஸன்னமாக இருக்கும். (365)

आत्मवत्सर्वभूतेषु यः समत्वेन पश्यति ।
सुखं दुःखं विवेकेन तस्य चित्तं प्रसीदति ॥ ३६६ ॥

ஆத்மவத் ஸர்வபூதேஷு ய: ஸமத்வேந பச்யதி ।
ஸுகம் துக்கம் விவேகேந தஸ்ய சித்தம் ப்ரஸீததி ॥

यः–எவன், विवेकेन–விவேகத்தால், सर्वभूतेषु–எல்லா பிராணிகளிடமும், आत्मवत्–தன்னைப்போலவே, सुखं–ஸுகத்தையும், दुःखं–துக்கத்தையும், समत्वेन–ஸமமாக, पश्यति–பார்க்கிறானோ, तस्य–அவனுடைய, चित्तं–மனம், प्रसीदति–தெளிவடைகிறது.

தனக்கு ஸுகம் ஏற்பட்டால் ஸந்தோஷமடைவது போல் பிறருக்கு ஸுகம் ஏற்பட்டாலும் அஸூயை கொள்ளாமல் ஸந்தோஷமடைந்தும், தனக்கு துக்கம் ஏற்பட்டால் வருந்தி அதை நீக்க முயற்சிப்பதுபோல் பிறருக்கு துன்பம் ஏற்பட்டாலும் வருத்த மடைந்து அதை நீக்க முயற்சிக்கும் மனிதனுடைய மனம்தான் தெளிவடையும். ஸுகதுக்க விஷயங்களில் தன்னைப்போலவே எல்லா பிராணிகளையும் ஸமமாகப் பார்க்கவேண்டும். (366)

अत्यन्तं श्रद्धया भक्त्या गुरुमीश्वरमात्मनि ।
यो भजत्यनिशं क्षान्तस्तस्य चित्तं प्रसीदति ॥ ३६७ ॥

அத்யந்தம் ச்ரத்தயா பக்த்யா குருமீச்வரம் ஆத்மனி ।
யோ பஜத்யநிசம் க்ஷாந்த: தஸ்ய சித்தம் ப்ரஸீததி ॥

यः–எவன், क्षान्तः–பொறுமையுள்ளவனாக, अनिशं–எப்பொழுதும் अत्यन्तं–மிகவும், श्रद्धया–சிரத்தையோடு, भक्त्या–பக்தியுடன், आत्मनि–மனதில், गुरुं–குருவையும், ईश्वरं–ஈசுவரனையும், भजति–ஸேவிக்கிறானோ तस्य–அவனுடைய, चित्तं–மனது, प्रसीदति–தெளிவடைகிறது.

எவன் பொறுமையாயிருந்து கொண்டு மனதில் மிகவும் சிரத்தையுடனும் பக்தியுடனும் குருவையும், ஈசுவரனையும் எப்பொழுதும் ஸேவிக்கிறானோ அவனுடைய மனஸ் தெளிவடையும். (367)

शिष्टान्नमीशार्चनमार्यसेवां
तीर्थाटनं स्वाश्रमधर्मनिष्ठाम् ।
यमानुषक्तिं नियमानुवृत्तिं
चित्तप्रसादाय वदन्ति तज्ज्ञाः ॥ ३६८ ॥

சிஷ்டாந்நமீசார்ச்சனம் ஆர்யஸேவாம்
தீர்த்தாடநம் ஸ்வாச்ரமதர்மநிஷ்டாம் ।
யமாநுஷக்திம் நியமாநுவ்ருத்திம்
சித்தப்ரஸாதாய வதந்தி தஜ்ஞா: ॥

शिष्टान्नं–ஸாதுக்களுடைய அன்னத்தையும் (சாஸ்திரங்களில் சாப்பிடும்படி விதிக்கப்பட்ட அன்னத்தையும்), ईशार्चनं–தேவபூஜையை

யும், **आर्यसेवां**-பெரியோர்களின் ஸேவையையும், **तीर्थाटनं**-புண்ய தீர்த்தங்களுக்குச் செல்வதையும், **स्वाश्रमधर्मनिष्ठां**-தனது ஆச்ரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களில் ஸ்திரமாக இருப்பதையும், **यमानुषक्ति**-யமங்களில் ஈடுபாட்டையும், **नियमानुवृत्तिं**-நியமங்களை அனுஸரிப்பதையும், **चित्तप्रसादाय**-மனம் தெளிவடையும் பொருட்டாக, **तज्ज्ञाः**-அதை அறிந்தவர்கள், **वदन्ति**-சொல்கிருர்கள்.

*சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களுடைய அன்னம் (அல்லது சாஸ்திரத்தில் தடுக்கப்படாமல் விஹிதமான அன்னம்), ஈசுவரனை பூஜிப்பது, பெரியோர்களை ஸேவிப்பது, புண்ணிய தீர்த்தங்களுக்குப் போய்வருவது, தன்னுடைய ஆசிரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களை விடாமல் எப்போதும் அனுஷ்டிப்பது முன் கூறப்பட்ட யமங்களை அனுஷ்டிப்பதில் பிடிமானம், நியமங்களை அனுஸரிப்பது, இவையெல்லாம் மனஸின் தெளிவிற்கு ஸாதனங்கள் என்று இவ்விஷயம் அறிந்தவர்கள் சொல்கிருர்கள்.* (368)

**कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनाम् ।**
**पूतिपर्युषितादीनां त्यागः सत्त्वाय कल्पते ॥ ३६९ ॥**

*கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹிநாம் ।*
*பூதிபர்யுஷிதாதீநாம் த்யாக: ஸத்வாய கல்பதே ॥*

**कटु**-அதிக கசப்பு, **अम्ल**-புளிப்பு, **लवण**-உப்பு, **अत्युष्ण**-அதிகச் சூடு, **तीक्ष्ण**-உரைப்பு, **रूक्ष**-பசையில்லாதது, **विदाहिनां**-காந்தலை உண்டு பண்ணுவது இவ்விதமான ஆஹாரங்களுடையவும், **पूतिपर्युषितादीनां**-துர்கந்தமுள்ளது நாள்பட்டது முதலியவைகளுடையவும், **त्यागः**-விட்டு விடுவது, **सत्त्वाय**-ஸத்வகுணம் ஏற்படுவதற்கு, **कल्पते**-தக்கதாகிறது.

*அதிகமான கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு, உரைப்பு, பசையில்லாமல் காய்ந்தது, எரிச்சலை யுண்டுபண்ணக்கூடியது இவ்விதமான ராஜஸ ஆஹாரங்களையும் அழுகினது, நாள்பட்டது முதலான தாமஸ ஆஹாரங்களையும் சாப்பிடாமலிருப்பவனுக்கு ஸத்வகுணம் விருத்தியாகும்.* (369)

**श्रुत्या सत्वपुराणानां सेवया सत्त्ववस्तुनः ।**
**अनुवृत्त्या च साधूनां सत्त्ववृत्तिः प्रजायते ॥ ३७० ॥**

*ச்ருத்யா ஸத்வபுராணானாம் ஸேவயா ஸத்வவஸ்துந: I*
*அநுவ்ருத்யா ச ஸாதூநாம் ஸத்வவ்ருத்தி: ப்ரஜாயதே II*

**सत्वपुराणानां**-ஸாத்விக புராணங்களை, **श्रुत्या**-கேட்பதாலும், **सत्ववस्तुनः**-ஸாத்விக வஸ்துவை, **सेवया**-உபயோகிப்பதாலும், **साधूनां अनुवृत्त्या च**-நல்லோர்களை அநுஸரித்து நடப்பதாலும், **सत्ववृत्तिः**-ஸாத்விகமான எண்ணம், **प्रजायते**-உண்டாகிறது.

ஸாத்விகமான புராணங்களைக் கேட்பதினாலும், ஸாத்விகமான வஸ்துக்களை உபயோகிப்பதினாலும், ஸாதுக்களை அனுஸரித்து நடப்பதினாலும், மனதில் ஸாத்விகமான விருத்தி (எண்ணம்) உண்டாகிறது. (370)

**यस्य चित्तं निर्विषयं हृदयं यस्य शीतलम् ।**
**तस्य मित्रं जगत्सर्वं तस्य मुक्तिः करस्थिता ॥ ३७१ ॥**

*யஸ்ய சித்தம் நிர்விஷயம் ஹ்ருதயம் யஸ்ய சீதளம் I*
*தஸ்ய மித்ரம் ஜகத் ஸர்வம் தஸ்ய முக்தி: கரஸ்திதா II*

**यस्य**-எவனுடைய, **चित्तं**-மனது, **निर्विषयं**-விஷயசிந்தையற்று இருக்கிறதோ, **यस्य**-எவனுடைய, **हृदयं**-மனம், **शीतलं**-குளிர்ந்திருக்கிறதோ, **तस्य**-அவனுக்கு, **सर्वं जगत्**-உலகமெல்லாம், **मित्रं**-நட்புற்று இருக்கும், **तस्य**-அவனுக்கு, **मुक्तिः**-மோக்ஷம், **करस्थिता**-கையிலேயே இருக்கிறது.

எவன் மனது உலக விஷயங்களில் ஆசை கொள்ளாமல் அதைச் சிந்திக்காமல் இருக்கிறதோ. மனதில் காமக்ரோதாதிகளால் தாபம் ஏற்படாமல் குளிர்ந்து இருக்கிறதோ அவனை யாவரும் நேசிப்பார்கள். அவனுக்கு நிச்சயம் முக்தி கிடைக்கும். (371)

**हितपरिमितभोजी नित्यमेकान्तसेवी**
**सकृदुचितहितोक्तिः स्वल्पनिद्राविहारः ।**
**अनुनियमनशीलो यो भजत्युक्तकाले**
**स लभत इह शीघ्रं साधु चित्तप्रसादम् ॥ ३७२ ॥**

ஹிதபரிமிதபோஜீ நித்யமேகாந்தஸேவீ
ஸக்ருதுசிதஹிதோக்தி: ஸ்வல்பநித்ராவிஹார: ।
அநுநியமநஶீலோ யோ பஜத்யுக்தகாலே
ஸ லபத இஹ ஶீக்ரம் ஸாது சித்தப்ரஸாதம் ॥

**हितपरिमितभोजी**-நன்மை பயப்பதும் அளவுக்குட்பட்டதாயுமுள்ள உணவை சாப்பிடுகிறவனும், **नित्यं**-எப்பொழுதும், **एकान्तसेवी**-தனிமையான இடத்திலே இருக்கிறவனும், **सकृत्**-ஒரே தடவை, **उचितहितोक्तिः**-யோக்யமாயும் ஹிதமாயும் உள்ள வார்த்தைகளைப் பேசுகிறவனும், **स्वल्पनिद्राविहारः**-கொஞ்சமான தூக்கமும் ஸஞ்சாரமும் உள்ளவனும், **अनुनियमनशीलः**-சாஸ்திர விதிகளை அநுஸரித்துக் கட்டுப்படும் ஸ்வபாவமுள்ளவனுமிருந்து, **यः**-எவன், **उक्तकाले**-குறிப்பிட்ட காலத்தில், **भजति**-ஸேவிக்கிறானோ, **सः**-அவன், **इह**-இங்கு, **शीघ्रं**-விரைவில், **साधु**-நன்கு, **चित्तप्रसादं**-மனத்தெளிவை, **लभते**-அடைகிறான்.

*சரீரத்திற்கும் மனதிற்கும் ஹிதத்தைத்தரும் உணவை வைத்ய சாஸ்திரத்தில் கூறப்பட்ட அளவுப்படி சாப்பிடவேண்டும் எப்பொழுதும் தனிமையாக இருக்க வேண்டும். பிறருக்கு ஹிதமாயும் பேசத்தக்கதாயும் உள்ள வார்த்தைகளை பேச வேண்டும். அதையும் வீணாகத்திருப்பித்திருப்பிக் கூறாமல் அவசியமானதை மிதமாகப் பேசவேண்டும். அதிகத்தூக்கமும் அதிக ஸஞ்சாரமும் கூடாது. தன் மனதையும் புலன்களையும் கட்டுப்படுத்திக் கொண்டு உரியகாலத்தில் (காலம்தவறாமல்) தன் கடமைகளைச்செய்து வரவேண்டும். இவ்வாறு நடந்து வருகிறவனுக்கு வெகு சீக்கிரத்தில் நன்றாக மனம் தெளிவடையும்.* (372)

चित्तप्रसादेन विनाऽवगन्तुं
बन्धं न शक्नोति परात्मतत्त्वम् ।
तत्त्वावगत्या तु विना विमुक्ति-
र्न सिध्यति ब्रह्मसहस्रकोटिषु ॥ ३७३ ॥

சித்தப்ரஸாதேந விநாऽவகந்தும்
பந்தம் ந ஶக்நோதி பராத்மதத்வம் ।

*தத்வாவகத்யா து விநா விமுக்தி:*
*ந ஸித்யதி ப்ரஹ்மஸஹஸ்ரகோடிஷு ॥*

**चित्तप्रसादेन विना**–மனத்தெளிவு இல்லாமல், **बन्धं**–பந்தத்தை ? **परात्मतत्त्वं**–பரமாத்ம தத்வத்தை, **अवगन्तुं**–அறிவதற்கு, **न शक्नोति**–ஸமர்த்தனாகமாட்டான். **तत्त्वावगत्या विना तु**–தத்வஞானம் இல்லாமல், **ब्रह्मसहस्रकोटिषु**–ஆயிரம்கோடி ப்ரஹ்ம கல்பங்களிலும், **विमुक्तिः**–மோக்ஷம், **न सिध्यति**–கிடைக்காது.

*சித்தத்தின் தெளிவு இல்லாமல் பந்தத்தை அறியவோ (?) உத்கிருஷ்டமான ஆத்மாவின் தத்வத்தை அறியவோ முடியாது. தத்வம் அறியாமலோ ஆயிரம் கோடிக்கணக்கான பிரஹ்மாக்களின் காலத்திலும் மோக்ஷம் ஸித்திக்காது. (373)*

**मनःप्रसा(मा)दः पुरुषस्य बन्धो**
**मनःप्रसादो भवबन्धमुक्तिः ।**
**मनःप्रसादाधिगमाय तस्मा-**
**न्मनोनिरासं विदधीत विद्वान् ॥ ३७४ ॥**

*மந:ப்ரஸா(மா)த: புருஷஸ்ய பந்தோ*
*மந:ப்ரஸாதோ பவபந்தமுக்தி: ।*
*மந:ப்ரஸாதாதிகமாய தஸ்மாத்*
*மநோநிராஸம் விததீத வித்வான் ॥*

**मनःप्रमादः**–மனதின் கவனமின்மை, **पुरुषस्य**–மனிதனுக்கு, **बन्धः**–பந்தம், **मनःप्रसादः**–மனதின் தெளிவு, **भवबन्धमुक्तिः**–ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை, **तस्मात्**–ஆகையால், **विद्वान्**–அறிவுள்ளவன், **मनःप्रसादाधिगमाय**–மனம் தெளிவடைவதற்காக, **मनोनिरासं विदधीत**–மனதில் விஷயசிந்தனத்தை விலக்க வேண்டும்.

*மனஸின் கவனமின்மை தான் மனிதனுக்கு பந்தத்தின் காரணம். மனஸின் தெளிவே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலைக்கு ஸாதனம். ஆகையால் மனஸு தெளிவாகவேண்டும். அதற்காக வித்வானாயிருப்பவன் மனஸிலுள்ள தோஷங்களையெல்லாம் விலக்க வேண்டும். (374)*

*(அ) லிங்கசரீரம் என்ற ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய விக்ஞானமய கோசம் மனோமய கோசம் இவ்விரண்டையும் இது வரை வர்ணித்து விட்டு அதில் அடங்கிய இன்னொரு அம்சமாகிய பிராணமய கோசத்தை வர்ணிப்பதற்காக பிராண-கர்மேந்த்ரிய ஸிருஷ்டியைக் கூறுகிறார் :—*

**पञ्चानामेव भूतानां रजोंशेभ्योऽभवन् क्रमात् ।**
**वाक्पाणिपादपायूपस्थानि कर्मेन्द्रियाण्यनु ॥ ३७५ ॥**

*பஞ்சாநாமேவ பூதாநாம் ரஜோம்ஸேப்யோऽபவன் க்ரமாத் ।*
*வாக்பாணிபாதபாயூபஸ்த்தானி கர்மேந்த்ரியாண்யநு ॥*

**पञ्चानां भूतानामेव**-ஐந்து பூதங்களுடையவே, **रजोंशेभ्यः**-ரஜோ குணம்சங்களிலிருந்து, **अनुक्रमात्**-வரிசையாக, **वाक्पाणिपादपायूपस्थानि**-வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற, **कर्मेन्द्रियाणि**-கர்மேந்திரியங்கள், **अभवन्**-உண்டாயின.

*முன்கூறப்பட்ட ஆகாசம் முதலான ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களுடைய ரஜோகுணத்தின் அம்சங்களிலிருந்து வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்கிற ஐந்து கர்மேந்திரியங்கள் வரிசையாக உண்டாயின.*

*[ஆகாச தன்மாத்திரையிலிருந்து வாக்கு, வாயு தன்மாத்திரையிலிருந்து கை, தேஜஸ் தன்மாத்திரையிலிருந்து கால், ஜல தன்மாத்திரையிலிருந்து உபஸ்தம், பிருத்வீ தன்மாத்திரையிலிருந்து பாயு, என்று தாத்பர்யம். இங்கேயும் கர்மேந்திரியங்கள் என்பது கை, கால், என்றெல்லாம் சொல்லப்படும் மாம்ஸ பிண்டங்கள் இல்லை பேசும் கருவி, எடுக்கும் கருவி, நகரும் கருவி, மலமோசனம் செய்யும் கருவி, ஜலமோசனம் செய்யும் கருவி, என்று எடுத்துக் கொள்ளவேண்டும். இந்திரியங்களோ அந்தக்கரணமோ ஸூக்ஷ்ம பூதங்களால் ஏற்பட்டிருக்கிறபடியால், நம் கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகக் கூடியவை யல்ல]*

**समस्तेभ्यो रजोंशेभ्यो व्योमादीनां क्रियात्मकाः ।**
**प्राणादयः समुत्पन्नाः पञ्चाप्यान्तरवायवः ॥ ३७६ ॥**

*ஸமஸ்தேப்யோ ரஜோம்சேப்யோ வ்யோமாதீநாம் க்ரியாத்மகா: ।*
*ப்ராணாதய: ஸமுத்பந்நா: பஞ்சாப்யாந்தரவாயவ: ।*

**व्योमादीनां**–ஆகாசம் முதலியவைகளுடைய, **समस्तेभ्यः रजोंशेभ्यः**–ரஜோகுணாம்சங்கள் எல்லாவற்றிலிருந்தும், **क्रियात्मकाः**–க்ரியா ஸ்வபாவமுள்ள, **प्राणादयः**–பிராணன் முதலான, **पञ्चापि आन्तरवायवः**–உள் வாயுக்கள் ஐந்தும், **समुत्पन्नाः**–உண்டாயின.

*ஆகாசம் முதலான ஐந்து பூதங்களுடையவும் ரஜோ அம்சங்கள் எல்லாம் சேர்ந்து விடுவதிலிருந்து உள்ளிருக்கும் வாயுக்களாகிய ஐந்து பிராணன்கள் உண்டாயின. இவை எப்பொழுதும் சலன ஸ்வபாவ முள்ளவை.* (376)

*(அ) இந்த பிராணன் முதலான ஐந்து உள்வாயுக்களின் பெயர்களேயும் அவைகளின் தனித்தனி வியாபாரங்களினால் அவ்வித பெயர்கள் ஏற்பட்டன என்பதையும் சொல்கிறார் :—*

**प्राणः प्राग्गमनेन स्यादपानोऽवाग्गमनेन च ।**
**व्यानस्तु विष्वग्गमनादुत्क्रान्त्योदान इष्यते ॥ ३७७ ॥**

**अशितान्नरसादीनां समीकरणधर्मतः ।**
**समान इत्यभिप्रेतो वायुर्यस्तेषु पञ्चमः ॥ ३७८ ॥**

*ப்ராண: ப்ராக்கமநேந ஸ்யாதபாநோऽவாக்கமநேந ச ।*
*வ்யாநஸ்து விஷ்வக்கமநாதுத்க்ராந்த்யோதாந இஷ்யதே ॥*

*அசிதாந்நரஸாதீநாம் ஸமீகரணதர்மத: ।*
*ஸமாந இத்யபிப்ரேதோ வாயுர் யஸ்தேஷு பஞ்சம: ॥*

**प्राग्गमनेन**–முன் (மேலே) செல்வதால், **प्राणः स्यात्**–பிராணனாகும், **अवाग्गमनेन च**–கீழே செல்வதால், **अपानः**–அபானன், **विष्वक्**–நாலாபக்கங்களிலும், **गमनात्**–செல்வதால், **व्यानः**–வியானன், **उत्क्रान्त्या**–மேலே கிளம்புவதால், **उदानः**–உதானனாக, **इष्यते**–கருதப்படுகிறது, **अशितान्नरसादीनां**–சாப்பிடப்பட்ட அன்னம் ரஸம் முதலியவைகளை, **समीकरणधर्मतः**–ஸமமாகச் செய்யும் காரியத்தால்,

**तेषु**–அவைகளில், **यः**–(எது), **पञ्चमः वायुः**–ஐந்தாவது வாயுவோ (அது) **समान इति**–ஸமானன் என்று, **अभिप्रेतः**–கருதப்பட்டது.

*முன்னால் செல்லுவதால் பிராணன் ஆகும். கீழே செல்வதால் அபானன். நாலாபக்கங்களும் செல்வதினால் வியானன். மேலே கிளம்புவதினால் உதானன் என்று கருதப்படுகிறது. சாப்பிடப் பட்ட அன்னம் ரஸம் முதலானவைகளை எல்லா உறுப்புக்களுக்கும் பங்கிட்டு ஸமமாகச் செய்வதினால் ஸமானன் என்று எண்ணப் படுகிறது.* (377-378)

**क्रियैव दृश्यते प्रायः प्राणकर्मेन्द्रियेष्वलम् ।**
**ततस्तेषां रजोंशेभ्यो जनिरङ्गीकृता बुधैः ॥३७९॥**

*க்ரியைவ த்ருச்யதே ப்ராய: ப்ராணகர்மேந்த்ரியேஷ்வலம்।*
*ததஸ்தேஷாம் ரஜோம்சேப்யோ ஜநிரங்கீக்ருதா புதை:॥*

**प्रायः**–அநேகமாக, **प्राणकर्मेन्द्रियेषु**–பிராணனிலும் கர்மேந்திரியங் களிலும், **अलं**–நன்கு, **क्रियैव**–செய்கையே, **दृश्यते**–காணப்படுகிறது, **ततः**–அதனால், **तेषां**–அவைகளுக்கு, **रजोंशेभ्यः**–ரஜோகுணத்தின் அம்சங்களிலிருந்து, **जनिः**–உத்பத்தி, **बुधैः**–வித்வான்களால், **अङ्गीकृता**–ஒப்புக்கொள்ளப்பட்டது.

*பிராணன்களிலும் கர்மேந்திரியங்களிலும் செய்கையே நன்றாகக் காணப்படுகிறது. ஆகையினால் அவைகள் ஸூக்ஷ்ம பூதங்களின் ரஜஸ் அம்சங்களிலிருந்து உண்டானதாகச் சொல்லப் படுகிறது.* (379)

**राजसीं तु क्रियाशक्तिं तमःशक्तिं जडात्मिकाम् ।**
**प्रकाशरूपिणीं सत्त्वशक्तिं प्राहुर्महर्षयः ॥ ३८० ॥**

*ராஜஸீம் து க்ரியாசக்திம் தம:சக்திம் ஜடாத்மிகாம்।*
*ப்ரகாசரூபிணீம் ஸத்வசக்திம் ப்ராஹுர் மஹர்ஷய:।*

**क्रियाशक्तिं**–க்ரியாசக்தியை, **राजसीं**–ரஜோகுணத்தைச்சேர்ந்த தாகவும், **तमःशक्तिं**–தமோகுணத்தின் சக்தியை, **जडात्मिकां**–ஜடஸ்வ ரூபமாகவும், **सत्त्वशक्तिं**–ஸத்வகுணத்தின் சக்தியை, **प्रकाशरूपिणीं**–ப்ரகாசஸ்வரூபமாகவும், **महर्षयः**–மஹரிஷிகள், **प्राहुः**–சொல்கிறார்கள்.

ரஜோகுணத்தின் சக்தி கிரியை, தமோகுணத்தின் சக்தி ஜாட்யம், ஸத்வகுணத்தின் சக்தி ப்ரகாசம் என்று மஹரிஷிகள் கூறுகிறார்கள் (380)

**एते प्राणादयः पञ्च पञ्चकर्मेन्द्रियैः सह ।
भवेत्प्राणमयः कोशः स्थूलो येनैव चेष्टते ॥ ३८१ ॥**

ஏதே ப்ராணாதய: பஞ்ச பஞ்சகர்மேந்த்ரியை: ஸஹ ।
பவேத் ப்ராணமய: கோஶ: ஸ்தூலோ யேனைவ
சேஷ்டதே ॥

**पञ्चकर्मेन्द्रियैः सह**–ஐந்துகர்மேந்திரியங்களுடன்கூட, **एते**–இந்த **प्राणादयः पञ्च**–பிராணன் முதலானவைகள் ஐந்தும், **प्राणमयः कोशः**–பிராணமயகோசமாக, **भवेत्**–ஆகும், **येनैव**–எதனாலேயே, **स्थूलः**–ஸ்தூலதேஹம், **चेष्टते**–சேஷ்டிக்கிறதோ.

இந்த பிராணன் முதலான ஐந்தும் ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்தது பிராணமய கோசம் ஆகும். இதனால் தான் ஸ்தூல சரீரம் சேஷ்டிக்கிறது. (381)

**यद्यन्निष्पाद्यते कर्म पुण्यं वा पापमेव वा ।
वागादिभिश्च वपुषा तत्प्राणमयकर्तृकम् ॥ ३८२ ॥**

யத் யத் நிஷ்பாத்யதே கர்ம புண்யம் வா பாபமேவ வா ।
வாகாதிபிச்ச வபுஷா தத் ப்ராணமயகர்த்ருகம் ॥

**वागादिभिश्च**–வாக்கு முதலியவைகளாலும், **वपुषा**–சரீரத்தாலும், **पुण्यं वा**–புண்யமோ, **पापमेव वा**–பாபமோ, **यद्यत् कर्म**–எந்த் எந்த **कर्म**–காரியம், **निष्पाद्यते**–செய்யப்படுகிறதோ, **तत्**–அது, **प्राणमयकर्तृकम्**–பிராணமயகோசத்தை கர்த்தாவாக உடையது,

வாக் முதலியவைகளாலும் சரீரத்தாலும் செய்யப்படும் புண்யம், பாபம் முதலான செய்கைகளெல்லாம் பிராணமய கோசத்தின் காரியமாகும். (382)

**वायुनोच्चालितो वृक्षो नानारूपेण चेष्टते ।
तस्मिन्विनिश्चले सोऽपि निश्चलः स्याद्यथा तथा ॥ ३८३ ॥**

प्राणकर्मेन्द्रियैर्देहः प्रेर्यमाणः प्रवर्तते ।
नानाक्रियासु सर्वत्र विहिताविहितादिषु ॥ ३८४ ॥

வாயுனோச்சாலிதோ வ்ருக்ஷோ நாநாரூபேண சேஷ்டதே ।
தஸ்மின் விநிச்சலே ஸோऽபி நிச்சல: ஸ்யாத் யதா ததா ॥

ப்ராணகர்மேந்த்ரியைர் தேஹ: ப்ரேர்யமாண:ப்ரவர்ததே ।
நாநாக்ரியாஸு ஸர்வத்ர விஹிதாவிஹிதாதிஷு ॥

**यथा**–எப்படி, **वायुना**–காற்றினால், **उच्चालितः**–அசைக்கப்பட்ட, **वृक्षः**–மரம், **नानारूपेण**–பல விதமாக, **चेष्टते**–சேஷ்டிக்கிறதோ, **तस्मिन्** அது, **विनिश्चले**–அசையாமலிருந்தால், **सोऽपि**–அந்த மரமும், **निश्चलः**–அசைவற்றதாக, **स्यात्**–ஆகுமோ, **तथा**–அப்படி, **प्राणकर्मेन्द्रियैः**–பிராணனாலும் கர்மேந்திரியங்களாலும், **प्रेर्यमाणः**–ஏவப்படுகிற, **देहः**–சரீரமானது, **सर्वत्र**–எங்கும், **विहिताविहितादिषु**–விதிக்கப்பட்டதும் விதிக்கப்படாததுமான, **नानाक्रियासु**–பலவிதமான கர்மாக்களில், **प्रवर्तते**–ப்ரவர்த்திக்கிறது.

காற்று நன்றாக வீசும் பொழுது மரம் பலவிதமாக ஆடுகிறது. காற்று அடங்கி விட்டால் மரமும் அசைவதில்லை. இதுபோல் பிராணன்கள், கர்மேந்திரியங்கள் இவைகளால் தூண்டப்பட்டு சரீரம் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டதும் விதிக்கப்படாததும் தடுக்கப்பட்டதுமான பலவித செய்கைகளைச் செய்கிறது.

(383–384)

(அ) இதுவரை நிர்வசனம் செய்யப்பட்ட விக்ஞானமய கோசம், மனோமய கோசம், பிராணமய கோசம், இம்மூன்றும் சேர்ந்து லிங்க சரீரம் என்றும், ஸூக்ஷ்ம சரீரம் என்றும் முன்னால் சொல்லப்பட்டது. அவ்விதப் பெயர்கள் ஏற்பட்டதற்குக் காரணத்தை இங்கு குறிப்பிடுகிறார் :—

कोशत्रयं मिलित्वैतद्वपुः स्यात्सूक्ष्ममात्मनः ।
अतिसूक्ष्मतया लीनस्यात्मनो गमकत्वतः ।
लिङ्गमित्युच्यते स्थूलापेक्षया सूक्ष्ममिष्यते ॥ ३८५ ॥

கோஶத்ரயம் மிளித்வைதத் வபு: ஸ்யாத் ஸூக்ஷ்மமாத்மந:

அதிஸூக்ஷ்மதயா லீநஸ்யாத்மநோ கமகத்வத: ।
லிங்கமித்யுச்யதே ஸ்தூலாபேக்ஷயா ஸூக்ஷ்மமிஷ்யதே ॥

**एतत्**—இந்த, **कोशत्रयं**-மூன்று கோசங்களும், **मिलित्वा**—சேர்ந்து, **आत्मनः**—ஆத்மாவிற்கு, **सूक्ष्मं वपुः स्यात्** – ஸூக்ஷ்மசரீரமாகும், **अतिसूक्ष्मतया** – மிகவும் ஸூக்ஷ்மமாக இருப்பதால், **लीनस्य** – மறைந்துள்ள, **आत्मनः**-ஆத்மாவிற்கு, **गमकत्वतः**—ஞாபகமாக இருப்பதால், **लिङ्गमिति**—லிங்கசரீரமென்று, **उच्यते**— சொல்லப்படுகிறது, **स्थूलापेक्षया**-ஸ்தூல சரீரத்தையபேக்ஷித்து **सूक्ष्मं**—ஸூக்ஷ்மசரீரமாக, **इष्यते**—கருதப்படுகிறது.

விக்ஞானமயம், மனோமயம், பிராணமயம் என்ற மூன்று கோசங்களையும் சேர்த்தால் இது ஆத்மாவின் ஸூக்ஷ்ம சரீரமாகும். மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பதால் மறைந்திருக்கும் ஆத்மாவை காட்டிக்கொடுக்கும் காரணத்தினால் இது லிங்கம் (அடையாளம்) என்று சொல்லப்படுகிறது. இது ஸ்தூல சரீரத்தை யுத்தேசித்து ஸூக்ஷ்மம் என்றும் கருதப்படுகிறது.

(அ) முன் காரண சரீரத்தை ஸமஷ்டி, வியஷ்டி, என்று பிரித்துக் காட்டினது போல ஸூக்ஷ்ம சரீரத்திலும் அவ்விதப் பிரிவை எடுத்துச் சொல்கிறார் :—

सर्वं लिङ्गवपुर्जातमेकधीविषयत्वतः ।
समष्टिः स्यात् तरुगणः सामान्येन वनं यथा ॥ ३८६ ॥

ஸர்வம் லிங்கவபுர்ஜாதமேகதீவிஷயத்வத: ।
ஸமஷ்டி: ஸ்யாத் தருகண: ஸாமாந்யேந வநம் யதா ॥

**यथा**—எப்படி, **तरुगणः** – மரங்களின் கூட்டம், **सामान्येन** – பொதுவாக, **वनं**-காடு ஆகிறதோ (அப்படியே) **सर्वं लिङ्गवपुर्जातं**—எல்லா லிங்க சரீரங்களின் கூட்டமும், **एकधीविषयत्वतः**– ஒரே பாவனைக்கு விஷயமாவதால், **समष्टिः स्यात्**—ஸமஷ்டியாகும்.

மரங்களை தனித்தனியாக கவனிக்காமல் மொத்தமாகச் சேர்த்துப்பார்த்தால் அது காடு என்ற பெயரை அடைகிறது. இது போல் உலகிலுள்ள எல்லா லிங்க சரீரங்களையும் தனித்தனியாக கவனிக்காமல் மொத்தமாகச் சேர்த்துப்பார்த்தால் இதுவே ஸூக்ஷ்ம ஸமஷ்டியாகும் (386)

एतत्समष्ट्युपहितं चैतन्यं सफलं जगुः ।
हिरण्यगर्भः सूत्रात्मा प्राण इत्यपि पण्डिताः ॥ ३८७ ॥

ஏதத் ஸமஷ்ட்யுபஹிதம் சைதன்யம் ஸபலம் ஜகு: I
ஹிரண்யகர்ப்ப: ஸூத்ராத்மா ப்ராண இத்யபி பண்டிதா: ॥

एतत्समष्ट्युपहितं-இந்த லிங்கசரீரஸமஷ்டியை உபாதியாகக் கொண்டதும், सफलं-பிரதிபிம்பத்துடன் கூடியதுமான, चैतन्यं-சைதன்யத்தை, हिरण्यगर्भः-ஹிரண்யகர்ப்பர் என்றும், सूत्रात्मा-ஸூத்ராத்மா என்றும், प्राण इत्यपि-பிராணன் என்றும் पण्डिताः-வித்வான்கள், जगुः-சொல்லியுள்ளார்கள்.

இந்த எல்லா லிங்க சரீர ஸமஷ்டியை உபாதியாக உள்ள சைதன்யம் பிரதிபிம்பம் உள்பட ஹிரண்யகர்பர் என்றும் ஸூத்ராத்மா என்றும் பிராணன் என்றும் பண்டிதர்கள் சொல்கிறார்கள். (387)

हिरण्मये बुद्धिगर्भे प्रचकास्ति हिरण्यवत् ।
हिरण्यगर्भ इत्यस्य व्यपदेशस्ततो मतः ॥ ३८८ ॥

ஹிரண்மயே புத்திகர்ப்பே ப்ரசகாஸ்தி ஹிரண்யவத் I
ஹிரண்யகர்ப்ப இத்யஸ்ய வ்யபதேசஸ் ததோ மத: ॥

हिरण्मये-தங்கமயமான, बुद्धिगर्भे-புத்தியின் நடுவில், हिरण्यवत्-தங்கம்போல், प्रचकास्ति-விளங்குகிறான், ततः-ஆகையினால், अस्य-இவனுக்கு, हिरण्यगर्भ इति-ஹிரண்யகர்ப்பன் என்று, व्यपदेशः-வியவஹாரம், मतः-ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

தங்கம் மாதிரிப் பிரகாசிக்கிற புத்தியின் நடுவில் தங்கம் போல் நன்கு பிரகாசிக்கிறது என்பதினால் இவருக்கு ஹிரண்ய கர்பர் என்ற வியவ்ஹாரம் ஏற்பட்டிருக்கிறது. (388)

समस्तलिङ्गदेहेषु सूत्रवत् मणिपङ्क्तिषु ।
व्याप्य स्थितत्वात् सूत्रात्मा प्राणनात् प्राण उच्यते ॥ ३८९ ॥

ஸமஸ்தலிங்கதேஹேஷு ஸூத்ரவன் மணிபங்க்திஷு I
வ்யாப்ய ஸ்திதத்வாத் ஸூத்ராத்மா ப்ராணநாத்
ப்ராண உச்யதே ॥

**मणिपंक्तिषु**-ரத்ன வரிசைகளில், **सूत्रवत्**-நூல்போல், **समस्त-लिङ्गदेहेषु**-எல்லாலிங்கசரீரங்களிலும், **व्याप्य**-வியாபித்துக்கொண்டு, **स्थितत्वात्**-இருப்பதனால், **सूत्रात्मा**-ஸூத்ராத்மாவாகவும், **प्राणनात्**-ஜீவிக்கச்செய்வதால், **प्राणः**-பிராணனுகவும, **उच्यते**-சொல்லப்படுகிறார்.

பல ரத்னங்கள் கோர்க்கப்பட்ட ரத்னமாலையில் நூலானது எல்லா ரத்னங்களுள்ளும் ஊடுருவி இருக்கிறது. இந்த நூல் போலவே ஹிரண்யகர்ப்பன் எல்லா லிங்க சரீரங்களுக்குள்ளும் ஊடுருவி இருப்பதால் இவனுக்கு ஸூத்ராத்மா என்ற பெயரும் ஜீவிக்கும்படி செய்வதால் பிராணன் என்ற பெயரும் இவனுக்கு ஏற்பட்டிருக்கிறது. (389)

(அ) இவ்விதம் ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான ஹிரண்யகர்பரைப்பற்றிச் சொல்லி விட்டு, வியஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனை வர்ணிக்கிறார் :—

नैकधीविषयत्वेन लिङ्गं व्यष्टिर्भवत्यथ ॥ ३९० ॥

நைகதீ விஷயத்வேந லிங்கம் வ்யஷ்டிர் பவத்யத ॥

**नैकधीविषयत्वेन** – பல பாவனைகளுக்கு விஷயமாவதால் **लिङ्गं** – லிங்க சரீரம், **व्यष्टिः भवति** – வியஷ்டியாக ஆகிறது.

எல்லா லிங்க சரீரங்களையும் சேர்த்து மொத்தமாகப் பார்க்கும் பொழுது ஸமஷ்டி எனக்கூறப்பட்டது. அது ஒன்று தான். ஒவ்வொரு லிங்க சரீரத்தையும் தனித்தனியாகப் பார்க்கும் பொழுது அது வியஷ்டி யாகும் இது பல (390)

यदेतद् व्यष्ट्युपहितं चिदाभाससमन्वितम् ।
चैतन्यं तैजस इति निगदन्ति मनीषिणः ।
तेजोमयान्तःकरणोपाधित्वेनैष तैजसः ॥ ३९१ ॥

யதேதத் வ்யஷ்ட்யுபஹிதம் சிதாபாஸஸமன்விதம் ।
சைதன்யம் தைஜஸ இதி நிகதந்தி மநீஷிண: ।
தேஜோமயாந்தக்கரணோபாதித்வேநைஷ தைஜஸ: ॥

**व्यष्ट्युपहितं** –வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்தை உபாதியாகக்கொண்ட **चिदाभाससमन्वितं** – சித்ப்ரதிபிம்பத்துடன் கூடிய **यत् चैतन्यं** –

எந்த சைதன்யமோ, **एतत्** – இதை **तैजस इति** – தைஜஸன் என்று **मनीषिणः** – வித்வான்கள் **निगदन्ति**–சொல்கிறார்கள் **तेजोमयान्तः-करणोपाधित्वेन** – ஒளி மயமான அந்தக்கரணத்தை உபாதியாகக் கொண்டிருப்பதால் **एषः** – இவன் **तैजसः** – தைஜஸனாவான்.

*வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்துடன் கூடியதாய் சைதன்யத்தின் பிரதிபிம்பத்தோடு சேர்ந்ததாய் இருக்கும் சைதன்யத்தை தைஜஸன் என்று அறிவுள்ளவர்கள் சொல்கிறார்கள். பிரகாச மயமான அந்தக்கரணம் இவனுக்கு உபாதியாக இருப்பதால் இவனுக்கு தைஜஸன் என்றபெயர் ஏற்பட்டுள்ளது. (391)*

**स्थूलात् सूक्ष्मतया व्यष्टिः अस्य सूक्ष्मवपुर्मतम् ।**
**अस्य जागरसंस्कारमयत्वात् वपुरुच्यते ॥ ३९२ ॥**

*ஸ்தூலாத் ஸூக்ஷ்மதயா வ்யஷ்டிரஸ்ய ஸூக்ஷ்மவபுர் மதம் ।*
*அஸ்ய ஜாகரஸம்ஸ்காரமயத்வாத் வபுருச்யதே ॥*

**स्थूलात्** – ஸ்தூலத்தைக்காட்டிலும், **सूक्ष्मतया** – ஸூக்ஷ்மமாயிருப்பதால் **व्यष्टिः** – வியஷ்டி சரீரம் **अस्य** – இவனுடைய **सूक्ष्मवपुः**– ஸூக்ஷ்ம சரீரமாக **मतम्**-கருதப்பட்டிருக்கிறது. **जागरसंस्कारमयत्वात्**- ஜாக்ரத்காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களின் ஸம்ஸ்காரங்கள் நிறைந்திருப்பதால் **अस्य** – இவனுடைய **वपुः** – சரீரமாக **उच्यते** – சொல்லப்படுகிறது.

*இந்த வியஷ்டி சரீரம் ஸ்தூல சரீரத்தைவிட ஸூக்ஷ்மமாயிருப்பதினால் இது ஜீவனுடைய ஸூக்ஷ்ம சரீரம் என்று கருதப்படுகிறது. இந்த ஜீவனுக்கு ஜாக்கிரத் காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களின் ஸம்ஸ்காரங்கள் இதில் நிறைந்திருப்பதால் இது இவனுடைய சரீரம் என்று சொல்லப்படுகிறது. (392)*

**स्वप्ने जागरकालीनवासनापरिकल्पितान् ।**
**तैजसो विषयान् भुङ्क्ते सूक्ष्मार्थान् सूक्ष्मवृत्तिभिः ॥ ३९३ ॥**

*ஸ்வப்நே ஜாகரகாலீந வாஸநாபரிகல்பிதான் ।*
*தைஜஸோ விஷயான் புங்க்தே ஸூக்ஷ்மார்த்தான் ஸூக்ஷ்மவ்ருத்திபி: ॥*

**तैजसः** – தைஜஸன் **स्वप्ने** – ஸ்வப்னகாலத்தில் **सूक्ष्मवृत्तिभिः**– ஸூக்ஷ்மமான மனோவிருத்திகளால் **जागरकालीन** – ஜாக்ரத் காலத்தில் ஏற்பட்ட, **वासनापरिकल्पितान्** – ஸம்ஸ்காரங்களால் ஏற்பட்ட **सूक्ष्मार्थान्** – ஸூக்ஷ்மப் பொருளாகிற **विषयान्** – விஷயங்களை **भुंक्ते**– அனுபவிக்கிருன்.

*ஜாக்கிரத் காலத்திலுள்ள வாஸனைகளால் உண்டாக்கப்பட்ட ஸூக்ஷ்ம பதார்த்தங்களாகிற விஷயங்களை ஸ்வப்ன காலத்தில் தைஜஸன் ஸூக்ஷ்மமான விருத்திகளால் அனுபவிக்கிருன்.* (393)

*(அ) முன் ஸமஷ்டி காரண சரீரத்திற்கும் வியஷ்டி காரண சரீரத்திற்கும் வேற்றுமையில்லை யென்று சொன்னது போலவே, இந்த ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்திற்கும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்திற்கும் வாஸ்தவத்தில் பேதம் கிடையாது என்பதை சொல்கிருர் :—*

**समष्टेरपि च व्यष्टेः सामान्येनैव पूर्ववत् ।**
**अभेद एव ज्ञातव्यो जात्येकत्वे कुतो भिदा ॥ ३९४ ॥**

*ஸமஷ்டேரபி ச வ்யஷ்டே: ஸாமாந்யேநைவ பூர்வவத் ।*
*அபேத ஏவ ஞாதவ்யோ ஜாத்யேகத்வே குதோ பிதா ॥*

**समष्टेरपि** – ஸமஷ்டிக்கும் **व्यष्टेश्च** – வியஷ்டிக்கும் **पूर्ववत्** – முன்போல **सामान्येनैव** – ஸமானமாக இருக்கும் தன்மையாலேயே **अभेद एव**–அபேதம் தான் **ज्ञातव्यः**–அறியத்தக்கது. **जात्येकत्वे**– ஜாதி ஒன்ருக இருக்கும்பொழுது **कुतो भिदा**–எப்படி வேற்றுமை ஏற்படும் ?

*காரண சரீரம் போலவே ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரமும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரமும் ஸமானமாயிருப்பதால் ஸூக்ஷ்மத்தன்மை என்பது இரண்டிலும் ஒன்ருகவே இருப்பதால் இரண்டுக்கும் வேற்றுமை கிடையாது. இரண்டும் ஒன்று தான் இரண்டும் ஒரே இனத்தை சேர்ந்திருக்கையில் பேதம் எப்படி வரும் ?* (394)

**द्वयोरुपाध्योरेकत्वे तयोरप्यभिमानिनोः ।**
**सूत्रात्मनस्तैजसस्याप्यभेदः पूर्ववत् मतः ॥ ३९५ ॥**

த்வயோருபாத்யோரேகத்வே தயோரப்யபிமாநிநோ: ।
ஸூத்ராத்மநஸ்தைஜஸஸ்யாப்யபேத: பூர்வவன் மத: ॥

**द्वयोः उपाध्योः** – இரண்டு உபாதிகளுக்கும் **एकत्वे** – அபேதம் இருக்கும்பொழுது **तयोः अभिमानिनोरपि** – அவைகளின் அபிமானிகளுக்கும் (அதாவது) **सूत्रात्मनः** – ஸூத்ராத்மாவுக்கும் **तैजसस्यापि** – தைஜஸனுக்கும் **पूर्ववत्** – முன்போல **अभेदः** – அபேதமானது **मतः**– அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

முன் சுலோகத்தில் கூறிய நியாயப்படி ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரம், வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரம் என்ற இரு உபாதிகளும் ஒன்று தான் என்று தீர்மானமாகி விட்டப்படியால் காரண சரீராபிமானிகள்போல ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான ஸூத்ராத்மாவும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனும் ஒன்றுதான் இருவருக்கும் வேற்றுமை இல்லையென்பதும் ஸித்தமாகிறது (395)

(அ) இதுவரை ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டியை சொல்லி விட்டு இனி ஸ்தூல ஸ்ருஷ்டியை எடுத்துச் சொல்ல ஆரம்பிக்கிறார் :—

एवं सूक्ष्मप्रपञ्चस्य प्रकारः शास्त्रसंमतः ।
अथ स्थूलप्रपञ्चस्य प्रकारः कथ्यते शृणु ॥ ३९६ ॥

ஏவம் ஸூக்ஷ்மப்ரபஞ்சஸ்ய ப்ரகார: சாஸ்த்ர ஸம்மத: ।
அத ஸ்தூலப்ரபஞ்சஸ்ய ப்ரகார: கத்யதே ச்ருணு ॥

**एवं**–இவ்வாறு, **शास्त्रसंमतः**–சாஸ்திரங்களில் ஒப்புக்கொள்ளப் பட்ட, **सूक्ष्मप्रपञ्चस्य**-ஸூக்ஷ்மபிரபஞ்சத்தின், **प्रकारः**-உண்டாகும்விதம் (கூறப்பட்டது), **अथ**-இனி, **स्थूलप्रपञ्चस्य**–ஸ்தூல பிரபஞ்சம், **प्रकारः**–ஏற்படும்விதம், **कथ्यते**–சொல்லபபடுகிறது, **शृणु**–கேள்.

இவ்விதமாக ஸூக்ஷ்ம பிரபஞ்சம் ஏற்படும் முறை சாஸ்திரத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டபடி சொல்லப்பட்டது இனிமேல் ஸ்தூல பிரபஞ்சம் உண்டாகும் முறை சொல்லப்படுகிறது. கேள் (396)

(அ) முன்னால் ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து பஞ்சீகிருதமான ஸ்தூல பூதங்கள் ஏற்படுகின்றன என்று 338வது ச்லோகத்தில்

சுருக்கமாகச் சொல்லப்பட்டது அந்தப் பஞ்சீகரணம் என்ற முறை எப்படி என்பதை ஸ்ரீமத் ஆசார்யாரே இங்கு விவரிக்கிருர் :—

तान्येव सूक्ष्मभूतानि व्योमादीनि परस्परम् ।
पञ्चीकृतानि स्थूलानि भवन्ति शृणु तत्क्रमम् ॥ ३९७ ॥

தாந்யேவ ஸூக்ஷ்மபூதாநி வ்யோமாதீநி பரஸ்பரம் ।
பஞ்சீக்ருதாநி ஸ்தூலாநி பவந்தி ச்ருணு தத்க்ரமம் ॥

**व्योमादीनि**—ஆகாசம் முதலான, **तान्येव सूक्ष्मभूतानि**—அதே ஸூக்ஷ்ம பூதங்கள், **परस्परं**—ஒன்றுக்கொன்று (சேர்ந்து), **पञ्चीकृतानि**-பஞ்சீகரணமாக்கப்பட்டு, **स्थूलानि भवन्ति**-ஸ்தூல பூதங்களாக ஆகின்றன, **तत्क्रमं**—அந்த முறையை, **शृणु**—கேள்.

*அதே ஆகாசம் முதலான ஸூக்ஷ்ம பூதங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து பஞ்சீகிருதமாகி (ஐவகைப்பட்டு) ஸ்தூல பூதங்களாக ஆகின்றன அந்த முறையைக் கேள். (397)*

खादीनां भूतमेकैकं सममेव द्विधा द्विधा ।
विभज्य भागं तत्राद्यं त्यक्त्वा भागं द्वितीयकम् ॥ ३९८ ॥
चतुर्धा सुविभज्याथ तमेकैकं विनिक्षिपेत् ।
चतुर्णां प्रथमे भागे क्रमेण स्वार्धमन्तरा ॥ ३९९ ॥
ततो व्योमादिभूतानां भागाः पञ्च भवन्ति ते ।
स्वस्वार्धभागेनान्येभ्यः प्राप्तं भागचतुष्टयम् ।
संयोज्य स्थूलतां यान्ति व्योमादीनि यथाक्रमम् ॥ ४०० ॥

காதீநாம் பூதமேகைகம் ஸமமேவ த்விதா த்விதா ।
விபஜ்ய பாகம் தத்ராத்யம் த்யக்த்வா பாகம் த்விதீயகம் ॥
சதுர்தா ஸுவிபஜ்யாத தமேகைகம் விநிக்ஷிபேத் ।
சதுர்ணாம் ப்ரதமே பாகே க்ரமேண ஸ்வார்த்தமந்தரா ॥
ததோ வ்யோமாதிபூதாநாம் பாகா: பஞ்ச பவந்தி தே ।
ஸ்வஸ்வார்த்தபாகேநாந்யேப்ய: ப்ராப்தம் பாகசதுஷ்டயம் ।

*ஸம்யோஜ்ய ஸ்தூலதாம் யாந்தி வ்யோமாதீநி யதாக்ரமம் ॥*

**खादीनां**-ஆகாசம் முதலியவைகளில், **एकैकं भूतं**-ஒவ்வொரு பூதத்தையும், **सममेव**-ஸமமாகவே, **द्विधा द्विधा**-இரண்டு இரண்டு பாகமாக, **विभज्य**-பிரித்து, **तत्र**-அதில், **आद्यं भागं**-முதல் பாகத்தை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **द्वितीयकं भागं**-இரண்டாவது பாகத்தை, **चतुर्धा**-நான்காக, **सुविभज्य**-நன்கு பிரித்து, **अथ**-பிறகு, **तं एकैकं**-அந்த ஒவ்வொன்றையும், **स्वार्धमन्तरा**-தன் பாகத்தைத்தவிற, **चतुर्णां**-(மற்ற) நான்கு பூதங்களுடைய, **प्रथमे भागे**-முதல் பாகத்தில், **क्रमेण**-கிரமமாக, **विनिक्षिपेत्**-வைத்துவிடவேண்டும். **ततः**-அதனுல், **व्योमादिभूतानां**-ஆகாசம் முதலான பூதங்களுக்கு, **पञ्च भागाः**-ஐந்து பாகங்கள், **भवन्ति**-ஏற்படுகின்றன. **स्वस्वार्धभागेन**-தன் தன் பாதிபாகத்தோடு, **अन्येभ्यः**-மற்றவைகளிலிருந்து, **प्राप्तं**-வந்த, **भागचतुष्टयं**-நான்கு பாகங்களை, **संयोज्य**-சேர்த்து, **ते**-அந்த, **व्योमादीनि**-ஆகாசம் முதலியவைகள், **यथाक्रमं**-கிரமமாக, **स्थूलतां**-ஸ்தூலத்தன்மையை, **यान्ति**-அடைகின்றன.

*ஆகாசம் முதலானதுகளில் ஒவ்வொரு பூதமாக எடுத்துக் கொண்டு அதை சரிபாகமாகவே இரண்டு இரண்டாகப் பிரித்து விட்டு, அவ்விரண்டு பாகங்களில் முதலாவதை தனியாக வைத்து விட்டு, இரண்டாவது பாகத்தை நான்காகப் பிரித்து பிறகு அந்த நான்கு பாகங்களிலிருந்து ஒவ்வொன்ருக எடுத்து தனியாக வைக்கப்பட்டிருக்கும் முதலாவது பாதி பாகத்துடன், தன் பாதி நீங்கலாக, நன்குகலந்து விடவேண்டியது. அப்படிச் செய்வதினுல் ஆகாசம் முதலிய பூதங்கள் ஒவ்வொன்றிலுமே ஐந்து பாகங்கள் ஏற்பட்டு விடும். தன் தன் பாதிபாகத்துடன் மற்ற நான்கு பூதங்களிலிருந்து கிடைக்கும் நான்கு பாகங்களையும் நன்கு சேர்க்கும் போது ஆகாசம் முதலியவை கிரமமாக ஸ்தூலத்தன்மையை அடைகின்றன. உதாஹரணமாக ஆகாச பூதத்தை எடுத்துக் கொள்வோம். ஸூக்ஷ்மமான ஆகாசத்தை ஸமபாகமாக இரண்டாகப் பிரிக்கவேண்டும். ஒரு பாதியை தனியாக வைத்து விட்டு மற்ெருரு பாதியை நான்கு அரைக்கால் பாகங்களாக பிரித்து ஒரு அரைக்கால் பங்கை வாயுவிலும் இரண்டாவதை தேஜஸ்ஸிலும் மூன்ருவதை ஜலத்திலும், நான்காவது அரைக்கால் பாகத்தை பிருதிவியிலும் சேர்த்து விடவேண்டும். இவ்வாறே*

மற்றநான்கு பூதங்களிலும் செய்யவேண்டும். இதனல் ஆகாசத்தில் அதனுடைய அம்சம் அரைப்பங்கும் மற்ற வாயு முதலான நான்கு பூதங்களின் அரைக்கால் அரைக்கால் பங்கும் சேர்ந்து ஒரு முழு ஆகாசம் ஆகிறது. இதுபோலவே ஒவ்வொரு பூதத்திலும் அததன் பங்கு அரையும் மற்ற நான்கு பூதங்களின் 4 அரைக்கால் அம்சங்களும் சேர்ந்து அரையும் உள்ளது இவ்வாறு ஒவ்வொரு ஸூக்ஷ்ம பூதத்திலும் மற்ற பூதங்களின் அம்சங்கள் சேருவதால் அவை ஸ்தூல பூதங்களாகின்றன. மற்ற பூதங்களின் அம்சங்கள் இருந்தபோதிலும் அரைப்பங்கு இருப்பதைக்கொண்டு அந்தந்தப் பெயர் ஏற்பட்டுள்ளது. (398-400)

(அ) சாந்தோக்ய உபநிஷத்தில் தேஜஸ், அப்பு, அன்னம் என்று மூன்று பூதங்கள் தான் கண்டிருக்கிறது அம்மூன்றுக்குள் தான் கலப்பும், த்ரிவ்ருத்கரணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க ஆகாசத்தையும் வாயுவையும் சேர்த்துக் கொண்டு ஐந்து பூதங்களாக வைத்துக் கொண்டு பஞ்சீகரணம் என்று சொல்வது நியாயமாவென்று கேட்கக்கூடியதால், அதற்கு ஸமாதானத்தை இங்கே ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறார். வேதம், பிரத்யக்ஷம், அனுமானம் ஆகிய மூன்று பிரமாணங்களும் இந்த பஞ்சீகரண விஷயமாய் இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டுகிறார் :—

अमुष्य पञ्चीकरणस्याप्रामाण्यं न शङ्क्यताम् ।
उपलक्षणं अस्यापि तत् त्रिवृत्करणश्रुतिः ॥ ४०१ ॥

அமுஷ்ய பஞ்சீகரணஸ்யாப்ராமாண்யம் ந ஸ்ங்க்யதாம் ।
உபலக்ஷணமஸ்யாபி தத்த்ரிவ்ருத்கரணச்ருதி: ॥

**अमुष्य**–இந்த, **पञ्चीकरणस्य**–பஞ்சீகரணத்திற்கு, **अप्रामाण्यं**–பிரமாணமில்லாத்தன்மை, **न शंक्यतां**–கேட்கப்படவேண்டாம், **तत्त्रिवृत्करणश्रुतिः**–அந்த த்ரிவ்ருத்கரணச்ருதி, **अस्यापि**–இந்த பஞ்சீகரணத்திற்கும், **उपलक्षणं**–உபலக்ஷணம்.

இந்த பஞ்சீகரணம் என்பதற்கு பிரமாணமில்லை என்று நினைக்கக்கூடாது. அந்த த்ரிவ்ருத்கரணத்தைச் சொல்லும் சுருதியே இந்த பஞ்சீகரணத்திற்கு உபலக்ஷணமாகும். இதையும் அங்கு சேர்த்துக் கொள்ளவேண்டும். (401)

पञ्चानामपि भूतानां श्रूयतेऽन्यत्र संभवः ।
ततः प्रामाणिकं पञ्चीकरणं मन्यतां बुधैः ॥ ४०२ ॥

*பஞ்சாநாமபி பூதாநாம் ச்ரூயதே஽ந்யத்ர ஸம்பவ: ।*
*தத: ப்ராமாணிகம் பஞ்சீகரணம் மந்யதாம் புதை: ॥*

**अन्यत्र**—வேறு இடத்தில், **पञ्चानामपि भूतानां**-ஐந்து பூதங்களுக்கும், **संभवः**—உத்பத்தி, **श्रूयते**—கேட்கப்படுகிறது. **ततः**—ஆகையினால், **बुधैः**—அறிவாளிகளால், **पञ्चीकरणं**—பஞ்சீகரணமானது, **प्रामाणिकं**-பிரமாண ஸித்தமாக, **मन्यताम्**—எண்ணப்படட்டும்.

*சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்படாமல் போனாலும் தைத்திரீயம் முதலிய உபநிஷத்துக்களில் ஐந்து பூதங்களுக்குமே உத்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பஞ்சீகரணம் பிரமாண ஸித்தம் தான்.* (402)

(அ) *பஞ்சீகரணத்தை மறுபடியும் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறான் :—*

प्रत्यक्षादिविरोधः स्यात् अन्यथा क्रियते यदि ।
आकाशवाय्वोः धर्मस्तु वह्नयादौ उपलभ्यते ॥ ४०३ ॥

यथा तथाऽऽकाशवाय्वोः नाग्न्यादेर्धर्म ईक्ष्यते ।
अतोऽप्रामाणिकमिति न किंचिदपि चिन्त्यताम् ॥ ४०४ ॥

*ப்ரத்யக்ஷாதிவிரோத: ஸ்யாத் அந்யதா க்ரியதே யதி ।*
*ஆகாசவாய்வோர் தர்மஸ்து வஹ்ந்யாதாவுபலப்யதே ॥*

*யதா ததாऽऽகாச வாய்வோர் நாக்ந்யாதேர் தர்ம*
*ஈக்ஷ்யதே ।*
*அதோऽப்ராமாணிகமிதி ந கிஞ்சிதபி சிந்த்யதாம் ॥*

**अन्यथा**-வேறுவிதமாக, **यदि क्रियते**-செய்யப்படுமானால், **प्रत्यक्षादिविरोधः स्यात्**—பிரத்யக்ஷம் முதலானவற்றிற்கு விரோதம் ஏற்படும். **आकाशवाय्वोः**-ஆகாசத்தினுடையவும் வாயுவினுடையவும், **धर्मस्तु** தர்மமோவெனில், **वह्नयादौ**—தேஜஸ் முதலியவற்றில், **यथा उपलभ्यते**-எப்படி காணப்படுகிறதோ, **तथा**—அப்படி, **आकाशवाय्वोः**—ஆகாசத்

திலும், வாயுவிலும், **अग्न्याद्यैः**–தேஜஸ் முதலியவற்றின், **धर्मः**–தர்மம், **न दृश्यते** – காணப்படுகிறதில்லை, **अतः** – ஆகையால், **अप्रामाणिकं**–ப்ராமாணிகமல்ல, **इति**–என்று, **किंचिदपि**–கொஞ்சமும், **न चिन्त्यतां**–எண்ணவேண்டாம்.

*வேறுவிதமாக அதாவது பஞ்சீகரணம் செய்தால் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும் எப்படியெனில் ஆகாசம், வாயு இவைகளின் தர்மம் (இடம் தருவது, அசைவது என்பது) அக்னி முதலியவைகளில் காணப்படுகிறது போல் ஆகாசம். வாயு இவைகளில் அக்னி முதலானவைகளின் தர்மம் (உஷ்ண பிரகாசம், திரவமாயிருத்தல், வாஸனை இவைகள்) காணப்படவில்லை. இந்த காரணத்தைக்கொண்டு பஞ்சீகரணம் பிரமாணமற்றதென்று கொஞ்சமேனும் நினைக்சக் கூடாது.*

(403-404)

*(அ) ஸமாதானம் கூறுகிறார் :–*

खांशव्याप्तिश्च खव्याप्तिः विद्यते पावकादिषु ।
तेनोपलभ्यते शब्दः कारणस्यातिरेकतः ॥ ४०५ ॥

तथा नभस्वतो धर्मोऽप्यग्न्यादौ उपलभ्यते ।
न तथा विद्यते व्याप्तिः वन्ह्यादेः खनभस्वतोः ॥ ४०६ ॥

सूक्ष्मत्वात् अंशकव्याप्तेः तद्धर्मो नोपलभ्यते ।
कारणस्यानुरूपेण कार्यं सर्वत्र दृश्यते ॥ ४०७ ॥

तस्मात् प्रामाण्यमेष्टव्यं बुधैः पञ्चीकृतेरपि ॥ ४०८ ॥

*காம்சவ்யாப்திச்ச கவ்யாப்திர் வித்யதே பாவகாதிஷு ।*
*தேநோபலப்யதே சப்த: காரணஸ்யாதிரேகத: ॥*

*ததா நபஸ்வதோ தர்மோऽப்யக்ந்யாதாவுபலப்யதே ।*
*ந ததா வித்யதே வ்யாப்திர் வஹ்ந்யாதே: கநபஸ்வதோ: ॥*

*ஸூக்ஷ்மத்வாதம்சகவ்யாப்தேஸ் தத்தர்மோ நோபலப்யதே ।*
*காரணஸ்யாநுரூபேண கார்யம் ஸர்வத்ர த்ருச்யதே ॥*

தஸ்மாத் ப்ராமாண்யமேஷ்டவ்யம் புதை:
பஞ்சீக்ருதேரபி ll

**पावकादिषु**-தேஜஸ் முதலியவற்றில், **खांशव्याप्तिः**-ஆகாசத்தினுடைய அம்ச வியாப்தியும், **खव्याप्तिश्च**-ஆகாசத்தின் வியாப்தியும், **विद्यते**-இருக்கிறது, **तेन**-அதனால், **अतिरेकतः**-அதிகமாக, **कारणस्य**-காரணத்தின், **शब्दः**-சப்தம், **उपलभ्यते**-காணப்படுகிறது, **तथा**-அவ்விதம், **नभस्वतः**- வாயுவின், **धर्मोऽपि**-தர்மமும், **अग्न्यादौ**-தேஜஸ் முதலியவற்றில், **उपलभ्यते**-காணப்படுகிறது, **तथा**-அதுபோல, **खनभस्वतोः**-ஆகாசத்திலும் வாயுவிலும், **वह्न्यादेः**-தேஜஸ் முதலியவற்றின், **व्याप्तिः**-வியாப்தி, **न विद्यते**-இல்லை. **अंशकव्याप्तेः**-சிறு அம்சமான அரைக்கால் பாகத்தின் வியாப்தி, **सूक्ष्मत्वात्** -ஸூக்ஷ்மமாக இருப்பதால், **तद्धर्मः**-அவைகளின் தர்மம், **न उपलभ्यते**-காணப்படுகிறதில்லை **कारणस्य अनुरूपेण**-காரணத்திற்கு அநுரூபமாகத்தான், **सर्वत्र**-எங்கும், **कार्यं**-காரியம், **दृश्यते**-காணப்படுகிறது, **तस्मात्** -ஆகையால், **पञ्चीकृतेरपि**-பஞ்சீகரணத்திற்கும், **प्रामाण्यं**-ப்ராமாண்யமானது, **बुधैः**-வித்வான்களால், **एष्टव्यम्** -ஒப்புக்கொள்ளத்தக்கது.

ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து தேஜஸ், தேஜஸ்ஸிலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பிருதிவி என்ற கிரமத்தில் பஞ்சபூத ஸிருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. ஆகவே முன் உள்ள பூதங்கள் காரணமாகவும் பின் உள்ள பூதங்கள் காரியமாகவும் ஆகின்றன. காரண ஸ்வரூபத்திற்கே காரியத்தில் வியாப்தி உண்டு. பஞ்சீகரணப்ரக்ரியையால் தேஜஸ் முதலியவற்றில் ஆகாச வாயுக்களின் அம்சங்களுக்கும், காரணமாயிருப்பதால் ஆகாசவாயு ஸ்வரூபங்களுக்கும் வியாப்தி உண்டு. அதனால் ஆகாச வாயுக்களின் தர்மங்கள் தேஜஸ் முதலியவற்றில் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. தேஜஸ் முதலியவை ஆகாச வாயுக்களுக்கு காரணமாக இல்லாததால் ஆகாசவாயுக்களில் தேஜஸ் முதலான பூதங்களின் வியாப்தி கிடையாது. பஞ்சீகரணப்ரக்ரியையால் அம்ச வ்யாப்தி மட்டும் தான் உண்டு. ஆகாசவாயுக்களில் தேஜஸ் முதலியவற்றின் சிறுஅம்சம் அதாவது அரைக்கால் பாகம் இருந்த போதிலும் அது ஸூக்ஷ்மமானதால் ஆகாச வாயுக்களில் தேஜஸ் முதலியவற்றின் தர்மங்கள் ஸ்பஷ்டமாகத் தெரிவதில்லை காரண தர்மம் தான் காரியத்தில் காணப்படும். ஆகவே ப்ரத்யக்ஷ விரோதமில்லாததால் பஞ்சீகரணம் ப்ராமாணிகம் தான்.

(அ) இவ்விதம் பஞ்சீகரண பிரக்ரியை சாஸ்திர ஸம்மதம் தான் என்று காட்டிவிட்டு, பஞ்சீகிருதமான ஒவ்வொரு பூதத்திற்கும் ஏற்பட்ட குணங்களையும், அவைகளை கிரஹிக்கும் இந்திரியங்களையும், அவைகள் ஏன் அவைகளை கிரஹிக்கின்றன என்பதையும், அந்தந்த இந்திரியங்களை சக்தியுள்ளவைகளாகச் செய்கிற அதிஷ்டான தேவதைகள் யார் யார் என்றும் விஸ்தாரமாக வர்ணிக்கிறார்:—

अनेनोद्भूतगुणकं भूतं वक्ष्येऽवधारय ।
शब्दैकगुणं आकाशं शब्दस्पर्शगुणोऽनिलः ॥ ४०९ ॥
तेजः शब्दस्पर्शरूपैः गुणवत् कारणक्रमात् ।
आपः चतुर्गुणाः शब्दस्पर्शरूपरसैः क्रमात् ॥ ४१० ॥
एतैश्चतुर्भिः गन्धेन सह पञ्चगुणा मही ।

அநேநோத்பூதகுணகம் பூதம் வக்ஷ்யேऽவதாரய ।
ஶப்தைககுணமாகாஶம் ஶப்தஸ்பர்ஶகுணோऽநில: ॥
தேஜ: ஶப்தஸ்பர்ஶரூபைர் குணவத் காரண க்ரமாத் ।
ஆபச்சதுர்குணா: ஶப்தஸ்பர்ஶரூபரஸை: க்ரமாத் ॥
ஏதைச்சதுர்பிர் கந்தேந ஸஹ பஞ்சகுணா மஹீ ।

**अनेन**—இந்த பஞ்சீகரணத்தால், **उद्भूतगुणकं**—ஸ்பஷ்டமாக உண்டான குணங்களுள்ள, **भूतं**—பூதத்தைப்பற்றி, **वक्ष्ये**—சொல்கிறேன் **अवधारय**—கவனித்துக்கேள். **शब्दैकगुणं**—சப்தம் என்ற ஒரே குணமுள்ளது, **आकाशं**—ஆகாசம், **अनिलः**—வாயு, **शब्दस्पर्शगुणः**—சப்தம், ஸ்பர்சம் என்ற இருகுணங்களுள்ளது. **कारणक्रमात्**—காரணக்ரமத்தினால், **तेजः**—தேஜஸ், **शब्दस्पर्शरूपैः**—சப்தம், ஸ்பர்சம், ரூபம் இவைகளால், **गुणवत्**—(மூன்று) குணங்களுடன் கூடியது, **क्रमात्**—கிரமமாக, **आपः**—ஜலம், **शब्दस्पर्शरूपरसैः**—சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் இவைகளால், **चतुर्गुणाः**—மூன்று குணங்களுள்ளவை, **एतैः**—இந்த, **चतुर्भिः**—நான்கு குணங்களோடும், **गन्धेन**—வாசனையோடும், **सह**—கூட, **मही**—பூமி **पञ्चगुणा**—ஐந்து குணங்களுள்ளது.

இந்த பஞ்சீகரணத்தினால் ஸ்பஷ்டமாக உண்டான குணத்தோடு கூடிய பூதத்தைப்பற்றிச் சொல்கிறேன். கவனமாய்க்

கேள். சப்தமென்ற ஒரே குணமுள்ளது ஆகாசம். சப்தம், ஸ்பர்சம் என்ற இரண்டு குணங்களுடையது வாயு. காரணக் கிரமத்தையனுசரித்து சப்தம், ஸ்பர்சம், ரூபம் என்ற மூன்று குணங்களுடன் கூடியது தேஜஸ். சப்தம், ஸ்பர்சம், ரூபம் ரஸம் என்பவைகளால் ஜலம் நான்கு குணமுள்ளதாகிறது. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து குணங்களுள்ளதாக பிருத்வீ இருக்கிறது. (409-411)

आकाशांशतया श्रोत्रं शब्दं गृह्णाति तद्‌गुणम् ॥ ४११ ॥

त्वक् मारुतांशकतया स्पर्शं गृह्णाति तद्‌गुणम् ।
तेजोंशकतया चक्षुः रूपं गृह्णाति तद्‌गुणम् ॥ ४१२ ॥

अबंशकतया जिह्वा रसं गृह्णाति तद्‌गुणम् ।
भूम्यंशकतया घ्राणं गन्धं गृह्णाति तद्‌गुणम् ॥ ४१३ ॥

ஆகாசாம்சதயா ச்ரோத்ரம் சப்தம் க்ருஹ்ணாதி தத்குணம் ll

தவக் மாருதாம்சகதயா ஸ்பர்சம் க்ருஹ்ணாதி தத்குணம் l
தேஜோம்சகதயா சக்ஷு: ரூபம் க்ருஹ்ணாதி தத்குணம் ll

அபம்சகதயா ஜிஹ்வா ரஸம் க்ருஹ்ணாதி தத்குணம் l
பூம்யம்சகதயா க்ராணம் கந்தம் க்ருஹ்ணாதி தத்குணம் ll

**आकाशांशतया**-ஆகாசத்தின் அம்சமாக இருப்பதால், **श्रोत्रं**-காது **तद्‌गुणं**-அந்த ஆகாசத்தின் குணமான, **शब्दं**-சப்தத்தை, **गृह्णाति**-கிரஹிக்கிறது. **त्वक्**-த்வகிந்திரியம், **मारुतांशकतया**-வாயுவின் அம்சமானதால், **तद्‌गुणं** அந்த வாயுவின் குணமான, **स्पर्शं**-ஸ்பர்சத்தை, **गृह्णाति**-அறிகிறது, **तेजोंशकतया**-தேஜஸ்ஸின் அம்சமாக இருப்பதால், **चक्षुः**-கண், **तद्‌गुणं**-அந்த தேஜஸ்ஸின் குணமான, **रूपं**-ரூபத்தை, **गृह्णाति**-அறிகிறது. **अबंशकतया**-ஜலத்தின் அம்சமாக இருப்பதால், **जिह्वा**-நாக்கு, **तद्‌गुणं**-அந்த ஜலத்தின் குணமான, **रसं**-ரஸத்தை, **गृह्णाति**-கிரஹிக்கிறது. **भूम्यंशकतया**-பூமியின் அம்சமானதால், **घ्राणं**-கிராணேந்திரியம், **तद्‌गुणं**-அந்த பூமியின் குணமான, **गन्धं**-வாஸனையை, **गृह्णाति**-கிரஹிக்கிறது.

ஆகாச பூதத்திலிருந்து உண்டானது காது என்ற ச்ரோத்ரேந்திரியம். அதனுல் ச்ரோத்ரம் ஆகாசத்தின் குணமான சப்தத்தை அறிகிறது. வாயுவிலிருந்து உண்டாயிருப்பதால் த்வகிந்திரியம் வாயுவின் குணமான ஸ்பர்சத்தையும் தேஜஸ்ஸிலிருந்து உண்டான கண் தேஜோகுணமான ரூபத்தையும் ஜலத்திலிருந்து உண்டான ஜிஹ்வேந்திரியம் ஜலத்தின் குணமான ரஸத்தையும் பிருதிவியிலிருந்து உண்டான க்ராணேந்திரியம் பிருதிவியின் குணமான கந்தத்தையும் அறிகிறது. (411-413)

(அ) இவ்விதமாக ஞானேந்திரியங்களின் வியாபாரங்களை சொல்லிவிட்டு, அதே மாதிரி கர்மேந்திரியங்களின் வியாபாரங்களையும் வரிசையாகச் சொல்கிறுர் :—

करोति खांशकतया वाक् शब्दोच्चारणक्रियाम् ।<br>
वाय्वंशकतया पादौ गमनादिक्रियापरौ ॥ ४१४ ॥<br>
तेजोंशकतया पाणी वन्ह्याद्यर्चनतत्परौ ।<br>
जलांशकतया उपस्थो रेतोमूत्रविसर्गकृत् ॥ ४१५ ॥<br>
भूम्यंशकतया पायुः कठिनं मलमुत्सृजेत् ।

கரோதி காம்ஶகதயா வாக் ஶப்தோச்சாரணக்ரியாம் ।<br>
வாய்வம்ஶகதயா பாதௌ கமநாதிக்ரியாபரௌ ॥<br>
தேஜோம்ஶகதயா பாணீ வஹ்ந்யாத்யர்ச்சநதத்பரௌ ।<br>
ஜலாம்ஶகதயோபஸ்த்தோ ரேதோமூத்ர விஸர்கக்ருத் ॥<br>
பூம்யம்ஶகதயா பாயு: கடிநம் மலமுத்ஸ்ருஜேத் ।

**खांशकतया**—ஆகாசத்தின அம்சமானதால், **वाक्**—வாகிந்திரியம், **शब्दोच्चारणक्रियां**—சப்தங்களை உச்சரிக்கும் காரியத்தை, **करोति**—செய்கிறது. **वाय्वंशकतया**—காற்றின் அம்சமானதால, **पादौ**—கால்கள், **गमनादिक्रियापरौ**—செல்வது முதலான காரியத்தில் ஈடுபடுகின்றன. **तेजोंशकतया**—தேஜஸின் அமசமானதால், **पाणी**—கைகள், **वन्ह्याद्यर्चनतत्परौ**—அக்னி முதலியவைகளை பூஜிப்பதில் ஈடுபடுகின்றன. **जलांशकतया**—ஜலத்தின் அம்சமானதால், **उपस्थः**—உபஸ்த்தேந்திரியம், **रेतोमूत्रविसर्गकृत्**—ரேதஸ், மூத்ரம் இவைகளை வெளியிடும் காரியத்தைச் செய்கிறது. **भूम्यंशकतया**—பூமியின் அம்சமானதால், **पायुः**—பாயு இந்திரியம், **कठिनं**—கடினமான, **मलं** மலத்தை, **उत्सृजेत्**—வெளியே தள்ளும்.

ஆகாசத்தின் அம்சமாயிருப்பதால், வாகிந்திரியம் சப்தத்தை உச்சரிக்கிறது. வாயுவின் அம்சமாயிருப்பதால், கால்கள் (பாதமென்கிற இந்திரியம்) போகிறது முதலான கிரியைகளில் ஈடுபடுகின்றன. தேஜஸின் அம்சமாயிருப்பதால், கைகள் (பாணி என்கிற இந்திரியம்) அக்னி முதலான தேவதையை அர்ச்சிப்பதில் ஈடுபடுகின்றன. ஜலத்தின் அம்சமாயிருப்பதால், உபஸ்தேந்திரியம் ரேதஸ் மூத்திரம் இவைகளை வெளிவிடுவதென்பதை செய்கிறது. பிருதிவியின் அம்சமாயிருப்பதால், பாயு என்ற இந்திரியம் கடினமான மலத்தை வெளிவிடும். (414–416)

(அ) ஒவ்வொரு இந்திரியத்திற்கும் நான்கு பிரிவுகளுள்ள அந்தக்கரணத்திற்குமுள்ள அனுக்ராஹக தேவதைகளை வரிசையாகச் சொல்கிறார் :—

श्रोत्रस्य दैवतं दिक् स्यात्, त्वचो वायुः, दृशो रविः ॥४१६॥
जिह्वाया वरुणो दैवं, घ्राणस्य त्वश्विनावुभौ ।
वाचोऽग्निः, हस्तयोः इन्द्रः, पादयोस्तु त्रिविक्रमः ॥ ४१७ ॥
पायोः मृत्युः, उपस्थस्य त्वधिदैवं प्रजापतिः ।
मनसो दैवतं चन्द्रः, बुद्धेः दैवं बृहस्पतिः ॥ ४१८ ॥
रुद्रस्त्वहंकृतेः दैवं क्षेत्रज्ञः चित्तदैवतम् ।

ச்ரோத்ரஸ்ய தைவதம் திக் ஸ்யாத் த்வசோ வாயுர்
த்ருசோ ரவி: ॥
ஜிஹ்வாயா வருணோ தைவம் க்ராணஸ்ய
த்வச்விநாவுபௌ ।
வாசோऽக்நிர் ஹஸ்தயோரிந்த்ர: பாதயோஸ்து
த்ரிவிக்ரம: ॥
பாயோர் ம்ருத்யுருபஸ்த்தஸ்ய த்வதிதைவம் ப்ரஜாபதி: ।
மநஸோ தைவதம் சந்த்ரோ புத்தேர் தைவம்
ப்ருஹஸ்பதி: ॥
ருத்ரஸ்த்வஹங்க்ருதேர் தைவம் க்ஷேத்ரஜ்ஞச்
சித்ததைவதம் ।

**श्रोत्रस्य**–ச்ரோத்ரேந்திரியத்திற்கு, **दिक्**–திக்கானது, **दैवतं**–அனுக்ரஹம் செய்யும் தேவதையாக, **स्यात्** ஆகும். **त्वचः**–த்வகிந்திரியத்திற்கு **वायुः**–வாயுவும், **दृशः**–கண்ணுக்கு, **रविः**–ஸூரியனும், **जिह्वायाः**–ரஸனேந்திரியத்திற்கு, **वरुणः**–வருணனும், **दैवं**–தேவதை, **घ्राणस्य तु**–

க்ராணேந்திரியத்திற்கோவெனில், **उभौ अश्विनौ**-இரண்டு அச்வினிகளும் **वाचः**-வாகிந்திரியத்திற்கு, **अग्निः**-அக்னியும், **हस्तयोः**-கைகளுக்கு, **इन्द्रः**-இந்திரனும், **पादयोस्तु**-பாதங்களுக்கோவெனில், **त्रिविक्रमः**-த்ரிவிக்ரமரும், **पायोः**-பாயு இந்திரியத்திற்கு, **मृत्युः**-மிருத்யுவும், **उपस्थस्य तु**-உபஸ்த்தேந்திரியத்திற்கோவெனில், **प्रजापतिः**-ப்ரஜாபதியும், **अधिदैवं**-தேவதை, **मनसः**-மனதிற்கு, **चन्द्रः**-சந்திரன், **दैवतं**-தேவதை, **बुद्धेः**-புத்திக்கு, **बृहस्पतिः**-பிருஹஸ்பதி, **दैवं**-தேவதை, **अहंकृतेः**-அஹங்காரத்திற்கு, **रुद्रः**-ருத்ரர், **दैवं**-தேவதை, **चित्तदैवतं**-சித்தத்திற்கு தேவதை, **क्षेत्रज्ञः**-க்ஷேத்ரக்ஞர்.

*சுரோத்ரத்திற்கு தேவதை திக்தேவதையாகும், த்வக்குக்கு வாயு, சக்ஷுஸ்ஸிற்கு ஸூர்யன். ரஸனைக்கு தேவதை வருணன், கிராணத்திற்கு இரண்டு அசுவினி தேவர்கள். வாக்குக்கு அக்னி, ஹஸ்தங்களுக்கு இந்திரன், பாதங்களுக்கு திரிவிக்ரமர், பாயுவிற்கு மிருத்யு தேவதை, உபஸ்தத்திற்கு அதிதேவதை பிரஜாபதி, மனஸுக்கு தேவதை சந்திரன், புத்திக்கு தேவதை பிருஹஸ்பதி, அஹங்காரத்திற்கு ருத்ரர் தேவதை, சித்தத்திற்கு தேவதை க்ஷேத்திரக்ஞன்.* (416-419)

*(அ) இந்த தேவதைகள் எதிலிருந்து உண்டானார்கள் என்பதையும், அவர்கள் எங்கே இருந்து கொண்டு என்ன வேலை செய்கிறார்களென்பதையும், விவரிக்கிறார் :—*

दिगाद्याः देवताः सर्वाः खादिसत्त्वांशसंभवाः ॥ ४१९ ॥
संमिताः (संस्थिताः) इन्द्रियस्थानेषु इन्द्रियाणां समन्ततः ।
निगृह्णन्त्यनुगृह्णन्ति प्राणिकर्मानुरूपतः ॥ ४२० ॥

*திகாத்யா தேவதா: ஸர்வா: காதிஸத்வாம்ஸ ஸம்பவா:* ॥
*ஸம்மிதா இந்த்ரியஸ்தானேஷ்விந்த்ரியாணாம் ஸமந்தத:* ।
*நிக்ருஹ்ணந்தி அநுக்ருஹ்ணந்தி ப்ராணி கர்மாநுரூபத:* ॥

**दिगाद्याः**-திக் முதலான, **सर्वा देवताः**-எல்லா தேவதைகளும், **खादिसत्त्वांशसंभवाः**-ஆகாசம் முதலானவைகளின் ஸத்வகுணாம்சங்களிலிருந்து உண்டானவர்கள். (அவர்கள்) **इन्द्रियस्थानेषु**-இந்திரியங்களின் ஸ்தானங்களில், **इन्द्रियाणां समन्ततः**-இந்திரியங்களைச் சுற்றிலும் **संस्थिताः**-இருந்துகொண்டு, **प्राणिकर्मानुरूपतः**-பிராணிகளின் ...

களுக்குத்தக்கவாறு, **निगृह्णन्ति**-நிக்ரஹம் செய்கிறார்கள், **अनुगृह्णन्ति**-அனுக்ரஹம் செய்கிறார்கள்.

திக் முதலான தேவதைகள் எல்லாரும் கிரமமாக ஆகாசம் முதலான பூதங்களின் ஸத்வாம்சத்திலிருந்து ஏற்பட்டவர்கள். அவர்கள் அந்தந்த இந்திரியங்களுடைய ஸ்தானங்களில் அவைகளைச்சுற்றிலும் ஸாந்நித்யம் கொண்டு பிராணிகளுடைய கர்மாக்களை அனுஸரித்து, அதாவது புண்யம் செய்தவர்களுக்கு அநுக்ரஹமும், பாபம் செய்தவர்களுக்கு நிக்ரஹமும் செய்கிறார்கள். (419-420)

(அ) பின்னால் ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்கு விளக்கப் போகிறபடியால் இங்கு பிராணிகள் செய்யும் கர்மாக்களில் ஆத்மாவுக்கு கொஞ்சமும் ஸம்பந்தமில்லை யென்பதை மட்டும் காட்டுகிறார் :—

शरीरकरणग्रामप्राणाहमधिदेवताः ।
पञ्चैते हेतवः प्रोक्ताः निष्पत्तौ सर्वकर्मणाम् ॥ ४२१ ॥

ஶரீரகரணக்ராம ப்ராணாஹமதிதேவதா: ।
பஞ்சைதே ஹேதவ: ப்ரோக்தா நிஷ்பத்தௌ
ஸர்வகர்மணாம் ॥

**शरीर**-சரீரம், **करणग्राम**-இந்திரியங்களின் கூட்டம், **प्राणाहमधिदेवताः**-பிராணன், அஹங்காரம், அதிதேவதைகள், **एते पञ्च**-இந்த ஐந்தும், **सर्वकर्मणां निष्पत्तौ**-எல்லாக் கர்மாக்களும் நடப்பதற்கு, **हेतवः**-காரணங்களாக **प्रोक्ताः**-கூறப்பட்டுள்ளன.

சரீரம், இந்திரியங்களின் கூட்டம், பிராணன், அஹங்காரம், அதிதேவதைகள், இவ்வைந்தும் தான் எல்லாக் கர்மாக்களும் ஏற்படுவதற்கு காரணங்கள். [இதுபற்றி பகவத் கீதை 18வது அத்யாயத்தில் 14, 15 ஸ்லோகங்களில் கூறப்பட்டுள்ளது.] (421)

कर्मानुरूपेण गुणोदयो भवेत् गुणानुरूपेण मनःप्रवृत्तिः ।
मनोनुवृत्तैः उभयात्मकेन्द्रियैः निर्वर्त्यते पुण्यमपुण्यमत्र ॥

கர்மானுரூபேண குணோதயோ பவேத்
குணானுரூபேண மந:ப்ரவ்ருத்தி: ।
மனோऽநுவ்ருத்தைருபயாத்மகேந்த்ரியைர்
நிர்வர்த்யதே புண்யமபுண்யமத்ர ॥

**कर्मानुरूपेण**-கர்மாக்களை அனுஸரித்து, **गुणोदयः**-குணங்களின்

आविर्भावम्, **भवेत्**-உண்டாகும், **गुणानुरूपेण**-குணங்களையனுஸரித்து **मनःप्रवृत्तिः**-மனதின் ப்ரவிருத்தி ஏற்படும், **मनोनुवृत्तैः**-மனதை அனுஸரித்த, **उभयात्मकेन्द्रियैः**-இரண்டுவிதமான இந்த்ரியங்களால், **अत्र**-இங்கு, **पुण्यं**-புண்யமும், **अपुण्यं**-பாபமும், **निर्वर्त्यते**-நடத்தப்படுகிறது.

*முன்னால் செய்திருக்கும் புண்யபாப கர்மாக்களை யனுஸரித்து ஸத்வமோ, ரஜஸ்ஸோ, தமஸ்ஸோ. மேலிடுகின்றது. மேலிடும் குணத்தை யொட்டி ஸாத்விக-ராஜஸ-தாமஸ காரியங்களில் மனஸ் பிரவிருத்திக்கிறது. மனஸை அனுஸரித்தே நடக்கின்ற ஞானேந்திரியங்களாலும் கர்மேந்திரியங்களாலும் இங்கு புண்ணிய கர்மமோ அல்லது பாப கர்மமோ நிறைவேற்றப் படுகிறது* **(422)**

करोति विज्ञानमयोऽभिमानं कर्ताऽहमेवेति तदात्मना स्थितः।
आत्मा तु साक्षी न करोति किंचित् न कारयत्येव तटस्थवत् सदा ॥

*கரோதி விஜ்ஞாநமயோऽபிமாநம்*
*கர்த்தாऽஹமேவேதி ததாத்மநா ஸ்தித: ।*
*ஆத்மா து ஸாக்ஷீ ந கரோதி கிஞ்சித்*
*ந காரயத்யேவ தடஸ்தவத் ஸதா ॥*

**विज्ञानमयः**-விக்ஞானமயன், **तदात्मना स्थितः**-அந்த இந்த்ரிய மனோரூபமாக இருந்துகொண்டு, **अहमेव कर्ता**-நானே செய்கிறவன், **इति**-என்று, **अभिमानं करोति**-அபிமானம் கொள்கிறான், **आत्मा तु**-ஆத்மாவோ எனில், **किंचित्**-ஒன்றையும், **न करोति**-செய்கிறதில்லை, **न कारयति**-செய்விக்கிறதுமில்லை, **सदा**-எப்பொழுதும், **तटस्थवत्**-தடஸ்தன்போல, **साक्षी एव**-ஸாக்ஷியாகவே இருக்கிறான்.

*புத்தியாகிற விக்ஞானமயன் அந்த மனஸ், இந்திரியங்கள் ரூபமாக இருந்து கொண்டு, நானே கர்த்தா, செய்கிறவன் என்று அபிமானத்தைச் செய்கிறது. ஆத்மாவோ ஒன்றையும் செய்வது கிடையாது, செய்விக்கிறதுமில்லை. நதியில் போகும் பிரவாஹத்தைப் பார்த்துக் கொண்டு அதனுடன் ஸம்பந்தப் படாமல் கரையில் நிற்கிறவன் போல, ஆத்மா எப்பொழுதும் இந்திரியாதிகள் செய்யும் காரியங்களைப் பார்த்துக்கொண்டு ஸாக்ஷியாகவே இருக்கிறது.* **(423)**

द्रष्टा श्रोता वक्ता कर्ता भोक्ता भवत्यहंकारः।
स्वयमेतद्विकृतीनां साक्षी निर्लेप एवात्मा ॥ ४२४ ॥

த்ரஷ்டா ச்ரோதா வக்தா கர்த்தா போக்தா
பவத்யஹங்கார: I
ஸ்வயமேதத் விக்ருதீநாம் ஸாக்ஷீ நிர்லேப ஏவாத்மா II

**अहंकारः**-அஹங்காரமானது, **द्रष्टा**-பார்க்கிறதாகவும், **श्रोता**-கேட்கிறதாகவும், **वक्ता**-பேசுகிறதாகவும், **कर्ता**-செய்கிறதாகவும், **भोक्ता** - அனுபவிக்கிறதாகவும், **भवति** - இருக்கிறது. **आत्मा**- ஆத்மாவானது, **स्वयं**-தான், **एतद्विकृतीनां**-இந்த விகாரங்களை, **साक्षी**-நேரில் பார்க்கிறவனாய், **निर्लेप एव**-ஸம்பந்தப்படாமலே (இருக்கிறான்).

அஹங்காரம் தான் பார்க்கிறவனாகவும் கேட்கிறவனாகவும், பேசுகிறவனாகவும், செய்கிறவனாகவும், அனுபவிக்கிறவனாகவும், ஆகிறது ஆத்மா இவ்வித மாறுதல்களையெல்லாம் தான் பார்ப்பவனாக இருந்துகொண்டு எவ்விதப் பற்றுமில்லாமலே இருக்கிறது. (424)

आत्मनः साक्षिमात्रत्वं न कर्तृत्वं न भोक्तृता ।
रविवत् प्राणिभिर्लोके क्रियमाणेषु कर्मसु ॥ ४२५ ॥

ஆத்மந: ஸாக்ஷிமாத்ரத்வம் ந கர்த்ருத்வம் ந
போக்த்ருதா I
ரவிவத் ப்ராணிபிர் லோகே க்ரியமாணேஷு கர்மஸு II

**लोके**-உலகத்தில், **प्राणिभिः**-பிராணிகளால், **क्रियमाणेषु**-செய்யப்படுகிற, **कर्मसु**-கர்மாக்களில், **रविवत्** -ஸூரியனுக்குப்போல, **आत्मनः**-ஆத்மாவிற்கு, **साक्षिमात्रत्वं**-ஸாக்ஷியாக இருக்கும் தன்மை மட்டும் தான, **कर्तृत्वं**-செய்கிறவனாயிருக்கும் தன்மை, **न**-கிடையாது. **भोक्तृता**- அனுபவிக்கிறவனாயிருக்கும் தன்மை, **न**-கிடையாது.

உலகத்தில் பிராணிகளால் கர்மாக்கள் செய்யப்படும் போது ஸூர்யன் எவ்விதம் ஸாக்ஷியாக மாத்திரம் இருக்கிறாரோ, அப்படியே ஆத்மாவும் ஸாக்ஷியாக மாத்திரம் இருக்கிறார். செய்கிறவனாகவோ அனுபவிக்கிறவனாகவோ இருப்பதில்லை. (425)

न ह्यर्कः कुरुते कर्म न कारयति, जन्तवः ।
स्वस्वभावानुरोधेन वर्तन्ते स्वस्वकर्मसु ॥ ४२६ ॥

ந ஹ்யர்க: குருதே கர்ம ந காரயதி ஜந்தவ: I
ஸ்வஸ்வபாவாநுரோதேந வர்த்தந்தே ஸ்வஸ்வகர்மஸு II

**अर्कः**-ஸூரியன், **कर्म**-கர்மாவை, **नहि कुरुते**-செய்கிறதில்லை,

**न कारयति**–செய்விக்கிறதுமில்லே, **जन्तवः**–பிராணிகள், **स्वस्वभावानुरोधेन**–தன் தன் ஸ்வபாவததை அனுஸரிதது, **स्वस्वकर्मसु**–தன் தன கர்மாககளில், **वर्तन्ते**–ஈடுபடுகிருர்கள.

*காலேயில் ஸூர்ய உதயமானதும் பிராணிகள் தன் தன் ஸ்வபாவத்திற்குத் தக்கவாறு நல்ல கர்மாவையோ, கெட்ட கர்மாவையோ செய்கிருர்கள், ஸூர்யன் தான் ஒரு காரியத்தையும் செய்வதில்லே பிறரை கர்மாவைச் செய்யும்படி ஸூர்யன் தூண்டுவதுமில்லே. பிராணிகள் செய்யும் நல்ல காரியத்திலும் கெட்ட கர்மாவிலும் ஸூரியனுக்கு கொஞ்சமும் ஸம்பந்தமில்லே. ஆனுலும் ஸாக்ஷியாக எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு மட்டுமிருக்கிருன்.* (426)

**तथैव प्रत्यगात्माऽपि रविवत् निष्क्रियात्मना ।**
**उदासीनतयैवास्ते देहादीनां प्रवृत्तिषु ॥ ४२७ ॥**

*ததைவ ப்ரத்யகாத்மாபி ரவிவத் நிஷ்க்ரியாத்மநா ।*
*உதாஸீநதயைவாஸ்தே தேஹாதீநாம் ப்ரவ்ருத்திஷு ॥*

**तथैव**–அப்படியே, **प्रत्यगात्माऽपि**–பிரத்யகாதமாவும், **निष्क्रियात्मना**–செய்கையற்ற ஸ்வபாவத்துடன், **देहादीनां**–தேஹம் முதலியவற்றின், **प्रवृत्तिषु**–செய்கைகளில, **रविवत्**–ஸூரியன்போல, **उदासीनतयैव**–உதாஸீன தன்மையோடேயே, **आस्ते**–இருக்கிருன்.

*அதேமாதிரி உள்ளிருக்கும் ஆத்மாவும் எவ்வித கர்மாவுமற்ற ஸ்வபாவத்துடன் தேகம் முதலானவைகள் கர்மாக்களேச் செய்யும போது ஸூரியன் போல தான் உதாஸீனஞகவே அந்த கர்மாக்களில சிறிதும் ஸம்பந்தப்படாதவஞகவே இருக்கிருன்.* (427)

**अज्ञात्वैवं परं तत्त्वं मायामोहितचेतसः ।**
**स्वात्मन्यारोपयन्त्येतत् कर्तृत्वाद्यन्यगोचरम् ॥ ४२८ ॥**

*அக்ஞாத்வைவம் பரம் தத்வம் மாயாமோஹிதசேதஸ: ।*
*ஸ்வாத்மந்யாரோபயந்த்யேதத்*
*கர்த்ருத்வாத்யந்யகோசரம் ॥*

**एवं**–இவ்விதமாக, **परं तत्त्वं**–பரதத்வத்தை, **अज्ञात्वा**–அறிந்து கொள்ளாமல, **मायामोहितचेतसः**–மாயையினுல மோஹமடைந்த மன முள்ளவர்கள, **अन्यगोचरं**–மற்றதை (அநாத்மாவை)ச்சேர்ந்த, **एतत्**–இந்த, **कर्तृत्वादि**–கர்த்ருத்வம் முதலியவற்றை, **स्वात्मनि**–தனது ஆத்மாவில, **आरोपयन्ति**–ஆரோபம செய்கிருர்கள.

சரீரம் இந்திரியம் மனம் முதலியவைதான் எல்லாக் கர்மாக்களையும் செய்கிறது இதில் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் கிடையாது. அது ஸாக்ஷியாக, தடஸ்தமாக, உதாஸீனனுக இருக்கிறது. என்ற உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் மாயையால் மறைக்கப்பட்டவர்களாய் தனது ஆத்மாவையே கர்த்தாவாக எண்ணுகிருர்கள். (428)

आत्मस्वरूपमविचार्य विमूढबुद्धिः
आरोपयत्यखिलमेतत् अनात्मकार्यम् ।
स्वात्मन्यसङ्गचिति निष्क्रिय एव चन्द्रे
दूरस्थमेघकृतधावनवत् भ्रमेण ॥ ४२९ ॥

ஆத்மஸ்வரூபமவிசார்ய விமூடபுத்தி:
ஆரோபயத்யகிலமேததநாத்மகார்யம் ।
ஸ்வாத்மந்யஸங்கசிதி நிஷ்க்ரிய ஏவ சந்த்ரே
தூரஸ்த்தமேகக்ருததாவநவத் ப்ரமேண ॥

**विमूढबुद्धिः**-புத்தி மோஹம் கொண்டவன், **आत्मस्वरूपं**-ஆத்மாவின் ஸ்வரூபத்தை, **अविचार्य**-விசாரித்துத் தெரிந்துகொள்ளாமல், **अनात्मकार्यं**-அநாத்மாக்களின் காரியமான, **एतत् अखिलं**-இது எல்லாவற்றையும், **असङ्गचिति**-அஸங்கமாயும் சைதன்யஸ்வரூபமாயும், **निष्क्रिये**-க்ரியைகளற்றதுமான, **स्वात्मन्येव**-தனது ஆத்மாவிலேயே, **चन्द्रे**-சந்திரனிடம், **दूरस्थमेघकृतधावनवत्**-வெகுதூரத்திலிருக்கிற மேகங்களின் ஓட்டத்தைப்போல, **भ्रमेण**-ப்ராந்தியால், **आरोपयति**-ஆரோபம் செய்கிருன்.

ஆத்மாவின் உண்மை 'ஸ்வரூபத்தை குருவிடம் சாஸ்திரம் மூலம் விசாரித்துத் தெரிந்து கொள்ளாதவர்கள் புத்தியில் அக்ஞானம் குடிகொண்டிருப்பதால் ப்ரமத்தால் அநாத்மா செய்யும் காரியங்களை யெல்லாம் ஆத்மா செய்வதாக விபரீதமாக நினைக்கிருர்கள். உண்மையில் ஆத்மாவானது அஸங்கம் ஒன்றுடனும் சேராதது. கேவலசைதன்ய ஸ்வரூபம், நிஷ்க்ரியம் எவ்வித க்ரியையுமற்றது ஆகாசத்தில் உண்மையில் மேகம் தான் ஓடுகிறது. சந்திரன் அசைவதேயில்லை. இதைத் தெரிந்து கொள்ளாமல் ப்ராந்தியால் சந்திரன் ஓடுவதாக எண்ணுவதில்லையா? இதுபோலவே தான். (429)

